# 'அவரா லேசில் திருப்தியடைகிறவர்...'

'அதுவும் துணி விஷயத்திலா? அதெங்கே...' என்கிறார் பம்பாய்வாசியான ஸ்ரீமதி ஆர். ஆர். பிரபு. 'இப்போல்லாம் ஸன்லைட்டாலே வெளுக்கறேன் அவரோட துணிக எல்லாத்தையும். அவருக்கோ பெருமை! எனக்குந்தான். இருக்காதா? அமோகமா நுரைகட்டுது ஸன்லைட், தொட்டதெல்லாம் பளிச்சுன்னு வெளுப்பு. சலவைன்னு எனக்கு வேண்டியது ஸன்லைட்தான்!'

துணிகளைக் காப்பதற்குத் தூய, மென்மை வாய்ந்த ஸன்லைட் டைப் போல் வேறெதுவுமில்லை என்பதே குடும்ப மாதர்களின் துணிபு. அதுவே உங்களுக்கும் இனிது.

# ஸன்லைட்




ஸன்லைட் அருமை -- நம் துணிகளுக்கு நன்மை!

30-X52 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.



"வெங்கடேஷ் வஸ்திராலயாவுக்குச் செல்வதற்கு முன்பெல்லாம் துணி வாங்குவ தென்றாலே நான் பின் வாங்கிவிடுவேன்"



"அப்பொழுதெல்லாம் தேவைக்கு அதிகமான துணியையே எனக்கு விற்பனை செய்து வந்தார்கள்"



"அதோடு தரமான துணியைத்தான் வாங்குகிறேனா என்றும் எனக்கு நிச்சயம் கிடையாது"




"ஆனால் வெங்கடேஷ் வஸ்திராலயா வில் நேர்மையும், பணிவும், உயர்ரக பின்னி துணிகளையும் கண்டேன்."



"கடந்த எட்டு ஆண்டுகளாக என் குடும்பத்தினருக்கு வேண்டிய துணி மணிகளை வெங்கடேஷ் வஸ்திராலயா விலிருந்தேதான் வாங்குகிறேன்."

சென்னையிலேயே வெங்கடேஷ் வஸ்திராலயாவின் மூன்று ஷோரூம்கள் கண்ணியமான சேவைக்கு பெயர்பெற்றது. 8.000க்கு மேற்பட்ட நிரந்தர வாடிக்கையாளர்கள் எங்களை விஜயம் செய்வதே இதற்கு சான்று.

| | |
|---|---|
| இம்மாதத்திற்குகந்த **பின்னியின்** துணிகள்: | டிரில் (சாயம் தோய்த்ததும், காக்கியும்)<br>உயர் ரக ஷர்ட்டிங்குகள் :<br>ஸ்கூட்டர் , மாஸ்காட்<br>மேபேர் , கோல்ட் ஸ்டாண்டர்ட்<br>கான்ஸல்—ஒயிட் சாடின் டிரில்<br>கான்கறர் —போர்த்தியான வெள்ளை ஷர்ட் |



# வெங்கடேஷ் வஸ்திராலயா

ஸ்தாபிதம் : 1932

மைசூர் பாங்க் கட்டிடத்திலும் (மதராஸ் ஹைகோர்ட்டுக்கு எதிரில்)
மதராஸ் ஸென்ட்ரல் ஸ்டேஷனுக்கு எதிரிலும்

JWT/VV-1376அ.

திறமை வாய்ந்த கரங்கள் எஃகுச் சாதனங்களைக் கொண்டு இயங்கி வருகின்றன. நாம் உடுக்கும் உடையை இணைத்து, பிணைத்து, தைத்து உருவாக்கித் தருவது உருக்கு ஊசி. நவீன ஜவுளி ஆலைகளில் நுண்ணிய ஊசிமுதல் பிரும்மாண்டமான இயந்திரங்கள்வரை மிகப பல சாதனங்கள் உருக்கினால் சிருஷ்டிக்கப்பட்டவை. நம் நாட்டின் கோடிக் கணக்கான மக்கள் அணியும் ஆடைகளைத் தயாரித்துத் தர ஏராளமான அளவு எஃகுச் சாதனங்கள் தேவைப்படுகின்றன. சீக்கிரத்திலேயே நம் நாட்டில் சுபிட்சம் பெருகும். பாமரருக்கும் எளிதான விலைகளில் வெகு நேர்த்தியான ஜவுளி வகைகள் கிடைக்கும். உருக்கு உற்பத்தி நமக்குத் தேவையான அளவு பெருகுவதும் இத்துணையும் விரைவில் சாத்தியமாகும். அதற்கெனவே இஸ்கோ பணியாற்றி வருகிறது. அதிகப்படியாக எஃகு உற்பத்தி செய்து உங்கள் அனைவருக்குமே உதவ முழு மூச்சுடன் முயன்று வருகிறது. உங்களுக்கு செய்யும் சேவை நாட்டிற்குச் செய்யும் பெரும் பணியாகும். அதுவே எங்கள் பாக்கியமாகும்.

## உருக்கு உற்பத்தி பெருக உடை வசதியும் வளரும்



தி இந்தியன்
அயர்ன் &
ஸ்டீல்
கோ. லிட்.

INDIAN ISCO STEEL

# கல்கி பொருளடக்கம்

பிலவ, ஆடி 8 ✻ ஜூலை 23 1961



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 20 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 52

# வெள்ளம்! எங்கும் வெள்ளம்!

'பிலவத்தில் மாரி பீடை மிகும்' என்று பஞ்சாங்கத்தில், இவ்வருஷ பலனைப் பற்றிய பாட்டில் கூறியது உண்மையாகி விட்டது.

பம்பாய் ராஜ்யத்தில் மூதா என்ற நதி பெருக்கெடுத்துப் பூனா நகரை வெள்ளத்தில் ஆழ்த்தி விட்டது.

கிருஷ்ணா நதியில் பயங்கர வெள்ளம் வருகிறது, படகில் சென்றவர்கள் மூழ்கி விட்டனர் என்றெல்லாம் செய்திகள் வருகின்றன.

ஒரிஸ்ஸாவில் மகாநதி பெருக்கெடுத்துப் பல இன்னல்கள் விளைவித்து விட்டது.

கங்கையில் வெள்ளம் பெருகி வருவதைப் பார்த்துப் பாட்னா, கல்கத்தா நகர மக்கள் பீதியில் ஆழ்ந்திருப்பதாகப் பத்திரிகைகள் கூறுகின்றன.

அஸ்ஸாமில் பிரும்மபுத்ரா பெரு வெள்ளமாகக் கரை புரண்டு ஓடுகிறது. கேரளத்திலிருந்து அஸ்ஸாம் வரையில் எல்லா நதிகளிலும், மழையின் காரணமாகக் கரைகள் அறுபட்டு வெள்ளப் பெருக்கெடுத்து, பாலங்கள் உடைந்து, மக்கள் சொல்லொணாக் கஷ்டங்களுக்கு உள்ளாகி வருகின்றனர். இப்படியெங்கும் வெள்ளப் பெருக்கால் ஏற்படும் விளைவுகளைப் பார்ப்பவர்களுக்கு, ஜோசியம், ஜாதகம், எதிர்கால பலன் இவற்றில் நம்பிக்கை இல்லா விட்டாலும் ஏற்பட்டுவிடும் போலிருக்கிறது.

அதிலும் அன்னம் அளிக்கும் தஞ்சை-திருச்சி ஜில்லாக்களில் காவிரி வெள்ளத்தினால் மக்கள் படும் அவதிகளைப் படிக்கப் படிக்க நெஞ்சம் உருகுகிறது! கோயிலடியில் ஆயிரம் அடி அகலத்துக்கு ஏற்பட்ட உடைப்பை அடைக்க ராணுவத்தினர் எடுத்துக் கொண்ட முயற்சிகளுக்குப் பெருந்தடை ஏற்பட்டது என்று கேள்வியுற்றபோது துணுக்குறாதவர்கள் இல்லை. இந்நிலையில் மேட்டூர் அணையில் தாங்கக்கூடிய அளவுக்குமேல் தண்ணீர் வருகிறது, மைசூரில் கிருஷ்ணராஜசாகரம் திறந்து விடப்பட்டு விட்டது என்றெல்லாம் செய்திகள் படித்தபோதும் மெர்க்காராவில் இன்னும் பெருமழை பெய்யக் கூடும் என்ற வானிலை அறிக்கையைக் கேட்டபோதும் தமிழ்பேசும் நல்லுலகமெங்கும் இருப்பவர்கள் அனைவரும், திருச்சி தஞ்சை ஜில்லாவில் வசிக்கும் குடும்பங்கள் என்ன என்ன கஷ்டங்கள் அனுபவிக்க விருக்கின்றனவோ என்று ஏக்கமுற்றோம்.

வெள்ளம் வடிந்த பிறகு எத்தனை நன்செய் நிலங்கள் மணலடித்து மேடிட்டு, உடனடியாக விவசாயத்துக்குத் தகுதியற்றதாகப் போயிருக்குமோ என்றெல்லாம் கவலையில் ஆழ்ந்தோம். வெள்ளம் வந்து சூழ்ந்துகொண்டதால் மக்கள் படும் துயரக் கதைகளைக் கேட்டு நெஞ்சம் துடிப்பது ஒருபுறமிருக்க, வெள்ளம் வடிந்த பிறகு ஏற்படக் கூடிய நஷ்டங்களை நினைத்தும் வேதனையை யடைந்தோம்.

அந்தப் பகுதியைச் சுற்றிப் பார்க்கச் சென்ற மந்திரிகள், வெள்ளத்தினால் படிந்த வண்டல், பூமியைச் செழுமைப்படுத்தி, அடுத்த வெள்ளாமை மிக நன்றாக இருக்கும் என்று ஆறுதல் கூறுகிறார்கள். இது வீடு வாசல் இழந்து, துயரத்தில் ஆழ்ந்திருக்கும் மக்களை எவ்வளவு தூரம் சமாதானப்படுத்தும் என்பதைச் சொல்லுவதற்கில்லை.

நமக்கெல்லாம் அன்னம் அளிக்கும் சோழ நாட்டில் சேமித்து வைக்கப்பட்ட நெல் இந்தத் தண்ணீர்த் தேக்கத்தினால் எப்படியெல்லாம் சீர்கெட்டு இருக்கிறதோ,

தெரியவில்லை. அதனால் சோழ நாட்டுக்கே அரிசியும் நெல்லும் வேறு எங்கிருந்தாகிலும் கொண்டுதர உடனடியாகச் சர்க்கார் ஏற்பாடு செய்ய வேண்டியதாகுமோ என்னவோ தெரியவில்லை.

தஞ்சையின் குறுவை நெல் விளைச்சலிலே கேரள ராஜ்யம் வாழ்கிறது. இந்த வெள்ளத்தால் குறுவைச் சாகுபடி பாதிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே கேரள ராஜ்யத்துக்கும் மத்திய சர்க்கார் உணவு தான்யம் அளிக்க வேண்டியதாகும். பெரிய நதிகள் ஓடும் ராஜ்யங்கள் எல்லாம் அணைக்கட்டு வாய்க்கால் விஷயங்களில், பல்வேறு போட்டிகளும் சண்டைகளும் இட்டு வந்தன. இந்தப் போட்டிகளை ஆதரித்தும் தூண்டி விட்டும் சில அரசியல் வாதிகளும் பேசி வந்தார்கள். இவையெல்லாம் பைத்தியக்காரத்தனமென்று மேகநாதன் நிரூபித்துவிட்டான். மைசூர் ராஜ்யம் காவேரித் தண்ணீர் தனக்கே சொந்தம் என்பது போல் நேற்றுவரை, பிடிவாதம் பிடித்துச் சண்டை போட்டு வந்தது. இன்று தமிழ்நாடு 'வேண்டாம் வேண்டாம்' என்று அலறும் நிலையில், 'தண்ணீரை விட்டுத்தான் தீருவோம்' என்று மைசூர் கிருஷ்ணராஜசாகரத்தைத் திறந்து விட்டிருக்கிறது. எல்லாம் சேர்ந்து கோயிலடி உடைப்பை மராமத்து செய்வதற்கு வசதியில்லாமல் வெள்ளம் பெருக்கெடுத்திருக்கிறது.

இதுவெல்லாம் கேரளம், தமிழகம், மைசூர் கொண்ட தென்னாடு இயற்கையில் ஒரு நாடு என்று எடுத்துக் காட்டுகிறது. குறுகிய பதவி யாசையிலும் வோட்டு வியாபாரத்திலும் மூழ்கி நிற்கும் தலைவர்கள் காரணமாக மக்கள் பிரிந்து நின்று கஷ்டப்பட நேருகிறது என்ற உண்மையே இந்தத் துயர நிலையில் மனத்தில் வேகமாகப் பதிகிறது.

# அண்ணுதுரையின் அரிய உரை

மதுரையில் மிக விமரிசையாக நடைபெற்ற திராவிட முன்னேற்றக் கழக மகாநாட்டில் பேசிய திரு அண்ணுதுரை, உண்மை நிலையை அறிந்து எந்தப் பிரச்னை முதற்படியில் நிற்கிறது. எது பின்னுல் கவனிக்க வேண்டியது என்பதை யெல்லாம் விளக்கிப் பேசியிருப்பதை வரவேற்கிறோம்.

"சோஷலிஸம் என்கிற ஏமாற்றுப் பேச்சைக் கொண்டு மக்களை மயக்கி அதே சமயத்தில், பெரிய தொழில் அதிபர்களோடும் மிராசுதாரர்களோடும், அநீதியான சதிகள் செய்து கொண்டும் பர்மிட், லைசென்ஸ், கடன் வசதிகள், இன்னும் பல முறைகளைக் கையாண்டும், ஏழை மக்களைப் பணக்காரர்கள் பிழிந்து லாபம் சம்பாதிக்கச் செய்து, பணக்காரர்களை அண்டி வாழ்கிறது காங்கிரஸ் கட்சி. காங்கிரஸுக்கு வேண்டிய பணம் தேடித் தருகிறார்கள் பணக்காரர்கள். இத்தகைய கட்சிக்குப் பதவியும் ஆதிக்கமும் தந்தோமானுல் கம்யூனிஸ்ட் பாஸிஸ்ட் நாடுகளில் நடைபெற்று வரும் சர்வாதின ஆட்சி முறையைத்தான் இந்தியாவுக்கும் ஏற்படுத்துவதாகும்.

* * *

"காங்கிரஸ் ஆட்சிக்கு முற்றுப் புள்ளி போடவேண்டும் என்று கோரும் எல்லாக் கட்சியினரும் அதற்கு வேண்டிய வழிகளைக் கட்டாயம் தேட வேண்டும். இது அவர்கள் மக்களுக்குச் செய்ய வேண்டிய கடமை."

இவ்வாறு திரு அண்ணுதுரை மிகத் தெளிவாகப் பேசியிருக்கிருர்.

திரு அண்ணுதுரை சொல்வது போல் உடனடியாகச் செய்ய வேண்டியதைக் கருத்தில் வைத்து. இந்நிலையில் காங்கிரசுக்கு எதிராக உள்ள கட்சிகள், கொள்கைகள் மீது சண்டையும் சச்சரவும் போட்டுக் கொண்டிருந்து விடாமல் காங்கிரஸ் மீண்டும் பதவிக்கு வராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். எதிர்க் கட்சிகள், ஒன்றுடன் ஒன்று போட்டி போட்டுக் கொண்டு, வோட்டுக்களைச் சிதற அடித்து, காங்கிரஸ் வெற்றியடையச் செய்துவிடக் கூடாது. மூக்கோணப் போட்டி நாற்கோணப் போட்டிகள் தவிர்க்கப்பட வேண்டும். இதற்கு எதிர்க் கட்சிகள், தங்களுக்குள் பேச்சுவார்த்தை நடத்தி நல்ல முடிவுக்கு வர வேண்டும்.

நமது பிரதம ராணுவ தளபதியாக இருந்த ஜெனரல் கரியப்பா பம்பாயில் கூறியதைப் பாருங்கள்:

"காங்கிரஸின் ஏதேச்சாதிகாரப் போக்கைத் தடுக்க நாட்டிலுள்ள எதிர்க் கட்சிகள் எல்லாம் ஒன்றுபட்டு நிற்க வேண்டும். நாட்டிலுள்ள சின்னஞ்சிறு கட்சிகள் தன்னந்தனியாகக் காங்கிரஸை எதிர்க்கக்கூடிய பலமுடையவையல்ல. தங்கள் இந்தப் பலவீனத்தை மாற்றிக் கொள்ள, மற்ற எதிர்க் கட்சிகளுடன், கொஞ்சம் விட்டுக் கொடுத்து, ஒன்று சேர்ந்து காங்கிரஸுடன் போட்டியிட்டால்தான் காங்கிரஸைத் தோல்வியுறச் செய்ய முடியும். இல்லையேல் காங்கிரஸ் பல்லாண்டுகள் பதவியிலிருந்து

கொண்டேயிருக்கும்! அதனால் விழித்துக் கொள்ளுங்கள்" என்று எச்சரிக்கை செய்திருக்கிறார்.

டாக்டர் லோகியா - அவர் சோஷலிசக் கொள்கை கொண்டவர் - யாருடனும் சேரமாட்டார். ஆனால் அவர் ஒரிஸ்ஸா தேர்தலைப்பற்றி எழுதியுள்ள விமரிசனத்தில் மிகத் தெளிவாக ஒரு விஷயத்தைக் குறிப்பிடுகிறார்.

"இன்று அரசாங்க யந்திரமும், ஆலை முதலாளிகளும், காங்கிரஸ் கட்சியும் ஆகிய இம்மூன்றும் ஒரே மூர்த்தியாகிப் போய்விட்டது!" என்று கூறியிருக்கிறார்.

இதுதான் பேராபத்து. இதுதான் ஏதேச்சாதிகார சர்வாதினப் போக்கு. ஒரு கட்சியின் ஆட்சியே நிரந்தரமாகி விட வழி ஏற்பட்டுக்கொண்டு வருகிறது. ஒரு குக்கிராமத்திலுள்ள கட்சி அங்கத்தினர், ஆளும் கட்சியின் ஆதரவைப் பெற்று விட்டாரானால் அந்த ஊருக்கு யஜமானராகி விடுகிறார். இதுதான் நாட்டில் ஏற்பட்டு வரும் நிலை.

இதைத் தடுத்து நிறுத்த பலமான எதிர்க்கட்சி வேண்டும். பலமான ஓர் எதிர்க் கட்சி இல்லாதபோது, சிறு கட்சிகள் எல்லாம் சேர்ந்து, ஒரு தேர்தலில் காங்கிரஸைப் பதவியிலிருந்து இறக்கி விட்டால், நாட்டு மக்கள் வாயில்லாப் பூச்சிகளல்ல, உணர்ச்சியில்லாதவர்களல்ல என்பதை அந்தப் பெரிய கட்சி உணர்ந்து கொள்ளும்.

திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்களில் சிலர் பழைய சமூக வாதங்களை மனத்தில் வைத்துக் கொண்டும், திராவிட நாட்டுக் கொள்கையில் நாட்டம் கொண்டும் நடைமுறை ராஜதந்திரத்தை மறக்கப் பார்க்கும் தருவாயில் திரு அண்ணாதுரை முக்கிய லட்சியத்தையும், அடுத்து நிற்கும் கடமையையும் தமது செயல் முறையையும் விளக்கி அழுத்தமாகப் பேசியிருப்பது மிகவும் பாராட்டத் தக்கது.

தென்னாட்டு மக்கள் அனைவரும் ஒன்று சேர்ந்தாலொழிய பாரத நாட்டில் நமக்குத் தகுந்த இடத்தைப் பெற இயலாது. நாம் சிதறி நிற்கவேண்டும் என்று வடநாட்டாரும் ஆசைப்படவில்லை. தென்னாட்டில் தமிழ், கன்னடம், மலையாளம், ஆந்திரம் ஆகிய ராஜ்யங்களுக்குள் ஒற்றுமை ஏற்பட்டால் அதற்கு வடநாடு ஆட்சேபிக்காது. அவர்களுமே அதனால் நன்மை அடைவார்கள்.

## இ. சி. எம்.மும் இந்தியாவும்

இப்பொழுதெல்லாம் இ. சி. எம். என்ற மூன்று ஆங்கில எழுத்துக்கள் பிரமாதமாக அடிபடத் தொடங்கியிருக்கின்றன. தில்லியிலுள்ள நமது மந்திரிகளும், திட்டம் வகுத்த தந்திரிகளும் இந்த மூன்று எழுத்துக்களைக் கண்டு நடுங்கத் தொடங்கியிருக்கிறார்கள்.

இ. சி. எம். என்றால் (யூரோப்பியன் காமன் மார்க்கெட்) ஐரோப்பிய பொது வர்த்தகம் என்று விரியும். பிரிட்டிஷ் பிரதமர் இந்த வர்த்தகக் கூட்டில் தமது நாடும் ஓர் 'அங்கத்தினராக'ச் சேர உத்தேசித்திருப்பதாகத் தெரிவித்தார். அப்போதிலிருந்து இந்தியா உள்பட எல்லாக் காமன்வெல்த் நாடுகளும் 'குய்யோ முறையோ' என்று கூக்குரலிடத் தொடங்கி விட்டன. தங்கள் ஏற்றுமதி வர்த்தகம் நசித்துப் போகும் என்று அலறுகின்றன. இதன் முழுப் பரிமாணம் எவ்வளவு என்று அறிந்து போகவே பிரிட்டிஷ் மந்திரி தார்னிகிராப்ட் தில்லிக்கு வந்திருக்கிறார்.

காமன்வெல்த் நாடுகளுக்குப் பிரிட்டனில் வர்த்தகம் செய்யச் சுங்க வரியில் பெரும் சலுகை பிரிட்டன் அளித்திருக்கிறது. இப்போது பிரிட்டன் இ. சி. எம். மில் சேர்ந்து விட்டால் அந்தச் சலுகைகளுக்கு ஆபத்து ஏற்பட்டுவிடும். மேலும் ஐரோப்பிய நாடுகளிலிருந்து பிரிட்டன் பொருள்களை வாங்கத் தொடங்கிவிடும். காமன்வெல்த் நாடுகளின் ஏற்றுமதி வர்த்தகம் அடியோடு நசித்துப் போகும்.

சென்ற யுத்தத்துக்குப் பிறகு, ருஷ்யாவானது ஒரு பலம் வாய்ந்த கம்யூனிஸ நாடாகப் பரிணமித்துவிட்டது. ருஷ்யாவின் கம்யூனிஸ ஆதிக்கத்தைத் தடுக்க ஐரோப்பிய நாடுகள் பலவித கூட்டு ஒப்பந்தங்கள் செய்துகொள்ள முன்வந்தன. இதன்பயனாகச் சில ராணுவ ஒப்பந்தங்களும் சில பொருளாதார வர்த்தக ஒப்பந்தங்களும் செய்துகொண்டுள்ளன. அவற்றில் ஒன்றுதான் இந்த இ. சி. எம்.

பிரான்ஸ், மேற்குஜெர்மனி, இத்தாலி, பெல்ஜியம், நெதர்லண்ட்ஸ், லக்ஸம்பெர்க் ஆகிய ஆறு நாடுகளும் சேர்ந்து, ஒன்றுக்கொன்று போட்டியாக வராமல் இணக்கமான முறையில், கொஞ்சம் கொஞ்சமாகத் தத்தம் நாட்டு சுங்க வரிகளைக் குறைத்து, பரஸ்பரம் வியாபாரம் நடத்துவது என்று 1958ல் ஒப்பந்தம் செய்து கொண்டன. அதன் விளைவாக அந் நாடுகள் பொருளாதாரத் துறையில் மிக முன்னேறி விட்டன. ஐரோப்பிய அரசியலிலும் மிகுந்த செல்வாக்குப் பெற்று விட்டன. பிரிட்டன் பொருளாதாரத் துறையிலும் அரசியல் துறையிலும் இரண்டாந்தர நாடாக

ஆகிவருகிறது. இந்த நிலையைத் தடுக்கத்தான் பிரிட்டன் இப்போது, இ. சி. எம். இல் சேர விரும்புகிறது. ராஷ்டாந்திர சுங்கங்கள் ஒழிந்து வியாபார சுதந்திரம் நிலவினால்தான் எல்லா நாடுகளும் செழிக்கும் என்னும் உண்மையை ஒப்புக்கொள்ளும் நிலை ஏற்பட்டிருக்கிறது. ஆயினும் இதைச் செயலாவளியில் கொண்டு வந்தால் சில நாடுகளுக்கு நஷ்டம் ஏற்படும்.

பிரிட்டன் இ. சி. எம்.மில் சேர்ந்தாலும் இந்தியாவிலிருந்து பிரிட்டனுக்குப் போகும் துணி வகைகள், சணல், டீ இவை ஏற்றுமதியாகலாம். ஆனால் இ. சி. எம். ஒப்பந்தம் காரணமாகச் சுங்கச் சலுகை இராது. இந்தியா சுங்கத் தீர்வை செலுத்திச் சமாளிக்க முடியாமல் திணறும். அவ்வகையில் இந்தியாவின் ஏற்றுமதி வர்த்தகம் பாதிக்கப்படும். இந்தியா பிரிட்டிஷ் ஸ்டர்லிங் சம்பாதிக்க முடியாமல், மூன்றாவது திட்டத்துக்கு வேண்டிய யந்திரச் சாமான்கள் வாங்க முடியாமற் போகும். பிரிட்டனில் வாங்கிய கடனுக்கு வட்டி செலுத்த முடியாமலும் கஷ்டப்படும்.

இப்போது பிரிட்டனுக்குத் தேவையான கோதுமை, வெண்ணெய், பால் முதலியன கனடா, ஆஸ்திரேலியா, நியூஸிலந்து முதலிய நாடுகளிலிருந்து வருகின்றன. இ. சி. எம்.மில் சேர்ந்துவிட்டால், பெல்ஜியம், பிரான்ஸ், ஜெர்மனியுமே பிரிட்டனுக்குத் தேவையான பண்டங்களை அளித்து விடும். நியூஸிலந்து ஆஸ்திரேலியா முதலிய நாடுகளின் ஏற்றுமதியும் பாதிக்கப்படும்.

ஆஸ்திரேலியாவிலும், கனடாவிலும், நியூஸிலந்திலும் (காமன்வெல்த் நாடுகள்) உள்ள மக்கள் சில தலைமுறைகளுக்கு முன் பிரிட்டனிலிருந்து சென்றவர்களே. அந்த ரத்தபாசம் பிரிட்டனை 'இ. சி.எம்.மில் சேராதே' என்று தடுக்கிறது. பிரிட்டன் இப்படியும் போக முடியாமல் அப்படியும் போக முடியாமல் தவிக்கிறது. முடிவில் ரத்த பாசமே வெல்லலாம். பிரிட்டன், இ. சி. எம்.மில் சேரவில்லை என்று முடிவு செய்யலாம்.

அந்நிய நாடுகளின் அரசியலுடனும் வர்த்தகத்துடனும் பிணைந்த முறையில் திட்டம் வகுப்பது எவ்வளவு பெரிய தவறு என்பதை இந்த இ. சி. எம். விவகாரம் மீண்டும் நமக்கு நிரூபித்து விட்டது. மேனாட்டினரைப் போல் நாமும் படாடோபமாக வாழ வேண்டும் என்ற தவறான ஆசையின் காரணமாக மேல் நாடுகளில் கடன் வாங்க வேண்டியிருக்கிறது. அங்கு ஏற்படும் சிறு சலசலப்பும் நமக்குக் கோடிக் கணக்கில் நஷ்டத்தை உண்டாக்கி விடுமோ என்று அஞ்ச வேண்டியிருக்கிறது.

# சுதந்திர நிதி

(2-7-61 லிருந்து 14-7-61 வரை)

| | | |
|---|---|---|
| எஸ். பரமேசுவரன் | 2 | 00 |
| ஓர் அன்பர் | 1 | 00 |
| பத்மாவதி | 3 | 00 |
| எஸ். வி. செல்வமணி | 1 | 10 |
| கே. எஸ். ஜகந்நாதன் | 10 | 00 |
| சேலம் நண்பர் | 5 | 00 |
| ஆர். மகாதேவன் | 10 | 00 |
| டாக்டர் கே. ராமச்சந்திரன் | 10 | 00 |
| கே. வி. சாவித்திரி | 5 | 00 |
| டி. ஏ. விசுவநாத ஐயர் | 50 | 00 |
| கே. வி. முருகன் | 1 | 00 |
| கவிலா | 5 | 00 |
| கே. ஆர். நாராயணன் | 2 | 00 |
| டாக்டர் ஸ்ரீஹரி மூலம் ஓர் அன்பர் | 56 | 00 |
| 10-1-61 முதல் 1-7-61 முடிய | 6019 | 45 |
| ரூ. | 6180 | 55 |

நன்கொடைகள் அனுப்பியவர்களுக்கு நன்றி. அனைவரும் ஆழ்ந்து யோசிக்க வேண்டிய விஷயம். பெரியதொரு அரசாங்கத்தைத் தன் கையில் வைத்துக்கொண்டு தன் அதிகாரத்தை நீடித்துக்கொண்டு போக எல்லா வேலையும் செய்துவரும் காங்கிரஸை எதிர்க்க இந்த நன்கொடைகள் எம்மட்டும் உதவும்? இந்த ஊக்கம் போதுமா? பெரியோர்களும் சிறியோர்களும் யோசனை செய்ய வேண்டும்.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

சுதந்திரக் கட்சிக்காகப் பண உதவி செய்கிறவர்கள் ஸ்ரீ ராஜாஜி C/O கல்கி காரியாலயம், சென்னை-10 என்ற விலாசத்துக்கு அனுப்பலாம்.

# சுவையான....

பத்திரிகைகளில் சுவையான செய்திகள் பல வரத்தான் செய்கின்றன. அவற்றின் சுவை நம்மைக் காட்டிலும் எலி, கரையான், கழுதை இவற்றுக்கு நன்றாகத் தெரிந்திருக்கிறது என்பது மறுக்க முடியாத உண்மை. ஆனால், பாவம்! அவை அந்தப் பத்திரிகைச் செய்திகளைச் சுவைப்பதற்கே நாம் அனுமதிப்பதில்லையே! காரணம், தேதி பதினைந்தானதும் பையிலுள்ள பர்ஸ் காலியாகி விடுவதுதான். "பே ஏ ஏ ஏப் பே ஏ ஏ ஏர் வாங்கறதே ஏ ஏஏ" என்று நீட்டி முழக்கும் குரலொலியை ஆவலுடன் எதிர்பார்க்கத் தொடங்கி விடுகிறோம். பழைய பேப்பர்க்காரர்களுடைய வியாபாரமே அலாதி.



"வீசை ஒன்றே முக்கால் ரூபாய்" என்றான் ஒருவன். "பேஷ்" என்று கூறிவிட்டு வீட்டினுள்ளே போய்ப் பழைய பேப்பர்களையும் ஒரு தராசையும் கொண்டு வந்தேன். திகைத்து விட்டான் அவன். "ஸார்! உங்க தராசுன்னு வீசை ஒரு ரூபாய்தான்" என்றான் பளிச்சென்று. 'ஏனப்பா? என் தராசு என்ன பாவம் பண்ணிற்று?' என்று நான் கேட்கவில்லை. பாவம் பண்ணுவது அவன் தராசுதான் என்பது எனக்குத் தெளிவாகத் தெரிந்ததுதானே! 'சரி' என்று ஒப்புக் கொண்டேன். நிறுக்க ஆரம்பித்தேன். "ஸார்! நீங்களே நிறுப்பதானுல் முக்கால் ரூபாய்தான்!" என்றான் அவன்! அதற்கும் ஒப்புக் கொண்டேன். "ஏனப்பா? உன் எடைக்கல் வீசையா, கிலோகிராமா?" என்று கேட்டேன்...'கிலோகிராம்' என்றதும் ஞாபகத்துக்கு வருகிறது. எல்லாரும் பவுண்டுக் கணக்கிலிருந்து கிலோகிராமுக்கு மாறி வருகையில் நமது மத்திய மந்திரி ஒருவர் இன்னும் பவுண்டு கணக்கிலேயே உட்கார்ந்திருக்கிறார். ஸ்ரீமான் லால்பகதூர் சாஸ்திரியைத்தான் குறிப்பிடுகிறேன். முதல் எழுத்துக்களைக் கவனியுங்கள் :— எல்.பி.எஸ். (lbs) அல்லது எல். பி. சாஸ்திரி! எல். பி. சாஸ்திரியாக இருப்பானேன்? கிலோகிராம் சாஸ்திரியாக என்றைக்கு மாறுவது?...



மத்திய மந்திரியை விட்டு விட்டு முதல் மந்திரிக்கு வந்தால் ஒரிஸ்ஸா 'தீப் வீரர்' பட்நாயக் 'பட்'டென்று சென்ற வாரம் அருமையான யோசனை ஒன்றைக் கூறினார். சர்க்கார் காரியாலயங்களில் 'பைல்' வேலைகளைக் குறைத்துவிட வேண்டும் என்பதுதான் அது. அவருக்குக் கீழுள்ள சிப்பந்திகள் உடனே இந்த அரிய யோசனையைப் 'பைல்' பண்ணி வைத்து விடுவார்கள் என்பது உறுதி!....



முதல் மந்திரியிடமிருந்து எம். எல். ஸி.க்குத் தாவினால், நாகபுரியில் நடந்த ஒரு சம்பவம் நம்மைப் பயமுறுத்துகிறது! எம். எல். ஸி.யைப் பிடிக்காத மகானுபாவர்கள் நெருப்புக் கோளங்களை அவர் வீட்டுக்குள் விட்டெறிந்தார்களாம்! அழுகிய முட்டை, காய்கறிகள்; பின்னர் கல்லெறிதல்; அதன் பிறகு செருப்பு என்ற சீரிய ஏவுகணைகள் போய் இன்று நெருப்புக் கோளத்தில் வந்து நிற்கிறது. இன்னும் இத்துறையில் என்னென்னவெல்லாம் முன்னேற்றங்கள் நேரப் போகின்றனவோ?....முன்னேற்றம் என்றதும் மொரார்ஜி பாய் கூறியதை நினைவு படுத்திக் கொள்ளாதிருக்க முடியவில்லை. வரி போட்டுப் பணம் வசூலிக்கா விட்டால் முன்னேற முடியாது என்கிறார் மொரார்ஜி. முன்னேற்றம் வரி போட்டுப் பணம் வசூலிப்பதில் நிச்சயம் இருக்கத்தானே செய்கிறது?... வரி போடுவது ஒருபுறமிருக்க ஸ்ரீ எம். ஜி. ஆர். ஒரு பெரிய வெடிகுண்டைத் தூக்கிப் 'படார்' என்று போட்டிருக்கிறார். 'மேலிடம் விரும்பினால் நான் தேர்தலில் போட்டியிடும்படி நேரும்' என்றிருக்கிறார். உடனே சிவாஜியைத் தேர்தலில் நிற்குமாறு ஆளும்கட்சியினர் அனுமதிக்கலாம். 'கலையில் அரசியல் புகுந்து விட்டது' என்ற முணுமுணுப்பு ஓய்ந்து அரசியலில் கலை புகுந்து விட்டதே என்ற ஆரவாரமும் எழும்! மேடையிலேறி ஏழைகளுக்காக யார் அதிகக் கண்ணீர் வடிப்பார்களோ? ஆனால் அதனையும் வெறும் நடிப்பு என்று மக்கள் கருதிவிட இடமிருக்கிறதே! இதே பேட்டியின் போது ஸ்ரீ எம். ஜி. ஆர். பாவமன்னிப்பும் திருடப்பட்டதுதான் என்று அடித்துச்சொல்லியிருக்கிறார். 'திருடாதே' என்னும் கூடத் திருடியவர்களுக்குப் பாவமன்னிப்பு உண்டோ?' என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா?....



வெள்ளப் பெருக்கினால் மக்கள் படும் அவதி பற்றிய துயரகரமான செய்திகள் வந்த வண்ணம் இருக்கின்றன. சுவையான ஆனால் நெக்குருகச் செய்யும் ஒரு தகவல்: வீட்டுக்குள் தண்ணீர் நிறைந்ததும் மேட்டுப் பாங்கான ஓர் இடத்துக்குப் பவானியில் வசிக்கும் குடும்பம் ஒன்று இடம் பெயர்ந்தது. அக்குடும்பத்தைச் சேர்ந்த இரு நாய்களைத் திடீரென்று காணுமாம். எஜமானர் படகில் ஏறிச் சென்று இங்குமங்குமாய்த் தேடினார். கடைசியில் தம் வீட்டுக் கூரைமேல் இரு நாய்களும் உட்கார்ந்து, வீட்டைக் காவல் புரிந்துகொண்டிருப்பதைக் கண்டார்! இம்மாதிரி செய்திகளைப் பார்க்கும்போது 'இது என்ன நாய் ஜென்மம்?' என்று அலுப்பதை விட்டு, 'நாய் ஜென்மம் எடுத்திருக்கக் கூடாதா?' என்று எண்ணத் தோன்றுகிறதல்லவா? —குட்டி கிருஷ்ணன்

# ....செய்திகள்

# ரெக்ஸ்

## ஜெல்லி



## இன்பமான காட்சி...மிகுந்தசுவை...மிகவும்நல்லது!

இது சுவை மிகுந்தது. பழங்களின் மணம் கொண்டது. எளிதில் தயாரிக்கக்கூடிய ஒரு பண்டம். ரெக்ஸ் ஜெல்லி கிரிஸ்டல்களை வெந்நீரில் கலந்தால் போதும். பிறகு போதுமான அளவு குளிர்ந்த ஜலம் அதோடு சேர்த்து அந்தக் கலவையை ஒரு பைண்டுக்கு, (அதாவது 20 அவுன்ஸ்) சமமாக ஆக்கிக்கொள்ளுங்கள். அதை அச்சியில் ஊற்றி, ஐஸின் மேல் ஜெல்லியை உறைய வையுங்கள்.

அது குடும்பத்தார் விரும்பும் போஷகமளிக்கும் லேசான பண்டம். வியாதியிலிருந்து சுகமடைந்தவருக்கும் கூட நல்லது.

ரெக்ஸ் ஜெல்லி கிரிஸ்டல்கள் 6 சுவைகளில் கிடைக்கின்றன. ராஸ்பெரி, ஸ்ட்ருபெரி, லெமன், பைனுபிள், ஆரஞ்சு, செர்ரி.






கார்ன் பிராடக்ட்ஸ கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.

தென் இந்தியாவிற்கான ஏஜெண்டுகள்: பாரி & கம்பெனி லிமிடெட்

# அன்பே ஆரமுதே

தி. ஜானகிராமன்

## அத்தியாயம் பதினொறு

வந்து நின்றவள் ருக்மிணிதான் என்பது உற்றுப் பார்த்த பிறகு தெளிந்தது.

"படுத்துக்கொள்ளவில்லையா மாமா?" ருக்மிணியின் குரல்தான்.

"ம்ஹும் உனக்கும் தூக்கம் வல்லையா?" என்று முகத்தைத் தூக்கிப் புகையிலை கீழே விழுந்து விடாமல் ஜாக்கிரதையாகக் கேட்டார் அவர்.

ருக்மிணி தாழ்வாரத்தின் ஓரமாயிருந்த கட்டைச் சுவர்மீது உட்கார்ந்து கொண்டாள். கேள்விக் குறியும் சர்ப்பம் மாதிரியும் தெற்கே வியாபித்திருந்த நட்சத்திரக் கூட்டம் தலைகீழாகப் புரண்டு மேற்குப் பக்கம் சாய்ந்து கிடந்தது.

"ம்க்கும்" என்று 'இங்கு வந்து உட்காரேன்' என்ற பாவனையில் உள்ளங் கையால் தம் முன்னால் தரையைத் தட்டினார் கப்பு. ருக்மிணி வந்து உட்கார்ந்ததும் எழுந்து புகையிலையைத் துப்பி விட்டு வந்து உட்கார்ந்தார்.

"டில்லி இப்பொழுது இவ்வளவு குளுமையாக இருக்குமோ? என்னால் அங்கு இருக்கவே முடியவில்லை?"

"இராது...படுக்கை, தரையெல்லாம் நன்றாகச் சுடும்."

"ஆயிரம் சொல்லு, நம் ஊர் மாதிரி ஆகுமா? எல்லாவற்றையும் விட்டுவிட்டு ஏன்தான் டில்லியிலேயும் லண்டனிலே யும் போய் உட்கார்ந்திருக்கிறார்களோ?"

"உங்கள் பிள்ளையைப் பற்றித்தான் யோசித்துக் கொண்டிருக்கிறீர்களா?"

"ஆமாம்" என்று சலித்துக் கொண்டார் கப்பு. "பிள்ளை! பிள்ளை, அப்பா, அம்மா, அண்ணன், தம்பி-இந்த வார்த்தைகளுக்கெல்லாம் என்ன அர்த்தம்? அப்பாவும் பிள்ளையும் சேர்ந்திருந்தால் பிள்ளை-அப்பா. தனித் தனியாக ஐயாயிரம்மைல் சமுத்திரத்துக்கு அந்தண்டை ஒருத்தன் - இந்தண்டை ஒருத்தன் - இது என்ன அப்பா - பிள்ளை? அவன் ஒரு மனுஷன்- இவன் ஒரு மனுஷன்-அதற்கு மேல் என்ன இருக்கிறது?... என்ன நான் சொல்கிறது சரியாயில்லையா?"

"ம்" என்று இழுத்தாள் ருக்மிணி.

"நீயே யோசித்துச் சொல்லேன். என்ன இருக்கிறது?"

'உங்கள் வார்த்தைகளில் இருக்கிற விரக்தியும் அலுப்பும் உங்கள் குரலில் இல்லையே, மாமா!' என்று சொல்ல வேண்டும் போலிருந்தது அவளுக்கு. சொல்லவில்லை. உண்மையாக அதில் அலுப்போ, சலிப்போ இல்லை. ஆற்றாமையும் பாசமும் கரகரத்துக் கொண்டிருந்தன.

"கடவுளே!" என்று மனத்துக்குள் அரற்றிக் கொண்டாள் ருக்கு. 'உன்னால் இவ்வளவுதானா முடியும்? உன் சர்வ வல்லமைக்கும் ராட்சச பலத்துக்கும் இந்த மனுஷப் பூச்சிகள்தானா அகப் பட்டன!' என்று அவள் மனம் புலம்பியது.

"என்ன ருக்கு?"

"ம்?"

"சொல்லேன்."

"என்னத்தை மாமா சொல்கிறது? கடவுளுக்குக் கூடத் தரம் குறைந்து விட்டது போலிருக்கிறது. முன்பெல்லாம் ராவணன், இரண்யகசிபு, மகாபலி என்று பெரிய பெரிய ராட்சசர்களை யெல்லாம் அடக்கிக் கொண்டிருந்தார். இப்போது, குழந்தைகள் குச்சியால் புழுவைக் குத்திக் கிளறுவதுபோல், கேவலம் மனிதர்களை இம்சிப்பதோடு அவர் பலம் நின்றுவிட்டது."

"உனக்கு எப்பொழுது பார்த்தாலும் சரித்திரம்தான்."

"இது மதம் மாமா."

"சரிதான் போ."

ருக்கு அந்தப் பேச்சை விட்டு விட வில்லை. பிள்ளையைப் பற்றிப் பேசிப் பேசி ஆற்றிக் கொள்ளலாம் என்று அந்த மனசு ஏங்குவதுபோல் பட்டது அவளுக்கு. அவன் குழந்தையாயிருந்தது, படித்தது, குணம், சீமைக்குப் போனது, அங்கேயே அவன் கலியாணம் செய்து கொண்டது-எல்லாவற்றையும் கிளறிக் கிளறி விசாரித்தாள்.

"ஆள் ஜோராயிருப்பான். என்னை விடச் சிவப்பு. என்னைவிட உயரம். கண்ணு வேறு அவன் அம்மாமாதிரி பூனைக் கண். அந்த ஊருக்குப் போன

பிற்பாடு. இதுதான் நம்ம ஊரு-இங்கே பிறந்திருக்க வேண்டியது, ஏதோ தவறிப் போய் எங்கேயோ பிறந்து விட்டோம் என்று எண்ணி அங்கேயே தங்கி யிருப்பான். அடியிலிருந்து, எல்லாப் பரீட்சையிலேயும் முதலாவதாகத்தான் தேறுவான். அடக்கம் அதிகம். அகட விகடம், கபடு, சூதெல்லாம் தெரியாது. 'சாமர்த்தியம்' என்கிறார்களே, அதெல்லாம் தெரியாது. திரிசமன், குறும்பு-இதெல்லாம் என்னவென்று கூடத் தெரியாது. பேச்செல்லாம் அப்படி அப்பட்டமாக, நேராக இருக்கும். மன சில் எது படுகிறதோ அதைச் சொல்லி விடுவான். பிறத்தியார் ஏதாவது நினைத் துக் கொள்வார்களோ என்று சந்தேகம் தோன்றினால்தானே பூசி மெழுக! அந்தச் சந்தேகம்தான் கிடையாதே!"

"அதனால்தான் மனசில் பட்டதைச் செய்துவிட்டான்."

"நான் வேண்டாம் என்று சொல்ல வில்லை, ருக்கு. அவன் செய்தது ரொம்ப சரி......"

"பின்னே?"

"இங்கே ஒரு தடவை வந்துவிட்டுப் போகலாம். மூன்று தடவை கிளம்பி யிருக்கிறான். ஒவ்வொரு தடவையும் ஏதோ அசந்தர்ப்பமாகி விட்டாற் போலிருக்கிறது. கடைசியிலே 'நீதான் ஒரு தடவை வந்துவிட்டுப் போயேன், நானும் உன்னோடு வருகிறேன்' என்று எழுதியிருக்கிறான்."

"போய் வருகிறதுதானே?"

"போகலாம் என்றுதான் இருக் கிறேன். நான் எங்கே போனால் என்ன? வந்தால் என்ன?"

"ஏன் இப்படித் திடீர் திடீரென்று ஏதாவது சொல்லுகிறீர்கள், மாமா?"

"ப்ச...என்னமோ போயேன்."

"என்ன வேதனை உங்களுக்கு? சொல் லுங்களேன்."

"ஒரு வேதனையுமில்லை. நம்ம கை 'நெரக்க' மாட்டேன் என்கிறது. எத் தனையோ பேருக்குச் செய்தாயிற்று. யார் நினைக்கிறார்கள்? இப்படியெல்லாம் பிரியத்தை வாங்க முடியாதென்று ஒரு பயல் விடாமல் எனக்குப் புத்திமதி சொல்லிக் கொடுக்கிறார்கள்."

"அது வாஸ்தவம்தானே?"

"வாஸ்தவம்தான். விலை கொடுத்து வாங்கத்தான் முடியாது பிரியத்தை."

"காசிலிங்கத்துக்குக் கூட நீங்கள் நிறைய செய்திருக்கிறீர்களாம்."

"ப்ச, காசிலிங்கம் மாதிரி ஆயிரம் பேர். பிள்ளையே வந்து பார்க்க முடிய வில்லை. இதெல்லாம் என்ன?"

"மாமா! உங்கள்மேல் யார் பிரியமா யிருக்க வேண்டுமோ அவர்கள் எல்லாம் உயிராக இருக்கிறார்கள். உங்கள் தங்கை, மருமான்-எல்லாரும் உங்களிடம் உயிரை வைத்திருக்கிறார்கள்."

"ம்ம்" என்று ஆமோதித்தார் அவர். "அதிருக்கட்டும்" என்று பேச்சை மாற் றுவதுபோல் தொடர்ந்தார். "நீ என்ன செய்யப் போகிறாய்?"

"அப்படியென்றால்....?"

"இப்பொழுது சொன்னாயே யார் பிரியமாக இருக்கணுமோ, அவர்கள் எல்லாம் உயிராக இருக்கிறார்கள் என்று. கலியாணமாகிச் சந்திரா போய் விடுவாள், இல்லையா?"

"ஆமாம்!"

"அப்புறம் எனக்கு இங்கே வரக் கூடப் பிடிக்காது."

"என்ன மாமா இது?"

"என்ன மாமா இது, என்ன மாமா இது என்று அதட்டுகிறாயே தவிர, நானும் இங்கேயே இருக்கிறேன் என்று சொல்ல மாட்டேன் என்கிறாயே!"



ருக்மிணி அதற்கு ஒன்றும் பதில் பேசவில்லை.

"எனக்கு நீ இங்கேயே இருந்தால் தேவலை போலிருக்கிறது. தங்கையில்லாத தங்கை ஒருத்தி எனக்கு இருக்க வேண்டும் போலிருக்கிறது. கூடப் பிறந்த தங்கையிடம் நான் என்னென்னெல்லாம் சொல்ல முடியும்? அதற்கெல்லாம் ஒரு அளவு இருக்கிறதே."

மேலே என்ன சொல்லப் போகிறார் என்று எதிர்நோக்கியவாறு பதில் பேசாமலிருந்தாள் ருக்மிணி இன்னும்.

"மனசிலே இருக்கிற பாசம் சொல்கிறது. தங்கையில்லாத தங்கையாக இருந்தால்......?"

ருக்கு அப்பொழுதும் ஒன்றும் சொல்லவில்லை. இந்தக் கிழவரை, தவித்துத் தத்தளிக்கும் இந்தக் கிழவரை எது இப்படிப் போட்டு வருத்துகிறது என்று அவருக்குப் புரியவில்லையா? தனிமையா! வாய்விட்டோ, சைகையாலோ போதிய அளவுக்குக் கிடைக்காத அன்பா?

கப்புசாமி மேலும் சொன்னார்: "ஆனால் நான் ஏதோ அமைத்துக் கொண்டு என் மனசிலுள்ளதையெல்லாம் அழுகிறதற்காக ஒரு ஆத்மாவைத் தேடுகிறேன் என்று நினைத்து விடாதே. எனக்கு என்னமோ நீ இங்கு வந்து விட்டால் தேவலை போலிருக்கிறது. அவ்வளவுதான். அதற்கு மேல் தெளிவாகச் சொல்ல முடியவில்லை என்னால். மனித ஜாதி முழுதும் சுயநலத்தைக் கைப்பிடியாக வைத்துக் கொண்டுதான் நடக்கிறது. யாக்ஞவல்கியர் சொன்னாற் போல் இந்த உலகத்தில் அன்பு செலுத்துகிறவர்கள் யாரும் பிறருக்காக அன்பு செலுத்தவில்லை. தனக்கு ஏதோ அதில் ஆனந்தம் கிடைக்கிறது. பிறருக்காக உயிரைத் தியாகம் பண்ணுகிறவன் கூட அந்தத் தியாகத்தினால் தனக்கு நிம்மதி கிடைக்கும் என்றுதான் செய்கிறான். அந்தமாதிரி பெரிய வேதாந்தத்துக்குப் போக நான் தயாராயில்லை...." என்று சற்றுத் தயங்கினார். பிறகு சொன்னார்: "ஏன், நான்மட்டும் என்ன? சுயநலம் என்றுதான் வைத்துக் கொள்ளேன். நீ வந்து இருந்தால் எனக்கு ஏதோ அமைதியாக இருக்கும் போலிருக்கிறது...."

ருக்குவுக்கு ஒன்றும் புரியவில்லை. நாலைந்து மாதங்கள் முன்னால் கண்ணை மூடின சித்தப்பா, எப்பொழுதோ போய்விட்ட அப்பா, அம்மா எல்லாருடைய ஞாபகங்களும் ஒரு கணம் வருவதுபோலிருந்தது. மறு கணம் அலைந்து அலைந்து பரந்து கொண்டிருக்கிற கப்புசாமியின் ஏக்கம் தான் ஓங்கி நின்றது. இது சபலமோ, நப்பாசையோ என்று கேட்டுக் கொண்டாள். ஆனால் அவள் மனசே ஒரு சிரிப்புச் சிரித்து, 'என்ன, சிறு பிள்ளைத்தனமான எண்ணம்' என்று அதைப் போட்டு மிதித்து விட்டது.



# அறிமுகப்படுத்துகிறோம்...




# பாமாலிவ்

டால்கம் பவுடர்

PTG.5 T.

இல்லை. என்மேலுள்ள பரிவா? இந்தத் 'தனிமை'யைக் கண்டு இரக்கமா?

உடனே பதில் சொல்லவில்லை அவள். இப்பொழுது கடல் அலை சற்று உரக்கவே கேட்டது. சுவர்க் கோழியும் சோர்ந்துபோன இயந்திரம்போல் சுதி இறங்கியும் ஏறியும் முனகிக் கொண்டிருந்தது. அவள் இதற்கு முன்னால் வரவே வராத இந்த வீடு ஜன்ம ஜன்மாந்திரங்களாக அவளுடையதுபோல் ஒரு விசித்திரமான பாவம் அவளை ஆட்கொண்டது. சுப்புசாமியின் பிள்ளையே பெண் வடிவில் தானாக இருப்பதாக, வேடிக்கையான ஓர் உணர்வு அவள் மனத்தில், கரையில் சலக் சலக்கென்று தழுவும் சிற்றலைபோல வந்து தவழ்ந்தது.

"பித்துமாதிரி என்னென்னமோ உளறுகிறேனே என்று யோசிக்கிறாயா உனக்கு?" என்று கேட்டார் சுப்புசாமி.

"என்ன மாமா இது! நான் இங்கே தானே இருக்கப் போகிறேன்."

"இங்கேயா?"

"ஆமாம் மாமா!"

"இன்னொரு தடவை சொல்லு!"

"இங்கேதான் இருக்கப் போகிறேன்."

"அப்பாடா! எனக்கு... எனக்கு...." அவர் மேலே பேசவில்லை. முடியவில்லையோ? முகவிவரங்களை மறைத்த அந்த இருளில் குரலின் நடுக்கம்தான் கேட்டது.

சற்றுக் கழித்து இரண்டு கைகளையும் தலைக்குப் பின்னால் கோத்துக் கொண்டு, "ஈசுவரி, தாயே!" என்று பெரிய விடுதலை கிடைத்து விட்டதுபோல் பெருமூச்சுவிட்டார் சுப்புசாமி.

மறுபடியும் வெற்றிலை போட்டுக் கொள்ளத் தொடங்கிவிட்டார்.

"மறுபடியுமா வெற்றிலை?"

"ஆமாம்."

"புகையிலையைப் போட்டுக் கொண்டால் உங்களோடு பேசக்கூட முடியவில்லையே."

"எனக்கு ரொம்பத் தாங்க முடியாத சந்தோஷம் வந்தாலும் சரி, சிரமம் வந்தாலும் சரி, புகையிலை போட்டுத்தான் ஆகணும். அப்பத்தான் அந்த ஆனந்தம் பூர்த்தியாகும். வருத்தமாயிருந்தால் அதை மென்று தின்றுவிடுற் போலிருக்கும். இரு, ஒரு ஆவர்த்தம் மென்று துப்பி விடுகிறேன். அப்புறம் பேசலாம்....வேண்டாம். நீ போய்ப் படுத்துக் கொள். மணி மூன்றுக்குமேல் இருக்கும் போலிருக்கிறது. சினிமாக்காரி வீட்டுக் கோழி இரண்டு மூன்று கத்தல் கத்தி விட்டது..."

"பரவாயில்லை" என்று சொல்லவில்லை ருக்கு. அவளுக்குக்கூட முழுத் தனிமை

> காங்கிரஸ் கட்சி, இன்று மக்களுக்கு விதித்துள்ள கண்ட்ரோல்களும் கட்டுத்திட்டங்களும் மற்ற சுதந்திர ஜனநாயக ஆட்சிகளில் இருக்கின்றனவா? 'இல்லை'. ஆட்சி பீடத்திலிருப்பவர்கள் தங்களுக்கு வேண்டியவர்களுக்கு வரம்பில்லாத லாபம் கிடைக்கச் செய்யவே இந்தக் கட்டுப்பாடுகள் உதவுகின்றன; மக்களின் ஊக்கத்தையும் உற்சாகத்தையும் அழிக்கின்றன. — ராஜாஜி

வேண்டியிருந்தது. பதில் பேசாமல் மெதுவாக எழுந்து அறையின் ஜன்னலோரமாக இருந்த கட்டிலில் படுத்துக் கொண்டாள்.

திறந்திருந்த ஜன்னலோரமாகக் கட்டிலில் படுத்தவாறு வெளியே பார்த்தாள் ருக்மிணி. தெற்கு வானில் இலேசாக வெண்மை படர, பனி பூத்தாற்போல் ஆகாய கங்கை பாதை போட்டிருந்தது. நாலைந்து அன்புகள் சேர்ந்து நிரம்பி வழிந்தது நெஞ்சு. சுப்புசாமி இருக்கச் சொல்கிறார். சந்திரா இருக்கச் சொல்கிறாள். நாகம்மாள் இருக்குமாறு சொல்லாமல் சொல்லுகிறாள். 'இரு இரு' என்று இன்னொரு முகம் சொல்வதுபோல் தோன்றுகிறது. சொல்லவில்லை. 'என்னை இருக்கச் சொல்லு சொல்லு' என்று இவள் நெஞ்சுதான் மருந்துப் பையைத் தூக்கித் தூக்கி அலைகிற அந்த முகத்திடம் புலம்பியது. மாறாக ஏதாவது பதில் வந்து விடுமோ என்று அஞ்சித்தான் தன் தீர்மானத்தைத் தொப்பென்று அவரிடம் சொல்லி விட்டு, விடையை எதிர்பாராமல் ஓடி வந்து விட்டாள் அவள் அன்று மாலை.

தோட்டம் சலசலத்துக் கொண்டிருந்தது. மர மல்லிகையின் மணம் சற்றைக் கொருமுறை சாமரம் வீசியது. 'இதுவா அதுவா' என்று இனம் புரியாத அந்த முக்கால் இருளின் ஊடே அவளுக்குப் பழைய நாட்களும் பூசினாற்போல் நினைவில் வந்தன. ஒரு சமயம் இங்கே எதற்காக வந்தோம், எப்படி வந்தோம், எது நம்மைக் கொண்டு சேர்த்தது என்று துருவியது. வந்து பத்து நாட்களுக்கு மேலாகிறது. ஆனால் திடீர் என்று நேற்றுக் காலையிலிருந்து ஒரு தலைகீழ் மாறுதல். தங்கியிருக்கிற இடம் என்ற வேற்றுமை கரைந்து, இந்த வீடு தன்னுடையதைப் போல, தனக்கும் இந்த வீட்டுக்கும் நெடுங்கால உறவுள்ளது போன்ற ஓர் உரிமை முளைத்து வேரூன்றிக் கிடக்கிறது. விடுமுறைக்குத்

> சுதந்திர இயக்கம் மக்களைச் சர்க்காரின் பிடியிலிருந்து விடுவிக்கும் இயக்கமாகும். அந்நிய ஆட்சியின் பிடிப்பிலிருந்து விடுபட நடத்திய சுதந்திர இயக்கத்தைப் போலவே சுதேசி சர்க்காரின் அநீதியான பிடிப்பிலிருந்து விடுபட நடத்தும் சுதந்திர இயக்கமும் புனிதமானது, உயர்வானது. —ராஜாஜி

தங்கியிருக்கிற விருந்தினன் என்ற தொலைவு அழிந்து இங்குள்ள யாவரும் உடன் பிறந்தோர்கள் போன்ற ஓர் ஒட்டு - இவை எங்கிருந்து எப்படி வந்து சேர்ந்தன?

தனியே நின்று நின்று இந்த ஒட்டு தலைப் பெயர்த்து எறிய முயன்றான் அவன். எங்கேயோ குக்கிராமத்தில் பிறந்து, கலியாணத்தையே மற்ற எல்லாப் பெண்களையும் போல் லட்சியமாகக் கொண்டு மனத்தைத் தயார் செய்து கொண்டு, அதே லட்சியத்துக்காகவே கொஞ்சம் படித்து, பாட்டு கற்றுக் கொண்டு, அதே லட்சியத்துக்காக உடலை வளர்த்து, கடைசியில் அந்த லட்சியம் யாரோ தண்ணீர் குடிக்க இறங்கியவளை விட்டு விட்டுப் போகும் ரயிலைப் போல் அவளை விட்டு விட்டு ஓடிவிட்டதும், கடைசியில் டில்லிக்குப் போய்ப் படித்துப் படித்து, விட்டு விட்டு ஓடிப் போன அந்த லட்சியத்தைப் பார்த்துச் சிரிப்பதற்காகப் படித்த அந்தப் படிப்பு-எல்லாம் அவள் நினைவில் வந்தன. எல்லாப் பெண்களையும் ஏற்றிக் கொண்டு போகிற அந்தக் கல்யாண லட்சியம் அவளை விட்டு விட்டுப் போனது அவளுக்கு எரிச்சலாகத்தானிருந்தது. 'உன்னை விடப் பெரிய கொம்பாகப் பிடித்துவிட்டேன்' என்று வஞ்சம் தீர்த்துச் சிரிக்கத்தான் அவள் படித்தாள். மேலே மேலே படித்தாள். தன்னைப் பார்த்துச் சோர்ந்த அனில் ஜோஷி, வால்டர் எல்லோரையும் முட்டாள்கள், பாமரர்கள், பூச்சிகள் என்று சிரித்து விட்டுக் கதவைச் சாத்திக் கொண்டாள். நான் பாலையாகவே இருக்கிறேன். மணலாகவே, வெறும் பாறையாகவே இருக்கிறேன். ஒன்றும் முளைக்காமல் காதங் காதங் காதங் காதமாக நீண்டு கிடக்கிற பாலைக்குக்கூட அழகு உண்டு. ஒரு பயங்கர அழகு. யாரும் அண்ட முடியாத அழகு. அடியெடுத்து வைக்கவே அஞ்சுகிற அழகு. புகுந்து விட்டால் தாகத்தாலும் தனிமையாலும் உயிரையே சாடி விடுகிற பயங்கர அழகு. யாரும் கவனிக்காத பாலைக்கு, கடவுள் இரக்கம் காட்டாத அந்தப் பாலைக்கு, வழி தவறி வரும் கடவுளின் பிள்ளைகளை அப்படிக் கொன்று விடுகிற ஆற்றல் உண்டு என்று கூறுவதுபோல் தன்னைக் கொடும் பாலையாக ஆக்கிக் கொண்டாள் அவள்.

நினைவில் தன்னையே இழந்து விட்டவளுக்கு இந்த வறட்சியைக் கண்டு தானே பயந்து ஒரு தடவை சிலிர்த்து உலுக்கிக் கொண்டாள். அப்படி ஒரு பேய்ப்பாலையாகவா இருந்து விட்டோம்? இல்லை. இந்த வறட்சிகளுக்கு இடையில் அனந்தசாமியைப் பற்றி அவள் நினைக்காத நாளில்லை. கரண்டியைத் தீயில் இட்டுச் சுடுமுத்தாற்போல் அந்தச் சம்பவம் அவளை நன்றாகச் சுட்டு விட்டது. அந்தச் சூடுதான் இவ்வளவு பெரிய பாலையாகத் தன்னை மாற்றிவிட்டது என்று தோன்றியது அவளுக்கு.

இப்பொழுது மீண்டும் அந்தப் பாலைக்கு மேலே கருமேகங்கள் குவிந்து திரண்டு வந்து நிற்பதுபோல் ஒரு பிரமை. பிரமை இல்லை. என் கண்ணால் நானே அவரைப் பார்த்தேன். பேசுவதைப் பார்த்தேன். நானே பேசினேன். அவர் வீட்டுக்குக் கூடப் போய் என் முடிவைச் சொல்லிவிட்டு வந்தேன்.

ஆனால் சுப்புசாமி, சந்திரா, நாகம்மாள் இவர்கள் ஏன் என்னை இங்கே இருத்துகிறார்கள்? இரக்கம் தானே! "ஐயோ பாவம்" தானே! இல்லை, காரணம் இல்லாத, அவியாஜமான அன்பா! அப்படி அவியாஜமாக அன்பு செலுத்த என்னிடம் என்ன இருக்கிறது? புற அழகா? இல்லை, இதயங்களிலுள்ள அன்பை மீட்டி ஒலிக்கச் செய்யும் அன்பு என்னுள்ளே இருக்கிறதா? இவ்வளவு சுவாதீனமான உணர்வு இந்த வீட்டுக்குள் எனக்கு வருவானேன்?

கேள்வியும் மாற்றுக் கேள்வியுமாக நெஞ்சுக வலை போட்டுக் கொண்டிருந்தது. இத்தனை பேரின் அன்பையும் சுண்டி ஒலிக்கச் செய்தது, அது அன்போ, இரக்கமோ, எதுவாயிருந்தாலும்—அந்த உருவம்தான், மருந்துப் பையைச் சுமந்து அலையும் அந்த உருவம்தான் என்று தோன்றியது.

சரி, இங்கேயே தங்கி, இங்கேயே வேலை தேடி அமர்ந்து....பிறகு என்ன செய்யப் போகிறோம்!

இந்தக் கடைசிக் கேள்வி திடீரென்று அவளைப் பயமுறுத்தியது. அதற்குப் பதிலே வரவில்லை. திடீரென்று ஏதோ வெட்ட வெளியில் வந்து நின்று விட்டது போல் சூன்யம்தான் கண்ணில் தட்டியது.

(தொடரும்)

# நரை மயிரென இயற்கையைக் குறைகூறுதல் முறையோ?



"இயற்கையாகவே என் கேசம் நரைத்துவிட்டது ஐயா; என்ன செய்ய முடியும்?" -இவ்வாறு பலர் குறைகூறுவதை நாம் கேட்டிருக்கிறோம். ஆனாலும் நரைமயிருக்காக இயற்கையைக் குறைகூறுபவர், ஒருவருடைய கேசம் ஏன் நரைக்கிறது என்று ஆராய்வதுண்டா? 90 சதவிகிதம் இளமையில் நரை, சரியான கேச பராமரிப்பு இல்லாமையாலும், சுகாதாரமற்ற இடங்களில் வசிப்பதாலும், மற்றும் மட்டரகமான கூந்தல் தைலங்களை உபயோகிப்பதாலும் ஏற்படுகின்றன என்று பரிசோதனைகள் மூலம் தெளிவாகியுள்ளது. விஞ்ஞான முறையில் அகமதாபாத்தில் உள்ள ஒரு மிக்க நவீனமான பாக்டரியில் தயாரிக்கப்படும் "லோமா" நரை மயிர் ஏற்படுவதைத் தடுக்க சிறந்த மூலதாரப் பொருட்களுடன் சீரிய முறையில் செம்மையாகத் தயாரிக்கப்படுகிறது. "லோமா"வை வாங்குங்கள். இந்தியாவிலும் மற்றும் வெளிநாடுகளிலும் பல இலட்சக்கணக்கான மக்கள் ஏன் "லோமா"வில் பரிபூரண நம்பிக்கை வைத்திருக்கிறார்கள் என்பதை நீங்களே உணர்வீர். ஞாபகமிருக்கட்டும். "லோமா" என்பதன் பொருள், சிறந்த தரம் என்பதே—நீங்கள் எதிர்பார்ப்பதும் அதுவே!



கேசத்தைக் கருமையாக்குவதில் **லோமா** பாரினில் புகழ்பெற்றது.

பூரண ஏஜெண்டுகளும் ஏற்றுமதியாளர்களும்:
**எம். எம். கம்பாத்வாலா**
அகமதாபாத்-1 (இந்தியா) ஏஜெண்டுகள்:
**வி. நரோத்தம் & கம்பெனி** பம்பாய்-2

MPS-TAM

சென்னை ஏஜெண்டுகள்: ஜே. பாலபாய் கம்பெனி, 260, எஸ்பிளனேட், மதராஸ்-1
இலங்கை ஏஜெண்டுகள்: மீரூன் கதீர் கோ., 41, 43, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11

# இனாம்!

(சரக்கு இருக்கும் வரை)

ஒரு பாட்டில்

## பிரில்க்ரீம்

சிறந்த சிகை அலங்கார சாதனம்

ஒவ்வொரு பெரிய சைஸ்

## மக்ளீன்ஸ்

பற்பசை

வெண்மை அல்லது குளோரோபில் சேர்ந்ததோ வாங்கும்பொழுது கிடைக்கும்.




பெரிய சைஸ மக்ளீன்ஸ் பற்பசையின் வழக்கமான விலைக்குக் கிடைக்கும் இந்த பிரத்தியேகமான பெட்டியை வாங்குங்கள்.

ஆந்திரா, கேரளா, மதராஸ் மற்றும் மைசூர் முதலிய இடங்களில் கிடைக்கின்றன.

# வாழும் வகை

சக்தி

வேகாத வெய்யிலில் சுற்றியலைந்து விட்டு, ஏமாற்றம் ஒன்றே எஞ்சப் பெற்றவராய்ப் படியேறினார் கந்தசாமிப் பிள்ளை. அவர் நடையிலே சோர்வு மிகுந்திருந்தது.

சோர்வையெல்லாம் வாசற்படியில் உதறியெறிந்துவிட்டுக் கூடத்துக்கு வந்தபோது அங்கே அவர் தம்பி செல்லத்துரை உட்கார்ந்திருந்தான்.

'எதற்காக வந்திருப்பான்?' என்னும் கேள்வியை மனத்துக்குள் எழுப்பிக் கொண்டு, "வாப்பா செல்லம், வந்து வெகு நேரமாகி விட்டதா?" என்று கேட்டார்.

"இப்பத்தான் சற்றுமுன் வந்தேன். வீட்டிலே சொன்னாங்க அவசரக் காரியமாக வெளியே போயிருப்பதாக. இருந்து பார்த்து விட்டுப் போகலாமுன்னு..."

மீனாட்சி அம்மாள் செம்பிலே தண்ணீர் எடுத்து வைத்து 'இலை போடட்டுமா?' என்ற கேள்வியுடன் நின்றாள்.

கைகால் கழுவிக் கொண்டு கூடத்துக்கு வந்தபோது, இரண்டு இலைகளிலும் சாப்பாடு பரிமாறப்பட்டிருந்தது.

பிள்ளையின் கவனம் சாப்பாட்டிலில்லை. அவர் சென்ற காரியம் பூர்த்தியாகவில்லை என்பதைத் தெரிந்து கொண்டு விட்டாள் அவரது மனைவி மீனாட்சி.

"தங்கத்தின் கல்யாணம் உறுதியாகப் போவதாகக் கேள்விப்பட்டேன்" என்று செல்லத்துரை கேட்டபோது பெருமூச்சு விடையாக எழுந்தது பிள்ளையிடமிருந்து.

"இந்தக் கல்யாணம் நடக்குமா, நடக்கப் போகிறதா வென்பதே எனக்கு நம்பிக்கையில்லை" என்றார் பிள்ளை.

தூக்கி வாரிப் போட்டது மீனாட்சிக்கு.

"நடப்பதற்கென்ன, நம் தங்கத்தின் கல்யாணம் ஜாம் ஜாமென நடக்கப் போகிறது. நல்ல சமயத்தில்தான் உங்கள் கொழுந்தி னரிலிருந்து வரப் போவதாகக் கடிதம் எழுதி யிருக்கிறாள்." செல்லத்துரை உற்சாகமாய்க் கூறிய போது மீனாட்சியின் வயிற்றில் ஏதோ புரள்வது போலிருந்தது.

அவளுக்குச் செல்லத்துரையைத் தெரியும். அவன் மனைவியைப் பற்றித் தெரியும். அவர்கள் இருவருக்கும் தங்கள் குடும்பத்தின் மீது—குழந்தைகள் மீதுள்ள பற்றும் பாசமும் நன்றாகத் தெரியும்.

உடல் உழைப்புக்கு அஞ்சுபவன்; உண்பவர்களை உறிஞ்சி வாழும் குணம் படைத்தவன். எப்படியோ வாழ்ந்தால் போதுமென இருப்பவன். கணவனுக்கேற்ற மனைவி காந்தா. அவன் ஏன் இப்போது வரவேண்டும்?

"உன் வேலை விஷயம் முடிவாகி விட்டதா?" மீனாட்சி கேட்க நினைத்ததைப் பிள்ளை கேட்டார்.

"அடுத்த மாதம் முடிவாகிவிடும். இந்தத் தடவை உறுதிதான்."

'எந்தத் தடவைதான் உறுதியில்லை' யென்று தனக்குள்ளேயே முணுமுணுத்துக் கொண்டாள் மீனாட்சியம்மாள்.

"ரொம்ப சந்தோஷம்" என்றார் பிள்ளை.

"வீடு பார்த்து விட்டேன். அட்வான்ஸ் மூன்று மாத வாடகை கேட்கிறார்கள். அவள் வருவதற்குள் வீட்டிலும் சாமான் தட்டுமுட்டுகள் ஏதாவது வாங்கிப் போட வேண்டும். முந்நூறு ரூபாய் பணம்...."

"பணமா?" கையில் எடுத்த சாதத்தை வாயில் போடாமல் திகைத்தார் பிள்ளை.

"ஆமாம், உங்களிடம்தான்."

"என்னிடம் ஏதப்பா பணம்?" அவர் குரலிலே வேதனை தெரிந்தது.

"தங்கத்தின் கல்யாணத்துக்காக வைத்திருப்பீர்கள் அல்லவா?"

"செல்லத்துரை! நெருப்புக் குழம்பாய் உருகியோடும் தார் ரோட்டிலே இத்தனை நேரம் எதற்காக எங்கெல்லாம் சுற்றி வந்திருக்கிறேன் என்பதைச் சொன்னால் உனக்கு என் நிலை புரியும்...!"

'பிறர் துன்பம் அறிய மாட்டாதவனுக்கு நீங்கள் எத்தனை முட்டிக் கொண்டால்தான் என்ன? உழைக்கும் எண்ணம் இருந்திருந்தால் உழைத்து உண்ணும் சக்தியும் என்றோ பிறந்திருக்குமே!' என்று கேட்கத் துடித்தாள் மீனாட்சி. ஆனால் அதைக் கேட்கவில்லை.

"கல்யாணச் செலவுக்கு வாங்கும் கடனோடு எனக்கும் முந்நூறு ரூபாய் எங்கேயாவது புரட்டிக் கொடுங்கள்."

பாறாங்கல்லைப் புரட்டி அவன் தலையிலே போட வேண்டுமென்று மீனாட்சியின் கைகளும் மனமும் பரபரத்தன. உள்ளுக்குள் பொங்கிய



சொத்தை அடக்கிக் கொண்டாள். செல்லாத இடத்துச் சினம் எழுந்து என்ன பயன்?

அவள் கணவர் கருங்கற் பாறையாயிற்றே. கைநிறையச் சம்பாதிக்கும் நாளில் எத்தனை மூட்டிக் கொண்டும் மோதிக் கொண்டும் தமக்கென்று, தம் குடும்பத்துக்கென்று வாழ்வு தேடிக் கொள்ளாமல் உற்றார் பெற்றோர் சுற்றமென வாரி வாரியிறைத்து இன்று தமக்கே தடுமாறும் நிலையில் நிற்பவராயிற்றே!

சாப்பிட்டதாகப் பெயர் பண்ணி விட்டு எழுந்து கைகழுவிக் கொண்டவர் சோர்வாக ஈஸிசேரில் சாய்ந்தார். வெற்றிலைப் பெட்டியைக் கணவனருகே வைத்த மீனாட்சியின் கண்கள் பின்னலை ஆராயத் தொடங்கின.

நியாயத்தின் பெயரால் தம்மையும் அழித்துக்கொண்டு தம் குடும்பத்தையும் சோதனைக்குள் நிறுத்தி வைக்கும் தன் கணவனைக் கண்டு வேதனைப் படுவதா? வெட்கப்படுவதா?

அவள் இப்படி எண்ணமிட்டுக் கொண்டிருக்கும்பொழுதே, தம்பியின் நம்பிக்கையைக் குலைக்கக் கூடாதென நினைத்தாரோ என்னவோ? விடுவிடென உள்ளேபோனார் பின்னலை.

வட்டியின் பேராலும் அடமானம் வைத்தும் பெண்ணின் கல்யாணச் செலவுக்காகச் சிறுகச் சிறுகச் சேகரித்துக் கொண்டிருந்த பணத்தில் முந்நூறு ரூபாயைத் தம்பியிடம் நீட்டினார்.

தன் பெண்ணின் செழுமையைப் பறித்து எறிவதுபோல் வேதனைப்பட்டாள் மீனாட்சி.

"இது உங்களுக்கே சரியெனப் படுகிறதா?" பெற்ற பாசம் துடிதுடிக்கப் பதறிய மீனாட்சியைத் தூவென உதறியெறிந்து விட்டார்.

"உனக்குள்ள பாசமும் கடமையும் எனக்கும் உண்டு. பேசாமல் உன் வாயை மூடிக் கொண்டிரு." பின்னலின் அதட்டலுக்கு மேலே பேச அவளுக்குத் தெம்புமில்லை, திடமுமில்லை. மனம் குமுறினாள்.

அவள் உள்ளக் கொதிப்பையோ, குமுறலையோ அடக்க வேண்டுமென்ற எண்ணமே பின்னலுக்கு இதுகாறும் எழுந்ததில்லை.

தோல்வியின் சுமை தாங்காது சுருண்டு விட்ட மீனாட்சியின் கண்களுக்கு, அலுங்காமல் நலுங்காமல், அடுத்தவன் பணத்தை எடுத்துப் பையில் செருகிச் செல்லும் செல்லத்துரை மனிதனாகத் தோன்றவில்லை.

உடலினின்றும் உயிரினின்றும் பிரித்தெடுத்த உதிரத்தின் மங்கள காரியத்துக்குப் பயன்பட வேண்டிய பணம், உடல் உழைத்து உயிர் வளர்க்க விரும்பாத ஊதாரியின் கைப்பொருளாக மாறிவிட்ட நிலையில், மீனாட்சி பெண்மையின் பொறுமைக்கு அப்பால் நகர்ந்து விட்டாள்.

"நேற்று வந்ததே மாப்பிள்ளை வீட்டாரிடமிருந்து கடிதம். அதை எடுத்து வா தங்கம். மீண்டும் ஒருமுறை படித்துப் பார்த்து உன் அப்பா நினைவுபடுத்திக் கொள்ளட்டும்..." வெறுப்பு நிறைந்த குரலில் மகளுக்கு உத்தரவிட்டாள் மீனாட்சி.

கணவனைப் புண்படுத்த வேண்டும் என்ற எண்ணம் அவளுக்கு இல்லைதான். ஆனாலும் வெந்து கொண்டிருக்கும் வேதனைத் தீயின் அனற்காற்று அவர்மீதும் தாவியது.

---

"குத்திப் பேசியது போதும், மீனாட்சி! குறிப்பிட்ட பணம் இல்லையானாலும் இந்தச் சம்பந்தம்இல்லையென்று எழுதியிருக்கிறார்கள். போகட்டுமே. இவர்கள் இல்லையானால் இன்னும் எத்தனையோ பேர்கள் நம் தகுதிக்குத் தகுந்தவர்கள் வராமலா போகிறார்கள்?"

மீனாட்சியின் உள்ளத்தில் பற்றிய நெருப்பு பல முனைக்கும் பரவி இதயமெங்கும் சூழ்ந்து கொண்டு அக்னி ஜ்வாலைக்குள் அமுக்கியது. நெருப்பின் புகை மூட்டத்தையும் மீறி ஒரு சில மங்களமான நினைவுகள்...

தங்கம் சிற்றாடை கட்டிய நாளில், தாவணி கட்டித் திரிந்த அக்கம் பக்கம் சிறுமியரெல்லாம் இன்று சின்னஞ்சிறு மழலையைக் கையில் ஏந்திப் பிறந்த வீடு வந்து செல்லுகின்றனர்.

தங்கம் பத்தரை மாற்றுத் தங்கம்தான், உருவத்திலும் குணத்திலும். செந்தாழம் குருத்துப்போல் பளபளத்து மின்னும் தங்கத்தின் அழகு தோன்றவில்லை; அவள் தந்தையிடம் பணம் இல்லாத குறையே, பெண்ணைப் பார்க்க வருகிறவர்களுக்குத் தோன்றியது.

பெண்ணின் மேனி அழகைக் காணாமல், அவள் மேனியில் மின்ன இருக்கும் அணியின் அழகில் கண்ணாக இருந்தார்கள்.

'பணமில்லாமலே மகளின் கல்யாணத்தை நடத்திக் காட்டுவேன்' என்று மார்தட்டிய பிள்ளையின் கொள்கைக்குச் சவுக்கடியாக நிற்கின்றாளே வளர்ந்தும் வளர்ச்சியின் பலன் பெறாநின்ற மகள். மலர்ந்து மணம் பெற வேண்டிய மலர்க்கொடி பணமென்னும் செழுமைக் குறைவால் வாடித் துவண்டு வாசமிழந்து கிடக்க வேண்டியதுதானா?

தந்தையிடம் கடிதத்தை நீட்டினாள் தங்கம். அவள் நீட்டியது தாயார் குறிப்பிட்ட கடிதமல்ல. அன்று காலைத் தபாலில் வந்த, 'கந்தசாமிப் பிள்ளையின் சகோதரி' எழுதியிருந்த கடிதம்தான். பிரித்துப் பார்த்தார் பிள்ளை.

கடல் ஆழத்திலே மூழ்க இருப்பவளைக் கையைப் பிடித்துக் கரைக்கு இழுப்பதற்குப் பதிலாகக் காலைப் பிடித்து ஆழத்துக்கு இழுப்பது போலிருந்தது அக் கடிதம். கந்தசாமிப் பிள்ளையின் தமக்கை எழுதியிருந்தாள்:

அவளது கணவருக்கு வயிற்றிலே ஓர் ஆபரேஷன் செய்ய வேண்டுமாம். விரைவில் செய்து முடிக்காவிட்டால் உயிருக்கே ஆபத்து என்று டாக்டர் எச்சரித்திருக்கிறாராம். தம்பியையே நம்பியிருப்பதாக நெஞ்சு உருக எழுதி யிருந்தாள். பணத்துக்கு வழிவகையும் காட்டி யிருந்தாள். பெண்ணின் கல்யாணம் ஏற்பாடாகி யிருப்பதை எப்படியோ அறிந்தவள் அதற்காக அவர் பணம் சேகரிப்பார் என்பதை அறியாமலா இருப்பாள்? எத்தனை முன்யோசனையுடன், 'அந்தப் பணத்திலாவது எனக்கு உதவு' என்று கேட்டிருந்தாள்.

மீனாட்சிக்கு மட்டும்தான் கருங்கற் பாறை, பிள்ளை. மற்றப்படி எல்லோருக்கும் உருகி யோடும் தங்கக் கம்பி.

விள்ளாமல் விரியாமல் இருநூறு ரூபாய் தபால் வழியே சென்றது.

பெண்ணின் வாழ்வை நினைத்து நினைத்து மீனாட்சி உருகி உருகித் தவித்தாள்.

மூன்றாம் நாள் பிள்ளையின் நெருங்கிய நண்பர் வந்தார். வந்தவரின் முகத்திலே



"இதென்னப்பா? ஈ எழுத்துக்கு மட்டும் மருந்து அடிக்கிறே?"
"'ஈ'யைக் கண்ட இடத்திலே மருந்து அடிக்கும்படிதாங்க எனக்கு உத்தரவு!"

நிலவியிருந்த ஆழ்ந்த அமைதியைக் கண்டு பிள்ளையே பதைத்து விட்டார்.

"என்ன விஷயம்?" என்று கேட்டவருக்கு நண்பரிடமிருந்து பதில் வந்தது. சிப்பந்திகள் பட்டுவாடாவில் நூறு ரூபாய் கைதவறி விட்டது. சொன்னவர் நாணயஸ்தர்; நம்பத் தகுந்தவர்.

பிள்ளையின் மனம் இளகியது.

தந்தையின் குறிப்பறிந்த மகள் பெட்டியிலிருந்த பாக்கி நூறு ரூபாயையும் எடுத்து வந்து கொடுத்தாள்.

நன்றியுடன் நண்பர் விடைபெற்றார்.

மீனாட்சி மனம் குமைந்தாள்: அவள் குமைச்சலையோ, உளைச்சலையோ ஏனென்று கேட்பாரில்லை; ஏறெடுத்தும் பார்ப்பாரில்லை. என்றும் போலவே இன்றும் மகள் அமைதியாக இருந்தாள். பிள்ளை ஆழ்ந்த மோனத்தில் அமிழ்ந்து விட்டார்.

இடையே இரண்டு வாரம் எப்படியோ கழிந்தது. மூன்றாம் வாரத்தில் ஒரு நாள் காலைப் பொழுது. நல்லது கெட்டது என்ற பாகுபாடு அறியும் அவசியமில்லாது பேதமில்லா மனத்தோடு கடமையே கண்ணாகச் செல்லும் தபால்காரர், தங்கத்திடம் ஒரு கவரை எடுத்துக் கொடுத்துவிட்டுச் சென்றார்.

பெற்றவள் துடித்தாள் என்னவாயிருக்குமோ என்று; பிள்ளை சிரித்தார் எதுவானாலும் சரி என்பது போன்று.

அமைதியாக நடந்து வந்தாள் தங்கம்.

வெற்றிவாகை சூடிய களிப்பு அவள் முகத்திலே துள்ளிக் கொண்டிருந்தது.

"என்னை ஆசீர்வதியுங்கள் அப்பா."

"எதற்கு?" என்று ஆச்சரியத்துடன் நெற்றியைச் சுருக்கினார் தந்தை.

"இண்டர்வியூவுக்கு அழைப்பு வந்திருக்கிறது. போகிறேன்"

பதறினார் பிள்ளை.

குனிந்த தலை நிமிர்த்தாமலே பதிலளித்தாள் தங்கம். "என் கல்யாணத்தின் பொருட்டு நீங்கள் படும் அவதியையும் அம்மா அனுபவிக்கும் வேதனையையும் உணர்வேன்: உலகத்தின் நியதிக்கு மாறுபட்ட மனம் கூடாது என்பதற்காகவே நீங்கள்பட்ட அவதியைக் கண்டும் என்னுள்ளேயே குமைந்து என் உணர்ச்சிகளை மறைத்து வைத்திருந்தேன். நீங்களும் எங்கெங்கேயோ சுற்றினீர்கள். குருவி இரை சேர்ப்பது போல் சிறுகச் சிறுகக் கடனும் முதல் தேடினீர்கள். அந்தப் பணத்தை யார் யாரோ பங்கிட்டுச் சென்று விட்டார்கள். இனி அந்தப் பணம் உங்கள் கைக்கு வருமென்ற நம்பிக்கை உங்களுக்கு இருக்கிறதாப்பா?"

மகள் கேள்விக்கு என்ன பதில் சொல்வார்? எப்படிப் பதில் சொல்வார்?

மகள் பேசுவதைக் கேட்டுச் சிலைபோல் நின்ற மீனாட்சியின் கண்களிலிருந்து இரு முத்துக்கள் புறப்பட்டு வழிந்து கொண்டிருந்தன.

பிள்ளை தலை நிமிரவே இல்லை.

"இனி அந்தப் பணம் வரவே வராது. அதைப் போல் மீண்டுமொரு முறை பணம் சேகரிப்பதென்பது..."

"என் கையாலாகாத்தனத்தைக் கட்டிக் காட்டாதேயம்மா தங்கம்... இப்படியொரு நிலை ஏற்படுமென்று உன் அம்மா என்றோ சொல்லியதுண்டு. நான் நினைத்த உலகம் வேறு. நான் வாழும் உலகம் வேறு என்பதை உணரும் நிலை வந்தபோது என்னுள் நான் அனுபவிக்கும் வேதனை போதும்."

கருங்கற்பாறை இளகிக் கண்ணீர் சிந்தியது.

அதிகாரத்தைக் கண்டு மிரண்டவளே தவிர அன்பைக் கண்டு — அன்பின் இனக்கத்தை உணர்ந்தவள் அல்ல மீனாட்சி.

உருகாத நெஞ்சம் உருகிவிட்டது. உணர்ச்சிச் சுழிக்குள் தள்ளிவிட்டாள் தந்தையை. இனி மீட்கும் வழி...?

கண்களைத் துடைத்துக் கொண்ட மீனாட்சி, "தங்கம்!" என்றவள் "மேலே பேசாதே உன் அப்பாவிடம்!" என்று அதட்டினாள்.

"அப்பா மனம் புண்படும்படியாக எதுவும் சொல்லி விடமாட்டேன் அம்மா. அப்பா படும் அவதியிலிருந்து விடுதலை கொடுக்கப் போகிறேன். நான் வேலைக்குப் போகிறேன்!"

"என்ன?"

"ஆமாம். அப்பா வெளியிலே சிந்தவிட்டிருக்கும் பணம் திரும்பிவரப் போவதில்லை. ஆனால் அப்பாவுக்குக் கடன் கொடுத்தவர்களோ வட்டியும் முதலுமாக வாங்காமல் விட்டுப் போவதில்லை. அந்தக் கடனை அடைப்பதற்காகவாவது, என் கல்யாணம் என்ற பெயரால் வாங்கப் பெற்ற கடனை அடைக்கும் வரையிலாவது வேலைக்குப் போகத் தீர்மானித்து விட்டேன். அதற்கு அனுமதி கொடுங்கள் அப்பா..."

பிள்ளையின் தலை நிமிரவேயில்லை.

மறுவாரம். முப்பத்து முக்கோடி தேவர்கள் ஆசீர்வதிக்க பந்துஜன ஆரவாரத்துடன் மணமேடைக்குச் செல்ல வேண்டிய தங்கம், பெற்றவர்கள் ஆசியுடன் தெரு ஜனங்கள் அதிசயித்து நிற்க வேலைக்குப் புறப்பட்டபோது பிள்ளையின் கண்கள் கலங்கி நின்றன.

## உங்கள் குழந்தைகளுக்கு

# இருமல், ஜலதோஷம் இருந்தால்





# ஸிரோலின் 'ரோஷ்'

## கொடுத்து பூர்ண நிவாரணம் பெறச் செய்யுங்கள்




உங்கள் குழந்தைகளுக்கு இருமல் அல்லது ஜலதோஷம் இருந்தால் அசட்டையாய் இருக்காதீர்கள்—ஸிரோலின் கொடுத்து அபாயமின்றி துரிதமாக பூர்ண நிவாரணம் பெறச் செய்யுங்கள். அதன் இனிய ருசியை உங்கள் குழந்தைகள் பெரிதும் விரும்புவார்கள். ஸிரோலின் உங்களுக்கும் மிகச் சிறந்தது! அது உங்கள் இருமலை நிறுத்துவதோடு மட்டுமல்லாமல், இருமலை உண்டுபண்ணும் கிருமிகளைக் கொல்லவும் செய்கிறது. ஸிரோலின் தொண்டைப் புண்களுக்கு சமனமூட்டுகிறது. கபம் மற்றும் சளியைப் போக்குகிறது. அது எவ்வளவு கடுமையான இருமலிலிருந்தும் அபாயமின்றி துரிதமாக நிவாரணமளிக்கிறது.

**உங்கள் வீட்டில் எப்பொழுதும் ஸிரோலின் வைத்திருங்கள்**

'ரோஷ்' தயாரிப்பு

ஸோல் டிஸ்டிரிப்யூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்

# சீர்கண்ட செம்மல்

**[இராஜாஜி சொல்வதுபோல் கோவை அய்யாமுத்து பாடியது]**

என்னருமைத் தோழனுமாய்
 ஈசனது தூதனுமாய்
அன்புநெறிக் காவலனும்
 அறநெறிகள் காண்பவனும்
என்னருகி லேயிருந்தான்
 இனியவனைக் காண்பதெங்கே ?
துன்பமறும் பொன்மொழிகள்
 சொல்வதற்கு யாரினிமேல் ?
என்மனதைக் கவ்வுகின்ற
 இடர்நீக்கி எப்பொழுதும்
அன்புமழை பெய்திடவும்
 அயர்வடைந்த நேரமெலாம்
இன்பமொழி தான்பொழிந்து
 இளமைபெறச் செய்திடவும்
வன்மையுள வீரனென
 வாழ்ந்தவனும் ஏகினனே !

2

சீர்கெட்ட செயல்கண்டு
 சிந்தை நொந்து
சோர்வுற்ற போதெலாம்
 தைரியம் தந்து
கார்பெற்ற பயிரெனக்
 களிக்கச் செய்தான்
ஊர்அற்ற உறவற்ற
 அனுதை போன்று
நீர்வற்றிப் பாழ்பட்ட
 கிணறே போன்று
யார்உண்டு கதியென்று
 திகைத்த போழ்து
பார்உண்டு பரன்உண்டு
 பயமேன் என்றே
சீர்கண்ட செம்மலேன்
 கப்பால் சென்றான் ?

3

உழைத்துழைத்து அலுப்படைந்த
 இளைப்புமாற
உறுதியுளபகலைாபு இறுதிசேர
அழைப்புனக்கு வந்ததுவோ
 அன்பாநீதான்
அறைந்துவிட்டுச் சென்றிருந்
 தால் குறைந்துபோமோ
பிழைத்திருந்து பிழைதிருத்திப்
 போதம் சேர்த்தும்
பெற்றநலம் போதுமெனப்
 புனிதா நீதான்
தழைத்திருந்த மக்களுடன்
 மனையாளிங்கு
தனித்திருந்து புழுங்கவென
 விட்டாயென்னே !

4

அறப்பெருங் குன்றும்
 அருங்குண வாளனும்
இறப்பினுந் நீநெறி
 எண்ணுந் தூயனும்
பெறத்தகு பேறெலாம்
 விடுத்தநற் றுறவியாய்
உறக்கமும் உண்டியும்
 உடைமணி கருங்கியும்
பிறர்க்குப காரமே
 பேணிடும் யோகியாய்
மறவர்மா வீரமும்
 மாசிலா நேசமும்
புறத்திலும் அகத்திலும்
 பூண்டவன் போயினன்.

5

உடல்வலி குன்றியும்
 உளம்வலி குன்றிலான்
மடல்பல வரைந்து
 மாநிலம் தழைக்கக்
கடலினும் பெரிதாய்
 கடமையே ஆற்றினன்
உடலுயிர் ஈந்த
 உத்தமன் அடிகளைத்
திடமுடன் காணச்
 சென்றனன் சரிதான்
இடம்பெற் றிடுவான்
 இடரற் றிடுவான்
சுடரொளி வீசும்
 சூரியன் போன்றே
தொடரத் திருப்பான்
 தூயவன் வாழ்கவே !







சுவையுள்ள
ஆரோக்கியமளிக்கும்
மற்றும்
விட்டமின்
நிறைந்த

# பார்லேயின்
# க்ளூகோ
# பிஸ்கட்டுகள்

இந்தியாவில் மற்றெந்த பிராண்ட்
பிஸ்கெட்டையும் விட அதிகம்
விற்பனையாகின்றன !

IS:1011
ISI

பார்லே ப்ராடக்ட்ஸ் மானுபாக்சரிங் கம்பெனி பிரைவேட் லிட்., பம்பாய்-57.

FP-300A-TAM




லின்ஸி மீது உண்டான சந்தேகம் நீங்கப் பெற்றதும் நளினியையும் அவளைச் சேர்ந்த மற்றவர்களையும் வளைத்துப் பிடிக்கத் தனக்கு அவள் உதவவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறான் குமார்...

15













என் தாயார்!
உனக்கு இந்த உடை பொருந்தி இருப்பதன் காரணம் எனக்கு இப்போது விளங்குகிறது, வின்மி!


வின்மி தன் பெற்றோர்களின் கதையைக் குமாருக்கு விரிவாக எடுத்துரைக்கிறாள். சமூகத்தின் பலமான எதிர்ப்புக்கிடையில் சீன தேசத்தவரைத் தன் தாயார் காதலித்து மணம் புரிந்து கொண்டதையும், அதனால் ஊராரின் ஏச்சுக்கு ஆளானதையும் அதனைத் தாங்கும் சக்தியின்றி, வின்மியைப் பெற்றெடுத்த சிறிது காலத்திற்குள் அவள் உயிர் பிரிந்ததையும் கூறுகிறாள்...


குமார்! சிறுமியாக இருந்தபோதே தாயை இழந்தேன். இன்று தந்தையையும் பறி கொடுத்து விட்டு நிற்கிறேன். என்னைக் கை விட மாட்டீர்களே?


குமார் பதிலளிப்பதற்குள் டெலிபோன் ஒலிக்கிறது.
போன் எனக்காகத் தான் இருக்கும். ஹலோ!.. இன்ஸ்பெக்டரா?... இதோ வந்து விட்டேன்.


வின்மி! நான் கொஞ்சம் அவசரமாகப் போகவேண்டியிருக்கிறது. பிறகு சாவகாசமாகப் பேசுவோமே?


ஏன் அவர் மனம் இளக மாட்டேனென்கிறது?


ஏமாற்றத்துடன் குமாரை அனுப்பி வைக்கிறாள் வின்மி.
கடைத் தெருவில் இன்ஸ்பெக்டர் குமாருக்காகக் காத்திருக்கிறார்.


லாஷாவின் ஆபீஸருகே ஒரு ஸி.ஐ.டியைப் போட்டிருந்தேன். ரவி இங்கு வந்திருப்பதாக அவனிடமிருந்து தகவல் கிடைத்தது. உடனே உங்களுக்கு 'போன்' செய்து விட்டு நானும் வந்தேன்.


இப்போது அவர்கள் எங்கே?
வியாபாரம் செய்வது போன்ற பாவனையில் ரகசியப் பேச்சு வார்த்தைகள் நடத்திக் கொண்டிருக்கும்.


குமார், ரவியை உடனே அரெஸ்ட் செய்து விட்டா லென்ன?
வேண்டாம்! ஸாஹா உடனே உஷாராகி விடுவான். நம்மி டமுள்ள துருப்புச் சீட்டுகளை அவன் அறியக் கூடாது.


நான் பெட்டியைக் கோட்டை விட்டதாக ஸாஹாவிடம் கூற ரவி பயப்படுவான். சாக்குப் போக்கு சொல்லிவிட்டு டில்லி திரும்ப யத்தனிப்பான்.
சரி, காத்திருந்து பார்ப்போம்.


இதற்கிடையில் கூண்டுக் கிளியாக்கப் பட்ட ஷியாமா ஸாஹாவின் பங்களாவுக்குள் மெல்ல உலவி வருகிறாள்.
இங்கிருந்து தப்ப வழியே இல்லை போலிருக்கிறதே. குமாருக்கு ஒரு செய்தி யேனும் அனுப்ப முடிந்தால்... ஆனால் அது எப்படிச் சாத்தியமாகும்?


இத்தருணத்தில் அருகில் எங்கேயோ முனகல் சத்தம் கேட்கவே ஷியாமா அதிர்ச்சியடைகிறாள்.
என்ன பரிதாபமான ஒலி! அதோ அந்த அறையிலிருந்துதான் வருகிறது...


ஓசை வந்த திக்கில் போய்... ஒரு திரையை ஷியாமா விலக்க...
ஆ! இது என்ன பயங்கரம்?
பெண்ணே! பயப்படாதே! நான் பேயோ, பிசாசோ அல்ல. என் பெயர் ரஹீம்...




[காரணம் இன்றிக் காரியம் இல்லை. காற்று இன்றேல் வானின் வண்ணமுகில்கள் சித்திர வடிவம் பெறமாட்டா. எந்த ஒரு தோற்றத்துக்கும் ஏதேனும் ஒரு தோற்றுவாய் இருந்தே ஆக வேண்டும். இது விதி. சிருஷ்டியின் சிருஷ்டி விதி. எண்ணங்களின் லிபி வடிவமான இலக்கியமும் இந்த விதிமுறைக்கு உட்பட்டவற்றில் ஒன்றுதான்.]

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பத்தெட்டாம் வருஷம் ஜூலை மாதம் 18ம் தேதி வெள்ளிக்கிழமை இரவு ஒன்பதரை மணிக்கு சென்னையிலிருந்து புறப்பட்ட பம்பாய் மெயிலின் முதல் வகுப்புப் பெட்டியில் ஏறி அமர்ந்த பிறகு தான் எனக்கு ஒரு விஷயம் தெரிய வந்தது.

என்னுடன் சினிமா நடன நடிகையொருத்தியும் அவளுடைய தாயாரும் அந்த வண்டியில் வந்தார்கள். இதற்கு முன் அவர்கள் எனக்கு அறிமுகமில்லை. ஆனால் வண்டி புறப்பட்ட சிறிது நேரத்துக்கெல்லாம் அவர்களும் நானும் ஒரே இடத்துக்கு ஒரே காரிய நிமித்தம் போகிறோம் என்பதைத் தெரிந்து கொண்டோம்.

"என்னங்க அண்ணாச்சி! பம்பாயிலே நல்ல மழையாமே? பூனாவுக்கும் கல்யாணுக்கும் நடுவே ரயில் தண்டவாளத்துக்கு மேலேயே தண்ணி ஓடிக்கிட்டு இருக்குதாம்!" என்று சற்றே பயந்த குரலில் சொன்னாள் நடிகையின் தாயார்.

"ஆமாங்கம்மா! காலையில் பத்திரிகையிலே பார்த்தேன். பருவ மழை ஆரம்பமாகி ஒரு வாரமாகிறதாம்" என்றேன்.

"எங்களுக்கு இது முன்னமே தெரிஞ்சிருந்தா விமானத்துக்கு டிக்கெட் எடுத்துக் கொடுக்கச் சொல்லிக் கேட்டிருப்போம்!" என்று கவலைப்பட்டாள் அந்த அம்மையார்.

இது வரை மௌனமாயிருந்த நடிகை 'களுக்'கென்று சிரித்தாள். ரயில் வண்டியின் இரைச்சலையும் மேவிக் கொண்டு எழுந்த ஒரு நீண்ட குறட்டை ஒலியைக் கேட்டே அவள் அப்படிச் சிரித்தாள். நான் நிமிர்ந்து பார்த்தேன். என் தலைக்கு மேலே இருந்த 'அப்பர்-பர்த்'தில் ஒரு பெரியவர் நன்றாகப் போர்த்துக் கொண்டு படுத்துச் சுகமான நித்திரையில் ஆழ்ந்திருந்தார். வண்டி அப்போது தான் ஆவடியைக் கடந்து கொண்டிருந்தது. அப்படியானால் அவர் வண்டி புறப்படுவதற்கு வெகு முன்னமேயே வந்து தம் இருக்கையில் படுத்து விட்டிருக்க வேண்டும். இல்லையானால் இவ்வளவு சீக்கிரம் இத்தனை லய சுத்தமான குறட்டை நாதத்தை எழுப்ப முடியாது!

நானும் என் மெத்தையை விரித்துப் போட்டுப் படுத்தேன். தாயும் மகளும் தங்கள் தொழில் சம்பந்தமாக ஏதோ அதிருப்தியுடன் உரையாடிக் கொண்டிருந்தார்கள். வண்டி அரக்கோணத்தை அடைவதற்குள் எனக்குத் தூக்கம் வந்து விட்டது.

மறு நாள் காலை குண்டக்கல்லில் வண்டி நின்ற போது துயிலெழுந்தேன்.

ஜெகசிற்பியன்



மேலே படுத்திருந்தவர் எனக்கு முன் எழுந்து விட்டிருந்தார். நான் கீழே இறங்கிப் போய்க் காலை உணவை முடித்துக் கொண்டு வந்தேன். அப்போது அந்தப் பெரியவர் ரயில்வே அதிகாரிகளுடன் ஏதோ கோபமாகப் பேசிக் கொண்டிருந்தார். அவர்கள் அவரைச் சமாதானப்படுத்த முயன்று கொண்டிருந்தார்கள். அந்த வண்டியோடு இணைந்து வந்த காண்டீனின் சர்வர் ஒருவன் கிலியடித்துப் போய்ப் பக்கத்தில் நின்று கொண்டிருந்தான். நான் அங்கு நடந்த விஷயத்தைப் புரிந்து கொள்ள முயன்றேன். அதற்குள் வண்டி புறப்பட்டு விட்டது. பெரியவர் மறுபடியும் மேலே ஏறிப் படுத்து விட்டார்.

சலிப்புமிக்க அந்தப் பிரயாணத்தின் பகல் பொழுது ஒரு நிறுசாகக் கழிந்தது. பகலெல்லாம் வறுத்துக் கொண்டிருந்த வானம், மாலை நான்கு மணி வாக்கில் வாடி ஸ்டேஷனை வண்டி கடந்தபின், மந்தாரம் போட்டுக் கருக்கத் தொடங்கி, குல்பர்காவை அடைவதற்குள் பலத்த மழை பெய்ய ஆரம்பித்து விட்டது.

குல்பர்கா ஸ்டேஷனை விட்டு வண்டி புறப்பட ஒரு நிமிஷம் இருந்தபோது நாங்கள் இருந்த கம்பார்ட்மெண்டில் இரண்டு கன்னடக்காரர்கள் வந்து ஏறினார்கள். அவர்களில் ஒருவர் மேலே படுத்திருந்தவரைப் பார்த்து, "அடடே! நீங்களும் இந்த வண்டியிலேதான் வரீங்களா சார்?" என்று கொச்சைத் தமிழில் கேட்டார்.

"வாப்பா! சௌக்கியமா? எங்கே, நாக்பூர்தானே?" என்றார் பெரியவர். பிறகு அடுத்தவரையும் பார்த்து ஆங்கிலத்தில் குசலம் விசாரித்தார். அவர்கள் மூவரும் காங்கிரஸ் கட்சி சம்பந்தமாக ஏதேதோ பேசிக் கொண்டார்கள். வண்டி ஹோட்கி ஸ்டேஷனில் சிறிது நேரம் நின்று விட்டுப் புறப்பட்டது.

"காப்பி சாப்பிடணுமே, எங்கே கிடைக்கும்?" என்றார் தமிழ் தெரிந்த கன்னடக்காரர்.

"ஆமாம்; உனக்கு ஒரு விஷயம் தெரியுமோ?" என்று பேச்சை ஆரம்பித்த பெரியவர், "இங்கே காண்டீனிலிருந்து கொண்டு வந்து கொடுக்கும் காப்பி விலை என்ன?" என்று கேட்டார்.

"அஞ்சணா! ஏன்?" என்று கேட்டார் கன்னடக்காரர்.

"காலம்பற எனக்கு ஆறணா பில் போட்டு விட்டார்கள்."

"அதெப்படிப் போடலாம்?"

"நானும் அதைத்தான் கேட்டேன். ஏதேதோ நொண்டிச் சாக்குச் சொல்லுறுன்கள்."

"மோசம்! இதையெல்லாம் சும்மா விடப்படாது சார்! இதுக்குன்னு ஒரு கேள்வி எழுப்பினாக் கூடத் தேவலை!"

"என்ன விஷயம்?" என்று ஆங்கிலத்தில் விசாரித்தார் இன்னொரு கன்னடக்காரர். விஷயம் அவருக்கு விளக்கப்பட்டது. நானும் விளங்கிக் கொண்டேன். குண்டக்கல் ஸ்டேஷனில் பெரியவருக்குக் கோபம் வந்த காரணம் இப்போது தான் எனக்குப் புரிந்தது! இந்தச் சிறிய விஷயத்தை இவ்வளவு பிரமாதப்படுத்திப் பேசிக் கொண்டிருக்கும் அந்தப் பெரிய மனிதர்கள் யார் என்பதை அப்போது நான் தெரிந்து கொள்ளவில்லை.

இரவு ஒன்பது மணிக்கு ஷோலாப்பூரில் வண்டி நின்றது. இதுவரை இடியும் மின்னலுமாகப் பொழிந்து கொண்டிருந்த மழை இங்கு சற்று ஓய்ந்தது. இரவு உணவு ஆனதும் நடிகையும் அவள் தாயாரும் படுத்து விட்டார்கள். எனக்கும் கண்ணைச் சுற்றியது. ஆனால் கதர்ச் சட்டைக்காரர்கள் உரக்கப் பேசிச் சிரித்துக் கொண்டிருந்ததால் தூங்க முடியவில்லை. மழை இலேசாகப் பெய்து கொண்டிருந்தது. குர்டுவாடி ஸ்டேஷனை வண்டி கடந்தபின் அவர்கள் பேச்சு ஒருவாறு அடங்கியது. மேலே படுத்திருந்த பெரியவர், தமிழ் தெரிந்த கன்னடக்காரரிடம், "யோவ், ஒரு பாட்டுப் பாடுமையா!" என்றார். உடனே பாட ஆரம்பித்து விட்டார் கன்னடக்காரர். அது ஒரு பட்டமான ஹிந்தி சினிமாப்பாட்டு; நடிகையும் அவள் தாயாரும் இடையிடையே தலையைத் தூக்கிப் பார்த்து விட்டுப் போர்வைக்குள் சுருண்டனர். எனக்கு ஒரே எரிச்சல். மெல்லவும் முடியாமல் விழுங்கவும் மாட்டாமல் புகைந்து கொண்டிருந்தேன். பாட்டு முடிந்த சிறிது நேரத்துக்கெல்லாம் பெரியவரின் குறட்டை நாதம் ஆரம்பமாகியது. பாடியவரும் அவருடன் சேர்ந்து குறட்டை விட்டார் தமிழ் தெரியாத கன்னடக்காரர் மட்டும் பத்திரிகை படித்துக் கொண்டிருந்தார்.

பன்னிரண்டு மணிக்குத் தோண்ட் ஸ்டேஷனில் வண்டி நின்றது. மழையும் நின்று விட்டிருந்தது. ஆனால் அரை மணி நேரமாகியும் வண்டி கிளம்பவில்லை.

பாதித் தூக்கமும் பாதி விழிப்புமாக இருந்த நான் மெள்ள எழுந்து வெளியே எட்டிப் பார்த்தேன். அந்த ரயில் வண்டியில் பிரயாணம் செய்து வந்த பாதிக்கு மேற்பட்ட ஜனங்கள் பெட்டிப் படுக்கை மூட்டை முடிச்சுக்களுடன் கீழே இறங்கிப் பிளாட்பாரத்தில் கும்பல் கும்பலாக உட்கார்ந்து கொண்டிருந்தனர். எங்கும் ஒரே இரைச்சலும் பேச்சுமாக இருந்தது.

இந்தச் சந்தடியில் தூங்கிக் கொண்டிருந்த பெரியவர் விழித்துக் கொண்டார். பிறகு அவரது நண்பர்களும் எழுந்தார்கள். பெரியவர் ஒரு டி. சி.யை அழைத்து விவரம் விசாரித்தார்.




பூனாவுக்கும் கல்யாணுக்கும் இடையே ஒரு பாலம் மழை வெள்ளத்தால் அடித்துச் செல்லப்பட்டு விட்டதால் இந்த வண்டியை மன்மாட் வழியே திருப்பி இகத்புரி மார்க்கமாகப் பம்பாய்க்குக் கொண்டு போக உத்தேசிக்கப்பட்டிருக்கிறதென்றும், எனவே, பூனா வழிய கல்யாணுக்கிடையிலுள்ள ஊர்களுக்குப் போகிறவர்கள் இவ்வண்டியை விட்டுக் கீழே இறங்கிவிட வேண்டுமென்றும், நேரே பம்பாய் போகிறவர்கள் மட்டுமே வண்டியில் இருக்கலாம் என்றும் டிக்கட் பரிசோதகர் விஷயத்தை விளக்கினர்.

"இதை நீங்கள் இவ்வளவு நேரமாக எங்களிடம் ஏன் வந்து விசாரிக்கவில்லை?" என்று பெரியவர் கோபித்துக் கொண்டார்.

"முதல் வகுப்புப் பிரயாணிகள் தூங்கிக் கொண்டிருக்கும் போது அவர்களை எழுப்பக் கூடாது என்ற ரயில்வே சட்டத்தை இவர் தீவிரமாகக் கடைப் பிடித்து விட்டிருக்கலாம்!" என்று ஹாஸ்யம் பேசினர் சினிமாப் பாட்டுப் பாடிய கன்னடக்காரர்.

நான் பிளாட்பாரத்தில் உலவிக் கொண்டிருந்தேன். அசந்தர்ப்பமாக என் பார்வை, நாங்கள் பிரயாணம் செய்யும் பெட்டியின் வெளிப்பக்கத்தில் செருகியிருந்த ரிசர்வ் பட்டியலில் சென்றது. என் பெயருக்கும், நடிகை-நடிகையின் தாயார் பெயர்களுக்கும் மேலே அந்தப் பெரியவரின் பெயர் இருந்தது. அந்தப் பெயரைப் பார்த்த நான் வியப்புற்றேன். காரணம், அவர் ஒரு பார்லிமெண்ட் அங்கத்தினர்! வண்டி புறப்பட்ட சிறிது நேரம் கழித்து மற்றொரு விஷயமும் எனக்குத் தெரிந்தது. அந்தக் கன்னடக்காரர்கள் இருவருங்கூட லோக சபை அங்கத்தினர்கள்தாம்! நாகபுரி காங்கிரஸ் மகாநாட்டில் கலந்துகொள்வதற்காக அவர்கள் மூவரும் போகிறார்கள்.

பல்வேறு அரசியல் விஷயங்கள் அவர்களுடைய பேச்சில் அடிபட்டன. அவற்றில் முக்கியமாக என் கவனத்தைக் கவர்ந்தவை மூன்று: நாகபுரி காங்கிரஸ் மகாநாட்டில் கொண்டு வரவிருக்கும் நிலச் சீர்திருத்த தீர்மானம்; காங்கிரஸ் கட்சிக்கு அடுத்த தலைவராக ஸ்ரீமதி இந்திரா காந்தி தேர்ந்தெடுக்கப்படலாம் என்ற ஹேஷ்யம்; திரு காமராஜ நாடார் அரசாங்கக் காரைப் பயன்படுத்திக் கொள்ளாத பெருந்தன்மை முதலானவை.

நான் தூங்கிப் போய்விட்டேன். விடியற்காலை ஆறு மணிக்குத் துயிலெழுந்தேன். வண்டி எந்த ஸ்டேஷனிலும் நிற்கவில்லை; ஆனால் மிகவும் நிதானமாகவே போய்க் கொண்டிருந்தது. எங்கு பார்த்தாலும் ஒரே வெள்ளக் காடாகவே காட்சியளித்தது.

மன்மாட் ஸ்டேஷன் நெருங்கிக்கொண்டிருந்தது. மன்மாட்டுக்குத் தெற்கே 'ராம்குல்னி' என்னும் சிறிய குன்று ஒன்று தெரிந்தது. அந்தக் குன்றின் உச்சியில் சுமார் தொண்ணூறு அடி உயரமுள்ள — நாற்கோண ஸ்தம்பம் போன்ற—ஒரு கற்பாறை இயற்கையாகவே நின்றிருந்தது. அந்த அதிசயப் பாறையை நான் வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தேன். மன்மாட் ஸ்டேஷனில் வண்டி நின்றது.

காப்பி சாப்பிடுவதற்காகக் கீழே இறங்கினேன். மன்மாட்டிலிருந்து அவுரங்காபாத்துக்கு ஒரு கிளைப் பாதையும் ஜல்கான் ஜங்ஷனுக்கு நேர்ப் பாதையும் பிரிகிறது என்ற அறிவிப்புப் பலகையைப் பார்த்ததும் என் மனத்தில் ஒரு விசித்திர ஆசை தோன்றியது. அவுரங்காபாத்துக்குப் போய் அங்கிருந்து பதின்மூன்று மைல்களுக்கு அப்பாலுள்ள எல்லோராக் குகைகளையும், பிறகு ஜல்காவுக்குத் திரும்பி அங்கிருந்து முப்பத்தெட்டு மைலிலுள்ள ஜகப்பிரசித்தி பெற்ற அஜந்தாக் குகைகளையும் பார்த்துவிட்டு வரவேண்டுமென்ற ஆசைதான் அது. விநாடிக்கு விநாடி இந்த விருப்பம் மேலோங்கவே, நடிகையின் தாயாரிடம் இவ்விவரத்தை முதலில் கூறிவிட்டுப் பிறகு டிக்கட் விஷயமாக ரயில் அதிகாரிகளிடம் பேசலாம் என்ற முடிவுடன் கம்பார்ட்மெண்ட்டுக்கு விரைந்து வந்தேன்.

அப்போது அந்த மூன்று எம். பி.களும் காப்பி அருந்திக்கொண்டே நிலச் சீர்திருத்த விஷயமாக வெகு தீவிரமாய்ப் பேசிக் கொண்டிருந்தார்கள். அன்று காலைப் பத்திரிகையில் ஏதோ ஒரு செய்தியைப் படித்து விட்டுத்தான் அவர்கள் அப்படிச் சூடு பரக்கப் பேசினார்கள்.

(மன்மாட்டில் வண்டி மாறி ஜல்கான் மார்க்கமாக நாகபுரிக்குப் போகலாம் என்றாலும் அவர்கள் ஏனோ அப்படிச் செய்யவில்லை. ஒருகால் பம்பாயிலிருந்து விமான மூலம் நாகபுரி போவது அவர்கள் திட்டமாக இருக்கலாம்.)

நான் வண்டியில் ஏறிய சமயம், சினிமாப் பாட்டு பாடிய கன்னட எம்.பி. ரொம்பவும் ஆவேசமாகக் கையை ஆட்டி உணர்ச்சிப் பெருக்குடன் தமது நண்பர்களிடம் சொல்லிக் கொண்டிருந்த ஒரு விஷயம் என் கவனத்தைக் காந்தம் போல் கவர்ந்தது :

"இங்கே பாருங்கள், சார்! நாலு காசைக் கையில் பிடிச்ச எவன்தான் யோக்கியனாக இருக்கிறான்? ஒன்னைப் பத்தாக்க நினைப்பது மனுஷ மனசிலெழுகிற இயற்கையான பேராசை. அந்த ஆசை உள்ள வரையில் எவனையும் சமூகத்தின் தர்மகர்த்தாவாகப் பாவிச்சுட முடியாது. சுரண்டிப் பிழைக்க வழி வைச்சு, அப்படிச் சுரண்டினதிலே ஒரு பகுதியைச் சுரண்டப் பட்டவங்களுக்குப் பிரிச்சுக் கொடுக்கச் சொல்றது புத்திசாலித்தனமில்லே. அதர்மத்தால் தலை தூக்கினவன் எப்படி சார் தர்மகர்த்தாவாக மாறுவான்? மாறுவான்னு நம்பத்தான் முடியுமா சார்? நேத்துவரை 'நில்பாலன்ஸ்' பேர்வழியாய் இருந்தவன் ஏதேதோ பித்தலாட்டத்தனம் பண்ணி, இன்னைக்கு ஒரு முதலாளியாகவோ நிலச்சுவான்தாராகவோ ஆகிறான்னு வைச்சுக்குவோம்; இப்படி உயர்ந்தவன் தன்னோட பழைய தோஸ்துகளிடம் எப்படி நடந்துக்குவான்? தன்னை ஒரு தர்மகர்த்தான்னு எண்ணித் தர்மப் பிரபுவா நடந்துக்குவானா! தன் நிலைக்கு அவங்களும் உயர்ந்து வரட்டும்னு வழிதான் விடுவானா? அப்படி விட்டுட்டா, அப்புறம் அவனோட பித்தலாட்டத்தனத்துக்கு மதிப்பு ஏது?"

தமிழக எம். பி. இதைக் கேட்டுப் புன்முறுவல் பூத்தார். பதிலேதும் சொல்லாமல் தலையசைத்தவாறு பத்திரிகை படிப்பதில் கவனம் செலுத்தினார். கன்னட எம். பி.கள் தங்கள் மொழியில் இதே விஷயமாகப் பேசிக் கொண்டார்கள். எனக்கு அது விளங்கவில்லை.

இந்தப் பேச்சு எந்தப் பிரச்னையிலிருந்து ஆரம்பமாகியது என்பது எனக்குத் தெரியாவிட்டாலும், விஷயத்தின் முத்தாய்ப்பைக் கொண்டு இதன் மூலப் பிரச்னை எதுவாயிருக்கும் என்பதை என்னால் ஓரளவு ஊகிக்க முடிந்தது.

அந்தக் கன்னட எம். பி. உதிர்த்த 'பொன் மொழி'யில் அப்படி என்னதான் காந்த சக்தி இருந்ததோ தெரியவில்லை. அது என் மனத்தில் மிகவும் கவர்ச்சிகரமாகப் பதிந்து, திரும்பத் திரும்ப அதைப் பற்றியே சிந்திக்க வைத்து விட்டது. இந்த விசித்திர மனவேக்காட்டில், எல்லோராவையும் அஜந்தாவையும் துப்புரவாக மறந்து விட்டேன். மன்மாட்டிலிருந்து புறப்பட்ட வண்டி இகத்புரி மார்க்கமாகச் சென்று கொண்டிருந்தது.

தலையைச் சுற்றி மூக்கைத் தொடுவது போல் போய்க் கொண்டிருந்த பம்பாய் பிரயாணம் நடிகைக்கும் அவள் தாயாருக்கும் மிகுந்த சலிப்பையும் எரிச்சலையும் உண்டு பண்ணியிருக்கவேண்டும். ஏனென்றால் நேற்று பகல் பொழுதுக்குள் மூன்று முறை உடை மாற்றி விதத்துக்கொரு நகைகள் பூட்டிப் பொலிவுடன் காட்சியளித்தவர்கள் இன்று பொழுது 'விடிந்து இவ்வளவு நேரமாகியும் தலைகூட வாராமல் வாடி வதங்கி உட்கார்ந்து கொண்டிருந்தனர். ஆனால் நானோ இந்தச் சுற்றுவரப் பயணத்தை, கிடைக்கப் பெறாத ஒரு வரப் பிரசாதமாக எண்ணி அணுவணுவாக ரசித்துக் கொண்டிருந்தேன்.

ஆகா, என்ன இனிமையான காட்சிகள்! இராம பிரான் வனவாசம் செய்ததாகக் கூறப்படும் பஞ்சவடிப் பிரதேசம் அது.

புண்ணிய நதியான கோதாவரியின் மேல் ரயில் வண்டி செல்லும்போது என் உடல் புல்லரித்தது. ஆனால் அடுத்தடுத்துப் பல மலைக் குகைகளின் உள்ளே வண்டி புகுந்து செல்லும்போது இரவின் பிரமை ஏற்பட்டு மனத்தின் குதூகலம் சுருங்கி நெரிந்தது.

இன்றைய விலைவாசி ஏற்றத்தின் மூல காரண கேந்திரமான நாசிக் ரோட்டில் வண்டி நின்று மீண்டும் புறப்பட்டது. இந்த இயற்கைச் சூழலின் மாகபடாப் பேரெழிலில் என் மனம் லயித்துக் கிடந்தாலும், அதன் பெரும் பகுதியில், கன்னட எம். பி. காரசாரமாக வெளியிட்ட அந்தக் கருத்துரை நுரைத்துக் கொண்டுதான் இருந்தது. அத்துடன், எப்போதெப்போதோ என் உள்ளத்தில் பதிவாகியிருந்த பல விசித்திரச் சம்பவங்களும் இன்ப துன்ப அனுபவங்களும் துண்டு துண்டாகப் பெயர்ந்து அந்தக் கருத்துரையுடன் ஒட்டுவதும் உதிர்வதுமாக இருந்தன. இது ஒரு விநோத அநுபவம். ஒரு மகாராணி பிரசவ அவஸ்தைப் படுவது போன்ற அநுபவம்!

இகத்புரியில் வண்டி நின்று புறப்பட்டதை நான் அவ்வளவாகக் கவனிக்கவில்லை. அந்தக் கன்னட எம். பி.யின் கருத்துரை மட்டுமே நெஞ்சில் நிழலாடியது. அந்நிழலின் ஊடாக ஒரு கச்சாந்

தன்மை வாய்ந்த விருப்பம் தலை தூக்கி நின்றது.

'தனியொரு மனிதன் எந்தக் காலத்திலும் சமூகத்தின் தர்மகர்த்தாவாக இயங்க முடியாது' என்ற கருத்தை இது வரையில் என் மனம் பலபடியாகக் குதப்பிப் பார்த்துக் கொண்டிருந்தாலும் அதிலே அது இன்னமும் உட்பட்டோ வெளிப்பட்டோ நிற்கவில்லை.

நான் எந்தப் பிரச்னையையும் அலசிப் பார்க்க எத்தகைய அரசியல் - சமூக - சமய சித்தாந்தங்களின் குறுகிய இரவல் தெம்பைப் பெற எப்போதுமே முயலுவதில்லை. வாழ்க்கையின் எல்லா முனைகளையும் ஊடுருவி அளக்கும் சுயமான அளவுகோல் ஒன்று என்னிடம் நல்ல நிலைமையிலே இருப்பதால் எந்தப் பிரச்னையையும் அதைக் கொண்டு இலாப-நஷ்டம் பார்க்காமல் அளக்கவே முயல்வேன். இப்போதும் அப்படித்தான் அந்த எம். பி.யின் கருத்துரையிலுள்ள உண்மை-பொய்களை என்சொந்த 'அளவுகோலை'க் கொண்டு அளந்து நோக்க வேண்டுமென்று மனம் அவாவியது.

'இதை வெறுமனே கேள்வி-பதில் ரூபத்தில் ஆராய்வதைவிட ஒரு கதை வடிவிலே நிறுத்தி ஆராய்ந்தால் என்ன?' - என்னை நானே கேட்டுக் கொண்டேன்.

பம்பாய்-தாதரில், காலை ஆறு மணிக்குப் போய்ச் சேர வேண்டிய வண்டி, பகல் பன்னிரண்டரை மணிக்குச் சென்று நின்றது.

“என்னங்க அண்ணாச்சி! மூணு நாள் தூக்கம் போருதா? எழுந்திருங்கோ!” என்று உற்சாகமாகக் குரல் கொடுத்துக் கொண்டே தன் பெட்டி படுக்கைகளை வாரி வெளியே போட்டாள் நடிகையின் தாயார். நான் சோர்வுடன் கீழே இறங்கினேன். எனக்கு முன் அந்த மூன்று எம். பி.க்களும் இறங்கிப் போய்விட்டிருந்தார்கள்.

நான் தங்குவதற்கு ஏற்பாடாகியிருந்த இருப்பிடத்தை அடைந்ததும், உடனடியாக முடித்துக் கொடுக்க வேண்டிய வேலைகள் தயாராகக் காத்துக் கொண்டிருந்தன. ஆனால், என் மனம் அந்த வேலைகளில் சிறிதும் ஈடுபாடு கொள்ளாமல், ரயிலில் பதிவான அந்தக் கருத்துப் பிரமையிலேயே உழன்று கொண்டிருந்தது. முதலில் அந்தக் கருத்தைச் சுற்றி ஒரு சிறுகதையைப் பின்னிப் பார்க்கலாமே என்று உட்கார்ந்தேன். அன்றைய இரவு பயனுள்ள இரவாகவே கழிந்தது.

ஆனால், எவ்வளவு பெரிய ஏமாற்றம்! நான் எழுதி முடித்த சிறுகதையில், எழுத நினைத்த விஷயம் ஸ்நானப் பிராப்தமாகக்கூட ஒட்டுறவு கொண்டிருக்கவில்லை! கதையின் ஆரம்பப் பகுதி மட்டும் நான் நினைத்தபடி அமைந்திருந்ததே தவிர, அதன் மையக் கருத்து முற்றிலும் வேறான ஒரு விஷயத்துக்குத் தாவி விட்டிருந்தது. எப்போதோ, எந்தக் காலத்திலோ எனக்கே தெரியாமல் என் மனத்துள் ஒட்டிக் கொண்டிருந்த ஒரு சம்பவப் பொறி எப்படித்தான் இச்சமயம் கீறித் தெறித்து இந்த அனுபவ உணர்வோடு இணைந்ததோ, அதை இப்போது நினைத்தாலும் எனக்கு விந்தையாகவே இருக்கிறது. இப்படி உருவானது தான் எனது 'ஊமைக் குயில்' என்ற சிறுகதை!

ஆகஸ்டு மாதம் முதல் வாரத்தில் சென்னை வந்து சேர்ந்த சில நாட்களுக்குப் பின், அந்தப் பழைய முயற்சியை மீண்டும் தொடங்கினேன்.

நான் எழுத நினைத்த கருத்தின் கருவே மையமாக அமைந்து, ஒரு கதை உருவாயிற்று. ஆனால் அமைதியாக ஒரு முறை அதனைப் படித்துப் பார்த்தபோது மற்றோர் ஏமாற்றத்துக்கு உள்ளானேன்.

ஆமாம்; அது ஒரு சிறுகதையாக- சிறுகதைக்குரிய லட்சணங்களுடன் - இருக்கவில்லை. ஏதோ ஒரு பெரிய நாவலிலிருந்து உருவியெடுக்கப்பட்ட முதலும் முடிவும் இல்லாத-ஓர் அத்தியாயப் பகுதி போல் அமைந்திருந்தது! சலிப்படைந்தவனாய் அந்தப் பிரதியை மேஜை டிராயரில் போட்டு மூடிவிட்டு, அதோடு அதை மறந்தும் போனேன்.

சுமார் ஆறு மாதங்களுக்குப் பின், மலாயாவிலிருந்து வெளிவரும் 'தமிழ் நேசன்' என்ற பத்திரிகையின் ஞாயிறு பதிப்பில் வெளியிட என்னிடம் ஒரு தொடர்கதை கேட்டுக் கடிதம் வந்தது. ஓராண்டுக்கு முன் இதே வேண்டுகோளை அப் பத்திரிகை விடுத்தபோது ஓய்வின்மையால் அதை ஏற்றுக் கொள்ள இயலவில்லை. இரண்டாம் கடிதம் வந்த மறுநாள் அப்பத்திரிகையின் சென்னைப் பிரதிநிதி என்னை நேரில் சந்தித்து, மலாயாத் தமிழர்களின் ஆவலை நிறைவேற்றித் தர வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். இந்தச் சமயம், பம்பாய்ப் பிரயாணத்தின்போது கருவாகிப் பிண்டகதியிலே கிடக்கும் அந்தக் 'கதை' என் நினைவுக்கு வந்தது.

'அந்தப் பிரச்னையை மையமாக வைத்து அதை விவாதித்து விமர்சிக்கும் வகையில், ஒரு நாவலே எழுதினால் என்ன?' என்று எண்ணினேன். எண்ணம் செயலாகியது. 'மண்ணின் குரல்' என்ற நாவல் பிறந்தது!



## வசதிகள் அனைத்தும் நிரம்பிய திட்டங்கள் ஆரோக்கியமான வாழ்வுக்கு வழிகோலுகிறது.

நீங்கள் எங்கிருப்பினும் சரி, மையர்ஸ் அல்லது வாஸ்ப் தானே இயங்கும் பம்பிங் திட்டங்கள் உங்கள் வசதியான, ஆரோக்கியமான வாழ்வுக்கு வேண்டிய தண்ணீரை நாள் முழுவதும் அளிக்கின்றன.

**MYERS OR WASP**

# மையர்ஸ் அல்லது வாஸ்ப்

## சுயமாய் இயங்கும்

பம்பிங் திட்டங்கள்

தொழில்களுக்கான பம்பிங், நிலை சம்பந்தமான எவ்வித பம்பிங் பிரச்னைகளுக்கும் திறமை மிக்க ஆலோசனைக்கும், உதவிக்கும் எங்களை அணுகுங்கள்.

ஆழ் கிணறு பம்பிங் எங்கள் விசேஷ அம்சம்.

வாட்டர் சப்ளை
ஸ்பெஷலிஸ்ட்ஸ்
பிரைவேட் லிட்.

330, தம்பு செட்டி தெரு
சென்னை -1



# மனப் பந்தல்

ஜி. கே. பொன்னம்மாள்

நிலையிலிருந்த தூணியைத் தட்டி விட்டுக் கொண்டு நிமிர்ந்து பார்த்தான் கந்தசாமி. "அப்பாடா, ஒரு வழியாகப் பந்தல் வேலை முடிந்து விட்டது. இன்னும் காகிதப் பூக்களைத் தூணில் சுற்றி அலங்காரம் செய்ய வேண்டும். வீட்டுக்குப் போய் மூன்று நாட்கள் ஆகி விட்டன. கண்ணம்மா, 'என்ன மச்சான் வேலை மும்முரத்திலே என்னைக்கூடவா மறந்து விட்டீங்க?' என்று கேட்கும். "இப்படியெல்லாம் ஓடியது அவன் சிந்தனை. கந்தசாமி பந்தல் அலங்காரம் என்றால் கல்யாணமே களை கட்டி விடும். அதுவும் திரைப்பட அதிபர் சம்பந்தத்தின் வீட்டுக் கல்யாணம் என்றால் சாமானியமானதா? கச்சேரி, நாட்டியம், விருந்து, வாணவேடிக்கை என்று வெகு ஆடம்பரமாக நடக்கும் கல்யாணம். கந்தசாமி உடம்பைப் பார்க்காமல் இரவும் பகலும் உழைத்தான். உழைப்பு மிகுதியால் அவன் உடல் இளைத்துக் கறுத்து விட்டிருந்தது. எப்படியாவது இன்று இரவு நன்றாகச் சாப்பிட்டு விட்டுத் தூங்கினால் தான் இனிமேல் சமாளிக்க முடியும் என்று தோன்றிவிட்டது அவனுக்கு.

பானையிலிருந்து குளிர்ந்த தண்ணீர் இரண்டு கோப்பை எடுத்துக் குடித்துவிட்டு முகத்தையும் கழுவிக் கொண்டு, துண்டை உதறித் தோளில் போட்டபடி, "அண்ணே, சீக்கிரமா காகிதப் பூ வேலையை முடியுங்க. நான் விடியற்காலை வந்து விடுகிறேன்" என்று தன் சக தொழிலாளியிடம் சொல்லிவிட்டுப் புறப்பட்டான். முன் வாசலில் யாரோ ஒரு பிரமுகரிடம் பேசிக் கொண்டிருந்த மானேஜர், "என்னப்பா, கந்தசாமி! வீட்டுக்குப் புறப்பட்டுட்டே! வேலையெல்லாம் முடிஞ்சுதா? நாளை முதலாளி பார்க்கும்போது ஒரு குறை இருக்கக் கூடாது" என்று எச்சரித்தார்.

"சரி சார். வாழை மரம் மட்டும்தான் கட்ட வேண்டும். புஷ்பத் தோரணமும் கட்டிவிட்டால் வேலை ஆகிவிடும். மதுரையிலிருந்து புஷ்பம் வருகிறதாம். இப்பவே கட்டினால் வாடிவிடும். விடியற்காலையிலே வந்து கட்டறேன்" என்று சொல்லிவிட்டு விடைபெற்றுக் கொண்டான் கந்தசாமி.

வீட்டு வாசலை அடைந்ததும், கண்ணம்மா "வாங்க அத்தான்! எங்கே இன்னிக்கும் வராமே இருந்து விடுவீங்களோ என்று நினைச்சேன்" என்று வரவேற்றாள். வியர்வையால் நனைந்த சட்டையைக் கழற்றிப் போட்டு விட்டு வெதவெதவென்று வெந்நீரில் குளித்தான். சிம்னி விளக்கை ஏற்றி வைத்துத் தன் கணவனுக்காக அலுமினியத் தட்டைப் போட்டுக் காத்துக் கொண்டிருந்தாள் கண்ணம்மா. சுடச் சுடச் சோற்றில் வெங்காயக் குழம்பை ஊற்றினாள். கந்தசாமிக்குப் பிடித்த கத்திரிக்காய்க்கறி, மாங்காய்த் துவையல். வயிறு புடைக்கச் சாப்பிட்ட திருப்தியுடன் கயிற்றுக் கட்டிலில் விழுந்தான் கந்தசாமி. தூக்கம் அவன் கண்களைச் சுழற்றியது. கண்களை இலேசாக மூடியபடி படுத்திருந்த அவன் முகத்துக்கருகே, வெற்றிலை மெல்லும் வாசனை வீசவே, கண்ணை விழித்துப் பார்த்தான். "என்ன அத்தான்! வெற்றிலை கூடப் போடாமே தூங்கி விட்டீங்களே! இந்தாங்க, வாயைத் திறவுங்க!' என்று கூறி விட்டு வெற்றிலைச் சுருளை அவன் வாயில் போட வந்தாள்.

"கண்ணம்மா! என்னைத் தொந்தரவு பண்ணுதே. எனக்கு வெற்றிலை வேண்டாம். தூக்கம் கண்ணைச் சுழற்றுகிறது. ஏதாவது பேசவேண்டியிருந்தால் சீக்கிரம் பேசி முடி!" என்றான் கந்தசாமி. "இன்னிக்கு ராஜமும் அவ புருஷனும் வந்திருந்தாங்க!" என்று கண்ணம்மா முடிப்பதற்குள் கந்தசாமி இடைமறித்து, "ஏதாவது பணம் கடனாகக் கேட்டிருப்பாங்க. அதெல்லாம் என்கிட்டே காலணா கிடையாது. பணம் இல்லை என்று சொல்லி விடு!" என்று கூறிவிட்டுத் திரும்பிப் படுத்தான்.

"அடாடா...டா...கேளுங்களேன். என் தங்கை ராஜம் ஏழைதான். இருந்தாலும் நீங்க இப்படி மட்டம்தட்ட வேண்டாம். அவ ஒண்ணும் பணம் கேட்க வரவில்லே. அவ மகளுக்குக் கல்யாணமாம். நாளை முகூர்த்தம். நீங்களும் நானும் கண்டிப்பாகப் போக வேண்டுமாம். அழைக்கத்தான் வந்திருந்தாங்க!" என்றாள் சற்று மனத்தாங்கலுடனே.

"நாளைக்குச் 'சம்பந்தம்' வீட்டுக் கல்யாண வேலை இருக்கு எனக்கு. நான் வர முடியாது. என்னைக் கேட்டால் நீயும் போகவேண்டாம் என்றுதான் சொல்லுவேன். இந்தக் கல்யாணத்திலே அத்தனை சினிமா நக்ஷத்திரங்களும், மந்திரிகள், பிரமுகர்கள் எல்லோரும் வருவார்கள். பிரபல நடிகை இந்திராதேவி கூட வருகிறாள். உனக்குத்தான் இந்திராதேவி என்றால் உயிராச்சே. அவுங்க நடித்த படம், ஒண்ணு விடாமே பார்ப்பாயே. இப்போ அவுங்களை நேரிலே பார்க்கலாம். காலையிலே என்னோட வந்திடு. சாப்பாடு, மாலையிலே சிற்றுண்டி எல்லாம் முடிஞ்சு இரவு வீடு திரும்பலாம். நீ இந்தமாதிரி பெரிய இடத்துக் கல்யாணத்தைப் பார்த்ததே இல்லையே!" என்றான் ஆசையுடன்.

"அங்கேயெல்லாம் காரிலே பெரியவூட்டு மனுஷங்களெல்லாம் பட்டும், வைரமுமாக வருவாங்க. என்னை மதிப்பாங்களா? பந்தியிலே சாப்பாடுதான் போடுவாங்களா?" என்ற சந்தேகத்தைக் கிளப்பினாள்



கண்ணம்மா. கந்தசாமிக்குச் சிரிப்புத்தான் வந்தது. "அட, புள்ளே உன் புருஷன்தான் கலியாணப் பந்தல் முழுதும் போட்டது. எனக்கு மானேஜர் முதல் கொண்டு தலையாரி வரை அத்தனை பேரையும் தெரியும். நீ பயப் படாமே வரலாம்" என்றான் கந்தசாமி கேலியாக.

"இல்லே அத்தான்! என் தங்கை ரொம்ப வருத்தப் படுவா. நானாவது தங்கைவூட்டுக்குப் போறேன். உங்களுக்குத்தான் வரமுடியாது" என்றாள் தீர்மானமாக.

"சரி எப்படியாவது தொலே. எல்லாத்துக்கும் கொடுத்து வச்சாத்தான் கிடைக்கும். தங்கையாம் தங்கை. பெரிய விருந்து வச்சிடுவா பாரு. ஒரு சோறும் ரஸமும், அழுக வாழைப் பழமும் இங்கறதுதான் உன் விருந்து. நல்ல விருந்து உனக்கு எப்படி ஒட்டும்? எப்படியாவது ஒழி" என்றபடி திரும்பிப் படுத்தான்.

கண்ணம்மாவுக்கு சினிமா நடிகை இந்திராதேவியைப் பார்க்க வேண்டும் என்று ஆவலாகத்தான் இருந்தது. இருந்தாலும், தன் ஒரே உடன்பிறந்தவள் மகளுக்குக் கலியாணம். போகாமல் இருந்தால் அவள் மிகவும் கவலைப்படுவாள் என்ற எண்ணமே மேலோங்கி யிருந்தது. கணவன் கோபித்துக் கொண்டிருக்கிறானே என்ற கவலையும் அவளை வாட்டியது. கணவனுக்காக ஆசையுடன் மடித்த வெற்றிலையை அப்படியே ஜன்னலில் வைத்து விட்டுச் சிம்னி விளக்கை ஊதி அணைத்தாள். அந்த அறைக்குள் இருள் படர்ந்தது. ஜன்னல் வழியாக இலேசான நிலா வெளிச்சம் கந்தசாமியின் முகத்தில் தட்டியது. கணவனின் முகத்தைப் பார்த்தாள் கண்ணம்மா. அவன் நன்றாக அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான். அவனிடமிருந்து மெல்லிய குறட்டை ஒலி கிளம்பியது.

தரையைத் துடைத்து விட்டுக் கண்ணம்மாளும் படுத்துக் கொண்டாள். அவளுக்குத் தூக்கமே வரவில்லை. மனக்கண்முன் சினிமா நடிகைகள், பெரிய கார்கள், பேண்டு வாத்தியம், பலவித பக்ஷணங்களுடன் விருந்து. நாதசுர இசை; சிரித்த முகத்துடன் தலையில் ஜரிகைத் தலைப்பாகை கட்டிக்கொண்டு பந்தலுக்குக் குறுக்கும் நெடுக்குமாக வளையவரும் தன் கணவன் — இப்படிப் பல காட்சிகள் தோன்றின. மறுகணம் நந்தம்பாக்கம் பஸ் ஸ்டாண்டுக்கு அருகே ஒரு குடிசை. தன் ஏழைத் தங்கை. அவள் கணவன்; அக்காளுக்கென்று ஆசையாகத் தங்கை கொடுக்கும் இடியாப்பமும், அலுமினியம் டம்ளரில் "டீ"யும். பிறகு கலியாண விருந்தில் தித்திப்பு இருக்க வேண்டுமே என்று இலை ஓரத்தில், நாட்டு வெல்லத்தை வைத்துவிட்டு, சோறும் கறியும், இடையே அன்பு உபசரிப்பு. ஏழை மணமக்களின் சிரித்த முகம். இத்தனையும் குடை ராட்டினம் போல் அவள் நினைவில் சுழன்று வந்தன. பக்கத்து மாதா கோவில் மணி இரண்டு முறை கம்பீரமாக அடித்து ஓய்ந்தது. அவள் எப்பொழுது கண்ணயர்ந்தாளோ? படபட வென்று கந்தசாமி அவளை உலுக்கி எழுப்பினான். திடுக்கிட்டுப் பார்த்த அவள் முன்னால் கந்தசாமி சட்டை போட்டுக்கொண்டு வெளியே கிளம்பத் தயாராக நிற்பதைக் கண்டாள். "அத்தான், காப்பி போட்டுத் தருகிறேன்" என்று எழுந்தாள் கண்ணம்மா.

"ஒன்றும் வேண்டாம்; கலியாண வூட்டுலே சாப்பிட்டுக்கறேன். நீ உன் தங்கைவூட்டுக்குப் போறதாக முடிவு கட்டிட்டே, இந்தா செலவுக்கு வச்சுக்க" என்று இரண்டு ரூபாயை எடுத்து அவள் முன் எறிந்துவிட்டுப் போனான்.

"கோபிச்சுக்காதீங்க, அத்தான்" என்று கெஞ்சிக் கேட்ட அவள் பேச்சை அவன் காதில் வாங்கிக்கொள்ளவே இல்லை.

கந்தசாமிக்குக் கலியாண வீட்டில் வேலை மென்னியைப் பிடித்தது. பகல் ஒரு மணிக்குள் ஒருவாறாக எல்லா வேலையையும் முடித்தான். வயிறு நன்றாகப் பசிக்க ஆரம்பித்து விட்டது. சாப்பிட வேண்டியதுதான் என்று

நினைத்தவுடன் சக தொழிலாளி, முனியன் "அண்ணே! சாப்பாடு ஆகிவிட்டதாம். நினைத்ததற்கு மேல் ஜனங்கள் சாப்பிட வந்திட்டாங்களாம். மானேஜர் ஐயா— நம்பளை ஹோட்டலிலே போய்ச் சாப்பிடச் சொன்னாரு. இந்தா பணம்" என்று ஒரு ரூபாயை அவன் கையில் வைத்தான்.

"இந்தக் கலியாண வூட்டுலே நமக்குச் சோறு கிடையாதா?" என்ற வார்த்தை அவனை அறியாமலே வெளியே வந்தது.

"இதையே நானும் மானேஜர் கிட்டே கேட்டேன் அண்ணே; 'சாதம் ஆயிடுச்சாம். இனிமேலே சமையல் பண்ண நேரமாகிடும். நீங்க எல்லாம் வேலை செய்யுறவங்க. காலா காலத்திலே சாப்பிடணும்; கலியாண விருந்து எங்கே போயிடும்? ராத்திரிதான் பிரதானமான விருந்து. அதிலே உங்களைக் கவனிக்கக்கிறேன். சீக்கிரம் சாப்பிட்டு விட்டு வாங்க. வந்து நாலு பூச்செண்டு கட்டிக் குடுங்க' என்று பணத்தைக் கொடுத்தாரு" என்றான் முனியன்.



கந்தசாமியின் கால்கள் யந்திரம் போல் பந்தலுக்கு வெளியே நடந்தன. அவன் மனத்தில் என்னவெல்லாமோ சிந்தனைகள் எழுந்தன. பந்தல் முகப்பில் இரண்டு வெள்ளைக்காரர்கள் முகப்பு அலங்காரத்தைப் புகைப்படம் பிடித்துக் கொண்டிருந்தார்கள். முனியன் வாயைப் பிளந்து கொண்டு காமிராவையும், வெள்ளைக்காரர்களையும் பார்த்துக் கொண்டிருந்தான். "அண்ணே! கலர்ப் படம் புடிக்கிறாங்க!" என்றான் முனியன். அவர்கள் சிரித்துச் சிரித்து ஏதோ பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் முக பாவத்திலிருந்து, முகப்பு அலங்காரம் அழகாக இருக்கிறது என்று தான் சொல்லுகிறார்கள் என்று புரிந்தது கந்தசாமிக்கு. "ஐயா, இந்த அலங்கார முகப்பை அமைத்தவன் நான் தான்" என்று சொல்லத் துடித்தது அவன் மனம்.

"வா, அண்ணே! மணி ஒண்ணே கால். நேரமானா ஹோட்டல்லே சாப்பாடு இருக்காது" என்று துரிதப் படுத்தினான் முனியன். ஹோட்டலை நோக்கி நடந்தான் கந்தசாமி.

மாலை நாலு மணிக்கே பாண்டு வாத்தியம் ஆரம்பித்து விட்டது.

பள பள வென்ற உடையில் கலியாண வீட்டுக்காரர்கள் உலவி வந்தார்கள். பந்தலுக்கு நடுவே மணமக்களுக்கு உட்கார ஒரு வெல்வெட்டு சோபா போடப்பட்டிருந்தது. பக்கத்தில் ஒரு பெரிய மேஜையில் பரிசுப் பொருள்களை யெல்லாம் வைக்க ஏற்பாடு செய்திருந்தார் மானேஜர். எதிரில் ஒரு பெரிய நிலைக்கண்ணாடியும் இருந்தது. பரிசாக வரும் வெள்ளிப் பாத்திரங்கள் கண்ணாடியில் பிரதிபலிப்பதால் ஒரு தனி அழகு இருக்கும் என்பதுதான் இந்தக் கண்ணாடி வைத்ததின் நோக்கம். "கந்தசாமி! அந்த மேஜைமேல் இந்தத் துண்டை விரித்து விடு!" என்று ஒரு சலவை வெள்ளைத் துண்டைக் கொடுத்தார் மானேஜர். துணியை மேஜைமீது விரிக்கும்போது எதேச்சையாகக் கண்ணாடியில் தன் உருவத்தைப் பார்த்தான் கந்தசாமி! வாரப்படாத தலைமயிரும், வேலைத் தொந்தரவினால் இரண்டு மூன்று நாட்களாக க்ஷவரம் செய்து கொள்ளாத முகமும், அழுக்குச் சட்டையும் அவனுக்கே அருவருப்பாக இருந்தது. அப்பொழுதுதான் ஷண்முகா லாண்டரி முதலாளியிடம் கலியாணத்துக்குப் போக என்று ஒரு சட்டையும் ஜரிகை வேஷ்டியும் கேட்டிருந்தது அவன் நினைவுக்கு வந்தது. மானேஜரிடம் பத்து நிமிஷத்தில் வந்துவிடுவதாகச் சொல்லிக் கொண்டு லாண்டிரிக்குப் போனான். கதவில் பூட்டு தொங்கிக் கொண்டிருந்தது. வெள்ளிக்கிழமை விடுமுறை என்ற பலகையுடன். சோர்ந்த முகத்துடன் கந்தசாமி திரும்பி நடந்தான். கலியாண வீட்டு வாசலில் ஒரே கூட்டம். போகும் போது காலியாயிருந்த இடத்தில் இந்த நேரத்துக்குள் எப்படி இத்தனை கூட்டம் சேர்ந்து விட்டது என்பது அவனுக்கே அதிசயமாக இருந்தது. புதுக் கார்கள் வரிசையாக வந்தபடியே இருந்தன. பந்தல் முகப்பில் ஒரே போலீஸ் கூட்டம். பளபளக்கும் கப்பல் போன்ற காரில் வந்தவர் ஒரு பிரபல சினிமா நடிகராக இருக்க வேண்டும். வாசலில் இருந்த ஜனக் கும்பல் அவர் பேரைச்சொல்லி ஆரவாரம் செய்துகொண்டிருந்தது. சம்பந்தம் அவரை முகமலர்ச்சியுடன் வரவேற்று அழைத்துக் கொண்டு போனார். கூட்டத்தில் புகுந்து கேட்டருகே வந்தான் கந்தசாமி. "டேய், யாரப்பா அது! இத்தனை அவசரமாக உள்ளே நுழையறது"என்றபடி அவனைப் பிடித்துப் பின்னால் தள்ளினார் ஒரு போலீஸ்காரர். "ஐயா! நான் கலியாண வீட்டைச் சேர்ந்தவன். பந்தல் அலங்காரம் செய்பவன்" என்று கந்தசாமி எத்தனையோ சொல்லியும் அவர்கள் நம்பவில்லை. "கூட்டம் அதிகமாகப் போச்சு! எல்லாத்தையும் வெளியிலே தள்ளு!" என்ற சார்ஜெண்டின் உத்தரவுப்படி போலீஸ்காரர்கள் கூட்டத்தைப் பின்னால் தள்ளினார்கள். சினிமா நக்ஷத்திரங்களைப் பார்க்க வந்த கூட்டத்தில் கந்தசாமியும் பின்னால் தள்ளப்பட்டான். யாரோ ஒருவரின் செருப்பால் மிதிக்கப்பட்டுக் கந்தசாமியின் கால் கண்டு விரலிலிருந்து இலேசாக ரத்தம் கசிந்தது. வலிபொறுக்க முடியாமல், கூட்டத்துக்கு வெளியே வந்தான் கந்தசாமி. அவனுக்கு அழுகை வந்து விடும்போலிருந்தது. தன் கையால் போடப்பட்ட பந்தலில் கலியாணம் நடக்கிறது. தன்னை உள்ளே போக விடமாட்டேன் என்கிறார்கள் இப்படி நினைத்து மனம் நொந்தான். மறுபடியும் ஒரு முறை முயற்சி செய்து விடலாம் என்று கால் வலியையும் பொருட்படுத்தாமல் கூட்டத்தினுள் நுழைந்தான்; இப்பொழுது கூட்டம் இன்னும் அதிகமாயிருந்தது. தனக்குத் தெரிந்தவர்கள் யாராவது தென்படுகிறார்களா என்று பார்த்தான். யாரையும் காணவில்லை. சார்ஜெண்டை நெருங்கி "ஐயா, என் பெயரை மானேஜரிடம் சொல்லுங்க. அவர் என்னை உள்ளே வரச் சொல்லுவார்" என்றான்.

"அதெல்லாம் சரி மேன். அழைப்பிதழ் எங்கே?" என்று அதட்டினார் சார்ஜெண்டு.

"நான் இங்கே வேலைசெய்யற ஆளுங்க. எனக்கு எதுக்குங்க அழைப்பிதழ்?" என்ற உண்மையை சார்ஜெண்டு நம்பவில்லை.

"இப்படி டபாய்க்க எத்தனை ஆளு கிளம்பியிருக்கிறீங்க?" என்றபடியே கையிலிருந்த கழியால் அவனைப் பின்னால் தள்ளினார்; ஒருவாறுகக் கந்தசாமி கூட்டத்துக்கு வெளியே வந்தான். அவன் கால்கள் வீட்டை நோக்கி நடந்தன. 'பொல்லாத உலகம். பணத்துக்கும் படாடோபத்துக்கும் இடமளிக்கிறதே தவிர உண்மைக்கு இடமளிக்கவில்லை. இங்கு ஆளுக்கு மதிப்பில்லை ஆடைக்குத்தான் மதிப்பு. நல்லவேளை கண்ணம்மாவை அழைத்துக் கொண்டு வராமல் இருந்தோம். அவள் புத்திசாலி. ஏழைக்கேத்த எள்ளுருண்டை என்று தன் தங்கை வீட்டுக்குப் போய் விட்டாள். நான்தான் எட்டாத கனிக்குக் கொட்டாவி விட்டேன். வேலைக்காரர்களுக்கு வேலை செய்வதில்தான் மதிப்பு. அதற்கு மேல் எதிர்பார்க்கக்கூடாது' என்று யோசித்தபடியே வீட்டுக்குள் நுழைந்தான்.

கழுத்தில் சந்தனமும், வாயில் வெற்றிலையும், தலைநிறைய கதம்பமுமாக எதிர்கொண்டு அழைத்தாள் கண்ணம்மா. அவள் கிளிப்பச்சை நிறத்தில் புதுப் புடவை கட்டியிருந்தாள். "ஏன் அத்தான் விருந்துக்கு முன்னாலே கிளம்பி வந்துட்டீங்க. மணி ஏழுதானே ஆச்சு" என்றாள் கண்ணம்மா. என்ன இருந்தாலும் தன் தோல்வியை மனைவியிடம் ஒப்புக் கொள்ள அவன் மனம் இடம் தரவில்லை. "எனக்கு நீ வராமே ஒண்ணுமே புடிக்கல்லே" என்றான் கந்தசாமி.

"தங்கச்சிகூட நீங்க வரல்லே என்று ரொம்ப வருத்தப்பட்டுது. இந்தப் புடவை எனக்குக் கொடுத்துது. இதோ பலகாரமெல்லாம் கொண்டு வந்திருக்கிறேன். 'அத்தானுக்குக் கொடு' என்று தங்கச்சி மூட்டை கட்டிக் கொடுத்தது" என்றபடி அதிரசம்,தேன்குழல்-சர்க்கரைப் பொங்கல் என்று தட்டில் எடுத்து வைத்தாள் கண்ணம்மா.

"கண்ணம்மா - அடுத்த வாரம் எனக்குப் பந்தல் வேலைக்குப் பணம் வந்துவிடும். நல்லதா 'ஒரு புடவை, ரவிக்கை, வெத்திலை பாக்கோடே உன் தங்கச்சி மகளைப் பாத்திட்டு வரலாம்" என்றான் கந்தசாமி மகிழ்ச்சியுடன்.

"உங்க மனசு எனக்குத் தெரியாதா, அத்தான்!" என்று சிரித்தாள் கண்ணம்மா.

கந்தசாமி அதிரசத்தைப் பிட்டு வாயில் போட்டான். ஏழையின் அன்பு உள்ளம்போல் அவன் வாய் இனித்தது.

# பெர்க்கின்ஸ்

நிச்சயமான
திறமைக்கு



பெர்க்கின்ஸ் டீஸல் என்ஜினை இயக்குபவர் ஒவ்வொருவரும் திருப்தியுடன் முறுவல் பூப்பதை நீங்கள் கவனித்திருக்கலாம். இதில் வியப்பே இல்லை! பெர்க்கின்ஸ் டீஸல்கள் கடும் உழைப்பிறல் சிறந்த திறமைக்குப் புகழ்பெற்றவை.

சிக்கனம், நம்பகம், நீடித்த உழைப்பு, தேய்வுக் குறைவு, சுலபமான சமாளிப்பு இப்படி டீஸல் சக்திக்குரிய வசதிகள் யாவும் சேர்ந்து, மிகக் குறைந்த செலவில், மிகப் பெரிய பயனை பெர்க்கின்ஸ் டீஸல்கள் அளிக்கின்றன.






இந்தியாவில் தயாரிப்பவர்கள் :

Simpson & Co. Ltd

சென்னை-2

கிளைகள் : உதகமண்டலம், பெங்களூர், திருச்சிராப்பள்ளி, செகந்திராபாத் (டெக்கான்)

# வாழ்க மணமக்கள்



நடேஷ் ஆர்ட் பிக்சர்ஸ் அதிபர் திரு எம். நடேசன் அவர்களின் புதல்வி சௌ மல்லிகேசுவரிக்கும் திரு தினதயாளனுக்கும் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தது.



கல்லூர் திரு கே. வி. ராமசாமி அய்யர் அவர்களின் புதல்வர் திரு ஆர். ருத்ரபதி திரு சுந்தரமய்யர் அவர்களின் புதல்வி சௌ கலோசனாவை மணம் புரிந்து கொண்டார்.



டி. டபிள்யூ. ஏ. ஸ்தாபனத்தைச் சேர்ந்த திரு பி. வி. சலம் அவர்களின் சகோதரர் திரு பி. வி. கிருஷ்ணனுக்கும் சௌ லலிதாவுக்கும் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தது.



அகில இந்திய ரேடியோ திரு ஆர். கே. வெங்கடராம சாஸ்திரியாரின் புதல்வர் திரு கிருஷ்ணமூர்த்திக்கும் சௌபாக்கியவதி குமாரி உமாவுக்கும் வெகு விமரிசையாக விவாகம் நடந்தேறியது.



திரு எஸ். மகாதேவன் பி. காம். அவர்களுக்கும் சௌபாக்கியவதி லோகநாயகிக்கும் சமீபத்தில் அதி விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.



திரு சுந்தரராமன் அவர்களுக்கும் சௌபாக்கியவதி ராஜேசுவரிக்கும் சமீபத்தில் வெகு விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது.

# விழா மணமக்கள்



மதராஸ் அட்வர்டைஸிங்கைச் சேர்ந்த திரு நாராயணசாமியின் சகோதரி சௌபாக்கியவதி லலிதாம்பாளுக்கும் திரு தியாகராஜனுக்கும் செருகளத்தூரில் விவாகம் நடந்தது.



''சினிமா உலகம்'' ஆசிரியர் திரு பி. எஸ். செட்டியார் அவர்களின் புதல்வி சௌபாக்கியவதி லட்சுமிக்கும் திரு ஜயராமனுக்கும் தியாகராயநகரில் திருமணம் அமோகமாக நடந்தது.



சென்னை சிம்ஸன் அண்ட் கம்பெனியைச் சேர்ந்த திரு ஏ. ராமச்சந்திரன் அவர்களின் புதல்வி சௌ. இராமலக்ஷ்மிக்கும் திரு ஏ. ஜகந்நாதனுக்கும் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.



கல்கத்தா டன்லப் ரப்பர் கம்பெனியைச் சேர்ந்த திரு ராமநாதனுக்கும் சௌபாக்கியவதி சாந்தாவுக்கும் சென்னையில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.



அண்ணாமலை பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த திரு டி. கே. வெங்கடராமன் அவர்களின் புதல்வி சௌ. லக்ஷ்மிக்கும் திரு எஸ். வெங்கடராமனுக்கும் விவாகம் சிறப்பாக நடந்தது.



ஏஷியன் டிராவல்ஸைச்சேர்ந்த திரு பார்த்தசாரதி சௌ. கற்பகத்தை மணந்தார். மணமகள் பீச்'ஸ் கம்பெனியின் விளம்பர அதிகாரி திரு பி. எஸ். அய்யரின் சகோதரி.

பிரபல பல்வைத்திய நிபுணர்கள் நிரூபித்துள்ளனர்

# கால்கேட் குளோரோபில்




## ஈறுகளை பலப் படுத்து கிறது

வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது! "ஆஸ் மோஸ்கோப்" பரிசோதனைகளில், கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட், வேறெந்த சாதாரண பற்பசையையும்விட மிகத்தீவிரமாக வாய் நாற்றத்தை ஒழிக்கிறது என்பது நிரூபணமாயுள்ளது.

சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது! கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை ஒவ்வொரு முறையும் சாப்பிட்டவுடன் தேய்ப்பதால், பற்களை சொத்தையாக்கும் கிருமிகள் அழிகின்றன.

கால்கேட்டின் பிரத்தியேகமான சேர்க்கை முறையைக் கொண்ட குளோரோபிலின் பூரண பலனை அடையுங்கள்.... கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்ட் அல்லது கால்கேட் குளோரோபில் டூத் பவுடர் வாங்குங்கள்!

கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்ட்டை தினமும் தேய்ப்பதால், தீவிரமான குளோரோபிலின் பூரண நன்மையை அடைந்து, ஈறுகள் உறுதியாகவும் ஆரோக்கியமாகவும் இருக்க ஏதுவாகிறது. உண்மையான இந்த குளோரோபில் டூத்பேஸ்ட், சிறந்த பற்பசை, பற்பொடி முதலியவை தயாரிப்பதில் மிக்க அனுபவங்கொண்ட உலகிலே மிகப்பெரிய ஸ்தாபனத்தாரால் தயாரிக்கப்படுகிறது!




வேறு எந்த பற்பசையிலும் இதைவிட அதிக வீரிய குளோரோபில் இல்லை — குழந்தைகள் அதன் பெப்பர்மின்ட் வாசனையை மிகவும் விரும்புகிறார்கள்!




பெரிய எக்கானமி சைஸ் லாபகரமானது!

C17A-G10 TAM.

# கொடுக்கும் தெய்வம்

"பூர்ணிமா"

குருமூர்த்திக்கு உடம்பெல்லாம் வியர்த்து வெடவெடத்தது. திரும்பத் திரும்பக் கணக்கைக் கூட்டிப் பார்த்தான். கையிருப்புத் தொகையை மீண்டும் மீண்டும் எண்ணினான். சந்தேகமேயில்லை. சரியாக நூறு ரூபாய் துண்டு விழுகிறது. யாருக்கோ ஒரு நூறு ரூபாய் நோட்டு அதிகப்படியாகக் கொடுத்திருக்கிறான். யாருக்கென்று எப்படிக் கண்டுபிடிப்பது?

நூறு ரூபாய்! அவ்வளவு பெரிய தொகையை அவன் சம்பளத்திலிருந்து ஈடுசெய்தாக வேண்டும். சம்பளமோ முந்நூறுக்கும் குறைவு. அதில் எத்தனையோ பிடித்தங்கள். அவற்றோடு இந்த நூறு ரூபாயையும் சேர்த்துக் கொண்டால் கடைசியில் என்ன மிஞ்சப் போகிறது? அதை வைத்துக் கொண்டு அந்த மாதத்தை எப்படி ஓட்டப் போகிறான்?

இந்தச் சமயம் பார்த்து ராஜம் வேறு அவன் வீட்டுக்கு வந்திருக்கிறாளே! தங்கைக்குச் செய்ய வேண்டிய சாதாரணக் கடமையைக் கூடச் செய்யாமலிருக்க முடியுமா?

ராஜத்தின் புருஷனுக்குப் பம்பாயில் வேலை. புக்ககத்து வழியில் யாருக்கோ கல்யாணம் நடந்தது. அதற்காகப் பம்பாயிலிருந்து ஊருக்குப் போயிருந்தாள். இப்போது திரும்பிச் செல்லும் வழியில் அண்ணாவின் வீட்டில் ஒரு வாரம் தங்கிவிட்டுப் போகலாம் என்று வந்திருக்கிறாள். பம்பாய்க்குப் புறப்படுவதற்கு முன்னால் திருப்பதிக்குப் போய்ப் பிரார்த்தனை செலுத்திவிட்டு வரவேண்டும் என்று சொல்லிக் கொண்டிருக்கிறாள். திருப்பதிக்குப் போய் வரும் செலவு தவிர பம்பாய்க்கும் டிக்கெட் வாங்கிக்கொடுத்து அவளை ரயிலேற்றி வைப்பதும் குருமூர்த்தியின் பொறுப்புத்தான். சம்பளத் தேதிக்காகத்தான் காத்திருந்தான். சம்பளத் தேதி இப்படிச் சத்துருவாய் மாறுமென்று யார் கண்டது?

நேரம் போவதே தெரியாமல் குழம்பிய மனத்துடன் உட்கார்ந்திருந்தான் குருமூர்த்தி. கடிகாரத்தில் எட்டு அடித்தபோதுதான், அவனுக்குச் சுய உணர்வு வந்தது. ஒரு நீண்ட பெருமூச்சுடன் எல்லாவற்றையும் கட்டி வைத்துப் பூட்டிவிட்டுக் கிளம்பினான்.

அவன் வீட்டை நெருங்கிக் கொண்டிருந்த போது ஒரு டாக்ஸி வேகமாக அவனைத் தாண்டிச் சென்று விட்டு வாயிலில் போய் நின்றது. அவன் மனைவி பத்மாவும், ராஜமும் அதிலிருந்து இறங்குவதைப் பார்த்துக் குருமூர்த்தி திடுக்கிட்டான். இருவர் கைகளிலும் ஏதேதோ காகிதப் பொட்டலங்கள் இருந்தன.

குருமூர்த்தியைப் பார்த்ததும் ராஜம் மகிழ்ச்சியுடன் "அண்ணா! இப்பத்தான் ஆபீஸிலிருந்து வரயா? நல்ல வேளை. நாங்களும் சரியான சமயத்துக்குத் திரும்பி வந்துவிட்டோம்" என்றாள்.

"வீட்டைப் பூட்டிவிட்டா போனீர்கள்?"

"பூட்டவில்லை. அத்தையம்மா பொறுப்பிலே விட்டுவிட்டுப் போனோம்."

"அத்தையம்மாவா?"

"நான் உன்கிட்டே சொல்ல மறந்துட்டேன் அண்ணா. நான் திருப்பதிக்குப் போகிறதாயிருந்தால் நானும் கூட வரதாகச் சொல்லியிருந்தாள் அத்தையம்மா. ஞாயிற்றுக்கிழமை புறப்படறது நிச்சயமானதும் சிதம்பரத்துக்கு ஒரு கடுதாசி எழுதிப் போட்டேன். கடுதாசி கிடைச்சதும் அத்தை மறு ரயிலிலேயே புறப்பட்டு வந்துட்டா" என்று ராஜம் விவரித்துக் கொண்டிருக்கும்போதே அத்தையம்மாள் வாசலுக்கே வந்துவிட்டாள்.

"என்ன குருமூர்த்தி, திகைச்சாப்பலே பார்க்கறே! ஏதோ ராஜத்தின் புண்ணியத்திலே எனக்கும் திருப்பதி தரிசனம் கிடைக்கப் போகிறது....." என்றாள்.

உள்ளே சென்றதும் ராஜம் ஒரு காகிதப் பையில் அடக்கமாயிருந்த பட்டுப் புடவையை வெளியில் எடுத்து, "இதோ பார்த்தாயா அண்ணா! மன்னியோட அன்பளிப்பு. செலக்ஷன் எப்படி?" என்று கேட்டபோது குருமூர்த்தியின் கண்களுக்கு உலகமே தட்டாமாலை சுற்றுவது போலிருந்தது.

"நீங்க ஆபீஸிலிருந்து வந்ததும் எல்லோரும் சேர்ந்தே கடைவீதிக்குப் போய் வரலாம்னு திட்டம் போட்டிருந்தோம். நீங்க வர வழியாக் காணும். நாளைக்கோ சனிக்கிழமை..."

"தங்கம் போல் வெள்ளிக்கிழமையை விட்டு விட்டுச் சனிக்கிழமையும் அதுவுமா துணிமணி வாங்கக் கூடாது பாரு. கையிலே பணமில்லையேன்னு யோசிக்காதே. குருமூர்த்தி ஆபீஸிலிருந்து வந்தப்புறம் வாங்கிக்கறேன்னு சொல்லி நான்தான் பத்மா கையிலே நூறு ரூபாயைக் கொடுத்து ரெண்டு பேரையும் அனுப்பி வைச்சேன்" என்று அத்தையம்மாள் விவரித்தாள்.

மறுநாள் ஆபீசுக்குப் போகும் நேரம் நெருங்க நெருங்கக் குருமூர்த்தி நிலைகொள்ளாமல் தவித்தான். ஆபீசுக்குப் போகாமலேயே லீவு எடுத்துக் கொண்டு விடலாமா என்றுகூட எண்ணினான். அந்த எண்ணத்துக்குக் குறுக்கே நின்றது ஓர் அல்ப ஆசை. அதிகப்படியாக நூறு ரூபாயை வாங்கிக் கொண்டவர் யாராயிருந்தாலும் சரி, பெருந்தன்மையுடன் தாமாகவே அதைத் திருப்பிக் கொடுக்க முன்வரலாமில்லையா? லீவு எடுத்து அந்தச் சந்தர்ப்பத்தை இழப்பானேன் என்று நினைத்தான். பரபரப்புடன் வீட்டை விட்டுக் கிளம்பி நேரத்துக்கு முன்னதாகவே ஆபீசுக்குப் போய்ச் சேர்ந்தான்.

அக்கௌண்டண்ட் கூப்பிடுவதாக ஆபீஸ் பையன் கூறினான். 'வேறு எதற்குக் கூப்பிடப் போகிறார்? கணக்கையும், கையிருப்புத் தொகையையும் அவரிடம்தான் ஒப்படைக்க வேண்டும். ஏன் அவை இன்னும் வந்து சேரவில்லையென்று கேட்கப் போகிறார்.'

தயங்கியபடியே ஆராவமுதன் அறைக்குச் சென்றான் குருமூர்த்தி.

"நீர் நமக்கு மிகவும் நெருங்கி வந்து விட்டீரய்யா! சேஷன், உம் தங்கை புருஷனென்று இதுவரை சொல்லவேயில்லையே!"

"சேஷனை உங்களுக்குத் தெரியுமென்று எனக்குத் தெரியாதே!"

"சேஷனும் நானும் ஐந்தாம் வகுப்பில் ஆரம்பித்து பி. ஏ. முடிய ஒன்றாகப் படித்தவர்கள் ஐயா!......உம். இருக்கட்டும். உம்மை எதற்காக இங்கே அழைத்தேனென்று தெரியுமா?

"என் மாமா பெண் ஊரிலிருந்து வந்திருக்கிறாள். பம்பாய்க்குப் போகப் போகிறாள். உம் தங்கைக்கும் அவளுக்கும் பம்பாயில் சிநேகமாம். அவள் மூலமாகத்தான் சேஷன் உம்முடைய தங்கை புருஷன் என்ற விஷயம் எனக்குத் தெரிந்தது. நேற்று சைனாபஜாரில் உம்முடைய தங்கையைச் சந்தித்தபோதுதான் இந்த விஷயம் அவளுக்கே தெரிந்ததாம். அதிருக்கட்டும். நாளைக்கு முதல் பஸ்ஸில் தங்கையை அழைத்துக் கொண்டு திருப்பதிக்குப் போகப் போகிறீராமே!"

"ஆமாம். நாளை ராத்திரியே திரும்பி விடலாமென்று இருக்கிறேன்."

"நல்லதாய்ப் போயிற்று. என்னுடைய மாமா பெண்ணும் இங்கு வந்ததிலிருந்து திருப்பதி திருப்பதி என்று உயிரை விட்டுக் கொண்டிருக்கிறாள். நான் அழைத்துப் போவதற்குச் சௌகரியமில்லாமல் இருக்கிறது. ஆகவே உம்முடைய யாத்திரைக் கோஷ்டியில் அவளையும் சேர்த்து விடலாமென்று பார்க்கிறேன். அவளும் வருவதாயிருந்தால் தனக்கு மிகவும் சந்தோஷமாயிருக்குமென்று உம்முடைய தங்கையே சொன்னாளாம். திருப்பதியிலிருந்து திரும்பி வந்ததும் என் மாமா பெண்ணுக்காகச் செலவு செய்த பணத்தைக் கணக்குப் பார்த்து வாங்கிக் கொள்ளும். பிரயாண அலுப்புடன் இங்கட் கிழமையே ஆபீசுக்கு வந்து நிற்கவேண்டாம். லீவு போட்டுவிடும்."



"சம்பளப் பட்டுவாடாக் கணக்கையும் கையிருப்புத் தொகையையும் உங்களிடம் ஒப்படைக்க வேண்டுமே. இன்று இன்னும் சிலபேருக்குப் பட்டுவாடா செய்ய வேண்டியதுபாக்கியிருக்கு!"

"பரவாயில்லை. நீர் எங்கே ஓடிப் போகப் போகிறீர்? செவ்வாய்க் கிழமையன்றே வந்து கணக்கை ஒப்பித்தால் போகிறது" என்றார் ஆராவமுதன்.

திருப்பதிக்கு எல்லோரும் புறப்படும்போது பத்மாவுக்கு மட்டும் தனியே வீட்டில் உட்கார்ந்திருக்கப் பிடிக்குமா? அவளையும் யாத்திரைக் கோஷ்டியில் சேர்த்துக் கொள்ளும்படியாயிற்று. ஆகவே நான்கு வனிதாமணிகளுக்கு நடுநாயகமாகத் திருப்பதி யாத்திரையைத் தொடங்கினான் குருமூர்த்தி. பஸ் புறப்பட்ட பின்பும் அவன் மனம் மட்டும் நகராமல் அதே வேதனையில் சூழ்ந்திருந்தது.

திடீரென்று காண கடூரமான ஒலி. நூறு பெருச்சாளிகள் சேர்ந்தாற் போல் கோவில் கதவின் இடுக்கில் அகப்பட்டுக் கொண்டால் எப்படி அலறும் என்று விளக்குவது போல் தீனமாக அலறிக் கொண்டு ஒரு குலுக்கலுடன் நின்று விட்டது பஸ். எல்லோரும் திகைப்புடன் வெளியே எட்டிப் பார்த்தனர்.

டிரைவர் உதட்டைப் பிதுக்கினான். "பின் சக்கரத்து டயர் வெடித்துவிட்டது. அதைச் சரிப்படுத்திப் பஸ்ஸைக் கிளப்புவதற்குக் குறைந்தது மூன்று மணி நேரமாவது ஆகும்" என்று அறிவித்தான்.

குருமூர்த்திக்குக் கோபம் கோபமாய் வந்தது. சொல்லி வைத்தாற்போல் எல்லா இடைஞ்சல்களும் இப்படி ஒன்று சேர வேண்டுமா? இந்த மாதம் பிறந்த வேளையே சரியில்லை போல் இருக்கிறது. முதல் கோணல் முற்றும் கோணல் என்றல்லவா ஒவ்வொன்றும் ஆகிக் கொண்டிருக்கிறது!

அதுவரையும் சோர்ந்து துவண்டு உட்கார்ந்திருந்த அத்தையம்மாள் சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்தாள். "குரு, கால்நடையாகத்தான் நாம் ஏழுமலையானைத் தரிசிக்கப் போக வேண்டும். நாம் பஸ்ஸில் வந்ததற்குத் தண்டனையாகப் பஸ்ஸையே நிறுத்தி விட்டார் பகவான்!" என்றாள் அத்தை.

"ஆமாம், அண்ணா! மூச்சைப் பிடித்துக் கொண்டு இந்தப் பஸ்ஸில் பிரயாணம் செய்வதை விட நடந்து போவது எவ்வளவோ குஷியாயிருக்கும்" என்றாள் ராஜம்.

"நடந்து போனால்தான் மலைக்காட்சிகளை நன்றாக ரசிக்க முடியும்" என்றாள் பத்மா.

"எனக்கும் ரொம்ப நாட்களாக அதுதான் ஆசை" என்று தன் ஆமோதிப்பைத் தெரிவித்தாள் ஆராவமுதனின் மாமா பெண் பூமா.

இவ்வளவு பேரின் ஏகோபித்த தீர்மானத்துக்குத் தலைவணங்காமல் குருமூர்த்தி வேறு என்ன செய்ய முடியும்?

கால் கடுக்க நடந்து வந்து களைப்புடன் எம்பெருமான் சந்நிதியைச் சேர்வதில் உள்ள தெய்விக இன்பத்தை அன்றுதான் உணர்ந்தான் குருமூர்த்தி. கோபுரத்தைத் தூரத்தில் கண்டதுமே "கோவிந்தா! கோவிந்தா!" என்று வாய்விட்டுக் கூவி விட்டான்.

ஆனால் அதே சமயம் அவர்களைக் கடந்து சென்ற பெரிய கார் ஒன்று சற்றுத்தூரம் போய் நின்றது. நின்றது மட்டுமல்ல; பின்னோக்கி வந்தது. காரின் சொந்தக்காரர் வெளியே எட்டிப் பார்த்தார்.

"அடேடே! குருமூர்த்தி, நீதானா? பழக்கமான குரல் என்னைப் பெயர் சொல்லிக் கூப்பிடுவதைக் கேட்டதும் காரை நிறுத்தச்



சொன்னேன். பெரிய பக்தனாக மாறி விட்டாயே! குடும்ப சகிதம் கால்நடையாகவே மலை ஏறி வந்திருக்கிறாயே!'' என்று அவர் பேசிக் கொண்டே போகக் குருமூர்த்தியின் திகைப்பு அதிகரித்துக் கொண்டே போயிற்று.

''நீங்கள்...நீங்கள்...நான் உங்களை...''

''நீங்களாவது நாங்களாவது? எனக்கென்னடா மரியாதை வேண்டியிருக்கிறது? காரில் போய் விட்டால் நான் பெரிய மனிதன் ஆகி விடுவேனா? எப்படியிருந்தாலும் நான் உன் பழைய கோவிந்தன் தானேடா? அந்த நாளில் என்னை ஓட ஓட விரட்டுவாயே, மறந்து விட்டாயா?''

குருமூர்த்திக்குச் சட்டென்று ஞாபகம் வந்தது. வகுப்பிலேயே மண்டு என்று பெயர் வாங்கியவன் கோவிந்தன். கணக்கு மண்டையில் ஏறவில்லையென்று எப்போது பார்த்தாலும் குருமூர்த்தியைத்தான் தொந்தரவு செய்து கொண்டிருப்பான். அந்தக் கோவிந்தனா இப்படி இருக்கிறான்! அதிர்ஷ்ட தேவதையின் பார்வை எப்படித் திசை மாறுகிறது!

''என்னடா மண்டு மாதிரி நிற்கிறாய்? புரிகிறதா, புரியவில்லையா?''

''புரிகிறது. கோவிந்தா! ஆனால் நான் அழைத்தது உன்னையல்ல, பெருமாளை!''

''அப்படியா? நான் ஏமாந்தேன்!''

''அதிருக்கட்டும்! தரிசனத்தை முடித்துக்கொண்டு திரும்புகிறாய் போலிருக்கிறது.''

''ஆமாம். சென்னைக்குத்தான் போகிறேன். நான் கம்பெனி நடத்துவது கல்கத்தாவில் என்று உனக்குத் தெரியும் இல்லையா?''

தெரியா விட்டாலும் தெரிந்தவன்போல் தலையை ஆட்டினான் குருமூர்த்தி.

''பிஸினஸ் விஷயமாகத்தான் பட்டணத்துக்கு வந்திருக்கிறேன். அதிருக்கட்டும். நீ பட்டணத்தில்தானே இருக்கிறாய்? உன் விலாசத்தைக் குறித்துக் கொள்கிறேன்'' என்று கோவிந்தன் டயரியைக் கையில் எடுத்துக் கொண்டதும் குருமூர்த்தி தன் விலாசத்தைக் கூறினான். கோவிந்தன் அதைக் குறித்துக் கொண்டு காரைக் கிளப்பினான். தங்க இடம் பிடித்து ஸ்நானபானாதிகளை முடித்துக் கொண்டு கோயிலுக்குப் போய்ச் சேருவதற்கும் தர்ம தரிசனத்துக்கும் சரியாயிருந்தது.

மறுநாள் ஆபீசுக்குப் புறப்படுவதற்கான ஆயத்தம் செய்து கொண்டிருந்த போது மேஜை டிராயரில் இருந்த பர்ஸை எடுத்து நிஜார்ப் பையில் போட்டுக் கொண்டான் குருமூர்த்தி. இதென்ன, பர்ஸ் கனக்கிறதே?

நிஜார்ப் பையிலிருந்து பர்ஸை எடுத்துப் பிரித்தான். அவனால் தன் கண்களையே நம்ப முடியவில்லை. திடீரென்று இவ்வளவு பணம் அதில் எப்படி வந்தது? அவ்வளவும் பத்து ரூபாய் நோட்டுகள்! எண்ணிப் பார்த்தான். பன்னிரண்டு நோட்டுகள் இருந்தன. இவை தவிர ஒரு ரூபாய் நோட்டுக்களாக எட்டு இருந்தன. அவன் செலவுக் கணக்குப் போட்டதுதான் தப்பா? இந்த மாதம் முழுதும் தப்புக் கணக்காகவே போட்டுக் கொண்டிருக்கப் போகிறானா?

கலகலவென்ற சிரிப்பொலி கேட்டுத் திரும்பினான். சிரித்துக் கொண்டே பத்மா அவனருகே வந்தாள். ''இவ்வளவு நோட்டுக்கள் இதில் எப்படி வந்தது என்று பார்க்கிறீர்களா? எல்லாம் குறளி வேலை!'' என்று கூறி மீண்டும் சிரித்தாள்.

''புதிர் போடாதே பத்மா. ஆபீசுக்கு நேரமாகிறது'' என்றான் குருமூர்த்தி.

''அந்தக் குறளி உங்கள் எதிரேதான் நிற்கிறது'' என்றாள் பத்மா.

"உனக்கு ஏது இவ்வளவு பணம் ?"

"அத்தையம்மாள் என்னிடம் கொடுத்த நூறு ரூபாயை உங்களிடமிருந்து திருப்பி வாங்கிக் கொண்டாரே, எதற்கென்று நினைக்கிறீர்கள்? அதை அப்படியே எனக்கு வெகுமதியாகக் கொடுத்துவிட்டார். பூமா தனக்கு ஆன செலவுக்கென்று இருபத்தைந்து ரூபாய் கொடுத்தாள். அவ்வளவு பணத்தையும் நானே வைத்துக் கொண்டிருக்கலாம். ஆனால் உங்கள் பர்ஸில் மிஞ்சியிருந்த பணத்தைப் பார்த்துப் பரிதாபமாயிருந்தது. நூற்று இருபத்தைந்து ரூபாயையும் அப்படியே இதில் வைத்துவிட்டேன்."

"பத்மா, நீ தெய்வம் !"

"மாதச் செலவுக்கு இந்தப் பணம் போதுமில்லையா ?"

"இவ்வளவையும் கையில் வைத்துக் கொண்டு செலவு செய்வதாயிருந்தால் போதும்தான். ஆனால் இதிலிருந்து நூறு ரூபாயை எடுத்து ஆபீஸில்கட்டவேண்டுமே!"

"ஆபீஸில் கட்ட வேண்டுமா ? ஏன்?"

காரணத்தை விளக்கினான் குருமூர்த்தி. பத்மா அதைக் கேட்டு மனம் சோரவில்லை.

"போனால் போகிறது. செலவை எப்படியாவது சமாளித்துக் கொள்ளலாம். உங்கள் நல்ல பெயருக்குக் களங்கம் ஏற்படாதிருந்தால் அதுவே போதும்" என்றாள்.

ஆபீஸ் போய்ச் சேர்ந்து ஆசனத்தில் அமர்ந்ததுமே அக்கௌண்டெண்ட் அவனைக் காண விரும்புவதாக வந்து கூறினான் ஆபீஸ் பையன். கணக்கையும் கையிருப்புத் தொகையையும் கூடவே எடுத்துக் கொண்டு ஆராவமுதனைக் காணச் சென்றான் குருமூர்த்தி.

"கணக்கெல்லாம் தயார்தானா ?"

"இதோ கையோடு கொண்டு வந்திருக்கிறேனே !"

"கையிருப்புத் தொகை ?"

"கணக்குப்படி இருக்கிறது."

"சரியாகப் பார்த்தீரா ?"

"நீங்களே பார்த்துக் கொள்ளுங்களேன்!" என்று கணக்கையும் பணத்தையும் அவர் முன் வைத்தான் குருமூர்த்தி.

ஆராவமுதன் எண்ணிப் பார்த்து விட்டு அர்த்தபுஷ்டியுடன் தலையை ஆட்டினார்.

"அப்படியானால் வெங்கடேசன் சொன்னது தான் தப்பாயிருக்க வேண்டும்."

"வெங்கடேசனா ?"

"ஆமாம். லைசென்ஸ் ஆபீசர் வெங்கடேசன் முதல் தேதியன்றே ஊருக்குக் கிளம்புவதாயிருந்தாலும், சம்பளம் வாங்கியதும் நேரே, ஸ்டேஷனுக்குப் போய் ரயில் ஏறியிருக்கிறான். ஊருக்குப் போய்ச் சேர்ந்த பிறகு பணத்தை எண்ணிப் பார்க்கும்போது நூறு ரூபாய் அதிகப்படியாக இருந்ததாம். அதிகப்படியாகக் கொடுத்துவிட்டுக் கணக்கைச் சரிக்கட்ட முடியாமல் நீர் திண்டாடப் போகிறீரே என்று நினைத்தபோது அவனுக்கு ஊரில் இருப்புக் கொள்ளவில்லை. செலவையும், சிரமத்தையும் பார்க்காமல் மறு ரயிலிலேயே புறப்பட்டு வந்து என்னிடம் அந்த நூறு ரூபாயைக் கொடுத்துவிட்டுப் போனான்" என்று ஆராவமுதன் விவரித்தபோது குருமூர்த்தி துள்ளிக் குதித்தான்.

"ஸார், வெங்கடேசன் சொன்னதுதான் சரி. என் நேர்மையை நீங்கள் சந்தேகிக்கக் கூடாது என்பதற்காகக் கைப் பணத்தைப் போட்டுத்தான் கணக்கைச் சரிக்கட்டினேன்."

"அதற்கு அர்த்தம் மற்றவர் நேர்மையில் உமக்கு நம்பிக்கையில்லை என்பதுதானே ?"

"வெங்கடேசனைப் போன்ற உத்தமமான குணம் படைத்தவர்களும் இந்த உலகத்தில் இருக்கிறார்கள் என்பதை நான் மறந்து விட்டேன். அது என் தவறுதான்."

"இந்தத் தவறுக்கு நீர் பிராயச்சித்தம் செய்துதான் ஆகவேண்டும்."

"என்ன செய்ய வேண்டும் ?"

"உம்முடைய வேலையை ராஜினாமாச் செய்துவிட வேண்டும்."

"இதென்ன ஸார் வேடிக்கை ?"

"வேடிக்கை இல்லை. உண்மையாகத்தான் சொல்கிறேன். இனி உமக்கு இந்த ஆபீஸில் வேலை கிடையாது. மானேஜரே உம்மிடம் இதைச் சொல்லச் சொன்னார். நீராக ராஜினாமா செய்யாவிட்டால் நாங்களே போகச் சொல்லும்படி இருக்கும்."

பேரிடியால் தாக்குண்டவன் போல் அயர்ந்து போனான் குருமூர்த்தி.

கொட்டிவிடத் தயாராகக் குமுறித் ததும்பும் ஆத்திரத்துடன் மானேஜரது அறைக்குள் திடும் பிரவேசமாக நுழைந்த குருமூர்த்தி அங்கு இன்னொரு கனவானும் உட்கார்ந்திருப்பதைக் கண்டு திகைத்து நின்றான். அவர் வேறு யாருமில்லை. திருப்பதியில் சந்தித்த கோவிந்தன்தான் !

"வாப்பா குருமூர்த்தி, உன்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்" என்று அவனை வரவேற்றார் கோவிந்தன்.

"உட்காருங்கள் மிஸ்டர் குருமூர்த்தி! ஆராவமுதன் எல்லாம் சொல்லியிருப்பாரே!" என்றார் மானேஜர்.

"சொன்னார் ஸார், அதைப்பற்றித் தான்....!"

"உங்களுடைய சேவையை இழக்கவேண்டியிருப்பது பற்றி எங்களுக்கும் வருத்தமாகத்தான் இருக்கிறது. ஆனால் மிஸ்டர் கோவிந்தன் பிடிவாதமாக வற்புறுத்துகிறார். உங்கள் சேவை அவருக்குக் கட்டாயம் தேவையாம்."

குருமூர்த்தி வியப்புடன் கோவிந்தனைப் பார்த்தான்.

"ஆமாம் குருமூர்த்தி. என் கம்பெனியின் கிளைக் காரியாலயம் ஒன்று சென்னையில் ஆரம்பிப்பதாயிருக்கிறேன். அதற்கு நேர்மையும், பொறுப்பும் உள்ள மானேஜர் தேவை. யாரை நியமிப்பதென்று குழம்பிக் கொண்டிருந்தேன். திருப்பதியில் உன்னைச் சந்தித்த பிறகு என் குழப்பம் நீங்கிவிட்டது. கிளைக் கம்பெனியின் மானேஜராக உன்னையே நியமிப்பதென்று முடிவு செய்து விட்டேன். மாதச் சம்பளம் ஐந்நூறு ரூபாய். கார், குடியிருக்கப் பங்களா எல்லாம் கம்பெனிச் செலவில். பிஸினஸ்ஸுக்குத் தகுந்த கமிஷனும் உண்டு! என்ன, சரிதானே?" என்று கேட்டு அவன் தோளை உலுக்கினார் கோவிந்தன்.

ஆனால் பேசுவதற்கு வார்த்தைகள் ஏது குருமூர்த்தியிடம்? வார்த்தைகளுக்கு அப்பாற்பட்ட உணர்ச்சிப் பெருக்கு அவன் உள்ளத்தில் வியாபித்திருந்தது.



# புது வெள்ளம்



ஆகஸ்ட் 6

கல்கி

ஆண்டு மலரில் ஆரம்பமாகிறது!





# திருமூலர் தவமொழி

## ராஜாஜி - சோமு

### 15

இந்த பௌதிக உடம்பு நிலையற்றது. இது அழிந்து விட்டால் இதனுள்ளே நிற்கும் தத்துவங்கள் எல்லாம் சிதைந்து விடுகின்றன. ஆகையால், உயிர் இருக்கும்போது மெய்ப்பொருளை அறிவதற்காக இந்தத் தத்துவங்களைப் பயன்படுத்தி உய்ய வேண்டும் என்று உபதேசித்தார் திருமூலர். இனி, இளமைப் பருவத்தின் நிலையாமையைத் தனியாக எடுத்து அறிவுறுத்துகிறார். அந்தப் பருவத்தில்தான் மோகத்தின் வேகம் அதிகம்.

வாலிபப் பருவம் சீக்கிரமே முடிவடையும் என்பதை மறந்து உடம்பின் வலிமையைக் கொண்டு உலக இச்சைகளிலே ஈடுபட்டு மக்கள் கெட்டுப் போகிறார்களே என்று நொந்தவராய், முனிவர் வாலிபப் பருவம் நிலையற்றது என்பதையும், இந்த உடம்பில் வலு இருக்கும்போதே அதைக் கொண்டு மெய்ப்பொருளை அடையும் வழியிலே பயிற்சி செய்ய வேண்டும் என்பதையும் உணர்த்துகிறார்.

கிழக்கே உதிக்கிற சூரியன் விறுவிறு என்று ஓடி மேற்கே விழுந்து மறைகிறான். இளமையான கன்று மூப்படைந்து மாடாகிச் சில நாட்களில் இறந்து விழுகிறது. இதையெல்லாம் பார்த்தும் உலக மக்கள் தெளிவடைகிறார்கள் இல்லையே. நல் வழியிலே செல்லக் காலம் தாழ்த்துகிறார்களே என்று வருந்துகிறார் முனிவர்.

**கிழக்கு எழுந்து ஓடிய**
**ஞாயிறு மேற்கே**
**விழக்கண்டும் தேறார்**
**விழியிலா மாந்தர்**

[கிழக்கு எழுந்து-கிழக்கே உதித்து ஞாயிறு – சூரியன். தேறார் – தெளிவு பெற மாட்டார். விழியிலா மாந்தர்– குருடாகப் போய்விட்ட மக்கள். அதாவது உண்மையைக் காணக்கூடிய அகக் கண் இல்லாத மக்கள்.]

**குழக்கன்று மூத்து, எரு**
**தாய்ச்சில நாளில்**
**விழக்கண்டும் தேறார்**
**வியன்உல கோரே**

[குழக்கன்று–இளம் கன்று. அது வளர்ந்து மூத்து மாடாகிறது; பிறகு இறந்து விடுகிறது. வியன் உலகோர் - இந்தப் பரந்த உலகிலுள்ள மக்கள்.]

**கிழக்கெழுந்து ஓடிய**
**ஞாயிறு மேற்கே**
**விழக்கண்டும் தேறார்**
**விழியிலா மாந்தர்;**
**குழக்கன்று மூத்து, எரு**
**தாய்ச்சில நாளில்**
**விழக்கண்டும் தேறார்**
**வியனுல கோரே!**

உதிக்கும் சூரியன் மறைகிறான். இளங்கன்று எருதாகி உழைத்து உழைத்து முடிவில் இறந்துபோய் விடுகிறது. இதையெல்லாம் பார்த்துங் கூட, தாங்கள் என்றும் இளமையோடு இருக்கப் போவதாக எண்ணி மயங்குகிறார்கள் மக்கள்! இந்த மயக்கத்தில் வாழ்நாள் வீணாகிறது. மெய்ப்பொருளைக் காணாமல் மடிகிறார்களே என்று மக்களின் பேதைமைக்காக வருந்துகிறார் திருமூலர்.

**ஆண்டு பலவும்**
**கழிந்தன : அப்பனைப்**
**பூண்டுகொண்டு ஆரும்**
**புகுந்தறிவார் இல்லை !**

பல ஆண்டுகள் கழிந்தோடி விட்டன. இளமைப் பருவம் முது மைப் பருவமாகி விட்டது. அப்படி ஆகியுங்கூட, யாரும் என் அப்பனுகிய இறைவனை இந்த உடம்புக்குள்ளே புகுந்து காணும் அறிவைப் பெறு கிறார்கள் இல்லையே !

**அப்பனைப்**
**பூண்டுகொண்டு ஆரும்**
**புகுந்தறிவார் இல்லை**

[அப்பனை—எல்லாருக்கும் தந்தை யாகிய இறைவனை. பூண்டு கொண்டு—நன்றாகப் பற்றிக் கொண்டு. ஆரும்—யாருமே. புகுந்தறிவார் இல்லை—ஆழ்ந்து ஞானம் பெற்றறிந்தவர்கள் இல்லை; அதாவது மனிதர்களுடைய வாழ்நாள் பயனற்றுப் பல்லாண்டுகள் கழிகிறது.]

**நீண்டன காலங்கள்**
**நீண்டு கொடுக்கினும்**

நீண்டு எல்லையற்று நிற்கிற காலக் கணக்கு, இன்னும் இவர்களுக்காக இறைவன் மேலும் கொடுத்தாலும்,

**தூண்டு விளக்கின்**
**சுடர்அறி யாரே**

தூண்ட வேண்டிய விளக்குச் சுடர் இருப்பதை அறியாமல், தூண்டாமல் விட்டு வீணுக்குகிறார்களே !

இறைவனே கருணை கொண்டு உப தேசித்து அருளினலன்றி, மக்களுக்கு மெய்ஞ்ஞானம் கிட்டுவதில்லை.பிறந்து, வளர்ந்து, மூத்து, ஆண்டுகள் பல கழிந்தும் ஞானமற்ற நிலையிலேதான் மடிகிறார்கள். இந்த உடம்புக்குள்ளே ஞான ஒளி வீசுகின்ற சுடரை எப் படித் தூண்டவேண்டும் என்று அறி யாமல் கடமையை மறந்து மக்க ளுடைய காலம் வீணுகிறது என்று நொந்து பாடுகிறார் தவயோகி.

**ஆண்டு பலவும்**
**கழிந்தன ; அப்பனைப்**
**பூண்டுகொண்டு ஆரும்**
**புகுந்தறிவார் இல்லை !**
**நீண்டன காலங்கள்**
**நீண்டு கொடுக்கினும்**
**தூண்டு விளக்கின்**
**சுடர்அறி யாரே !**



காண்ட்ராக்டர் ஸ்ரீ வி.எஸ். சுந்தரம் அய்யர் குமாரி சௌ. விசாலாட்சிக் கும், பம்பாய் ஸ்ரீ என். வைத்திய நாதய்யர் குமாரர் சிரஞ்சீவி வி. பால சுப்பிரமணியன், பி. ஈ. (Department of Light house & Light Ships, Bombay) அவர்களுக்கும் 7 - 5 - 61 அன்று முந்தரசநல்லூர் "ராஜேஸ்வரி ஸதஹ"வில் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.

வாழ்க, மணமக்கள் !



சூரியன் மார்க் கலப்பு உரக் கம்பெனி திரு என். ராஜகோபால சாமி நாயுடு புதல்வி செல்வி ஆர். விசாலாட்சிக்கும் திருப்பூர் லக்ஷ்மி காட்டன் கம்பெனி திரு எஸ். ரங்கசாமி நாயுடு குமாரன் செல்வன் ஆர். மவுனுசாமிக்கும் 15 - 6 - 61ல் கோயமுத்தூர், ஆர். எஸ். புரம் "ரவிச்சந்திர பவ"னில் விமரிசை யாகத் திருமணம் நடைபெற்றது.

வாழ்க, மணமக்கள் !



# அஞ்சறைப் பெட்டி





வக்கீல் தொழிலில் நான் பொய்யைத் துணை கொண்டது கிடையாது...ஒரு வழக்கில் கடுமையான சோதனை ஏற்பட்டது. அவ்வழக்கில் கணக்கு முறை சம்பந்தமான அம்சம் தகுதி பெற்ற கணக்கர்களின் மத்தியஸ்தத்துக்கு நீதி மன்றத்தாரால் விடப்பட்டிருந்தது.

மத்தியஸ்தர்கள் என் கட்சிக்காரருக்கு முற்றிலும் அனுகூலமாய்த் தீர்ப்பளித்திருந்தார்கள்.

ஆனால் அவர்கள் கணக்கில் ஒரு தவறு செய்துவிட்டார்கள். வரவுக் கலத்தில் இருக்க வேண்டிய ஒரு தொகை செலவுக் கலத்தில் தவறுதலாக இருந்தது.

எதிரிகள் இத் தவறுதலைக் கண்டுபிடிக்கவில்லை. இந்த வழக்கில் நான் உதவி வக்கீலாயிருந்தேன். தவற்றை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டுமென்றேன். 'நல்லதுஅப்படியானாலும் நீங்களே வாதம் செய்யுங்கள். உங்களுடைய நிபந்தனையின் மேல் வழக்கு நடத்த நான் தயாராயில்லை' என்று பெரிய வக்கீல் தீர்மானமாகச் சொன்னார்...

கடைசியில் எதிர்த்தரப்பு வக்கீலின் ஆட்சேபம் நிராகரிக்கப்பட்டது. நீதிபதிகள் மத்தியஸ்தரின் தீர்ப்பையே உறுதி செய்தார்கள்....அளவற்ற மகிழ்ச்சியடைந்தேன்.

ஆனால் வக்கீல் தொழிலில் உண்மையைக் கடைப்பிடித்தாலுங்கூட அந்தத் தொழிலே அடிப்படையில் தீமையானது என்பதை வாசகர்கள் நினைவில் வைக்க வேண்டும்.

– சத்திய சோதனை

அவையில் வந்தமர்ந்த அரசனின் முகத்தில் கவலைக் குறிகள் காணப்பட்டன. ஆழ்ந்த யோசனையுடன் தோன்றிய அவர் மந்திரி பிரதானிகளை வினவினார். "ஏராளமாக வரி போடுகிறேன். எத்தனை விதமான வரிகள் என்பதற்குக் கணக்குக்கூட மறந்து போய் விடுகிறது எனக்கு. அப்படி இருந்தும் ஒரு நல்ல காரியத்துக்கு என்று கஜானாவில் எப்போது பணம் கேட்டாலும் இல்லை என்று கைவிரிப்பாகவே இருக்கிறதே, ஏன்? வரிகளெல்லாம் எங்கேதான் போய் விடுகின்றன?"

அவையினர் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டிருந்தனர். என்ன பதில் சொல்வது என்று அவர்கள் திகைத்துக் கொண்டிருந்தபோது பிரதான மந்திரி மட்டிலும் 'இதோ ஒரே நிமிஷத்தில் அதன் காரணத்தைக் கூறுகிறேன்' என்று கூறிவிட்டு எழுந்து போனார். திரும்பியபோது அவர் கையில் ஒரு பெரிய ஐஸ்கட்டி இருந்தது. "மகாராஜா! இதோ பாருங்கள் வரிகளை!" என்றார் பிரதான மந்திரி.

பின்னர் அந்த ஐஸ் கட்டியைச் சபையில் கூடியிருந்த ஒவ்வொருவர் கையிலும் கொடுத்துக் கொடுத்து வாங்கினார். கடைசியாகப் பிரதான மந்திரி அதனைத் தமது கையில் வைத்துக் கொண்டிருந்த போது சின்னஞ்சிறிய ஐஸ் துண்டாக அது கரைந்து விட்டிருப்பதைக் கூர்ந்து நோக்கினார் மன்னர். அப்போது, "மகாராஜா போட்ட வரிகள் இதற்கும் அதிகமாகக் கைமாறி விடுகின்றனவே?" என்றார் மந்திரி.





போர் விமானங்கள் 60,000, விமானங்களைச் சுடும் பீரங்கிகள் 20,000, டாங்குகள் 45,000, 18,000,000 டன் எடையுள்ள கப்பல்கள். மலைப்பாயிருக்கிறதா?

எதிரிகளை முறியடிக்க இரண்டாம் உலக மகா யுத்தத்தின் போது இவ்வளவையும் உற்பத்தி செய்ய மக்களைக் கேட்டுக் கொண்டார் அமெரிக்க ஜனாதிபதி ரூஸ்வெல்ட்.

அவர் ஜப்பானிய சக்கரவர்த்திக்குச் சமாதானம் கோரி வேண்டுகோள் விடுத்தார். மறுநாளே அதற்குக் கிடைத்த ஆணித்தரமான பதில் — அமெரிக்க ராணுவத் தளமான பேர்ல் ஹார்பரில் ஜப்பானிய விமானங்கள் குண்டுமழைபொழிந்தன!

இதன் பலன்தான் முதலில் கூறிய உற்பத்தித் திட்டம்.

யுத்த அறிவிப்பு செய்த ரூஸ்வெல்ட் அன்று தமது மக்களுக்குக் கூறினார்: "நாம் தேடும் உண்மையான லட்சியம் பயங்கரமான யுத்தகளத்துக்கு அப்பால் வெகு தொலைவில் உள்ளது. இன்றையக் கொடுமையையும் அந்த இறுதி நன்மையையும் உத்தேசித்தே பலாத்காரத்தை இப்போது நாம் மேற்கொள்ள வேண்டியவர்களாயிருக்கிறோம். அமெரிக்கர்களாகிய நாம் அழிப்பவர்களல்ல; ஆக்கத் திறனுள்ளவர்கள்."

"சர்தார் காரியவாதி நேரு சிந்தனையாளர்" என்றார் காந்திஜி பிர்லாவிடம். சிந்தனையாளர்களுக்கே கோபம் அதிகம் போலும்!

ஒருமுறை நேருஜி கேரளத்துக்குப்போயிருந்தார். வழியில் ஒரு கிராமத்தில் பதினைந்தே நிமிஷங்கள் தாமதிக்க ஒப்புக்கொண்டார். மக்களுக்குக் கொண்டாட்டம். வாண வேடிக்கை அதிர்வேட்டு சக்கைப் போடு!

உள்ளூர் பள்ளிக்கூடத் தலைமை ஆசிரியர் அவரை வரவேற்று வாழ்த்துரையை இரண்டே நிமிஷங்களில் முடித்துக் கொண்டார்; நேருஜியின் பேச்சைப் பதின்



மூன்று நிமிஷங்களாவது கேட்கலாம் என்ற ஆவல்.

நேரு பேசத் தொடங்கி மூன்று நிமிஷங்கள் ஆகியிருக்கும். 'படார்' என்று ஓர் ஓசை! அதிர்வேட்டுக்காரரது உற்சாகத்தின் விளைவு!

வந்தது கோபம் நேருஜிக்கு. சட்டென்று அந்தத் தலைமை ஆசிரியர் பக்கம் திரும்பினார். "நான் பேச்சை முடிக்க வேண்டும் என்பதற்கு அறிகுறிதானே இது?"

"இல்லை, இல்லவே இல்லை!" என்று அலறினார் தலைமை ஆசிரியர்.

"ஆமாம்" என்றார் நேரு ஆணித்தரமாக. மேடையிலிருந்து இறங்கிக் காரில் ஏறிவிட்டார்!

விஞ்ஞான சாதனைகள் பலவும் எதேச்சையாக எழுந்த 'ஏன்' என்ற கேள்வியிலிருந்து தான் ஆரம்பமாகியுள்ளது.

ஐசக் நியூட்டன் ஆப்பிள் மரத்தடியில் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கையில் 'பட்' டென்று அவர் தலையில் ஆப்பிள்விழுந்தது. 'ஏன்?' என்ற கேள்வி பிறந்தது! புவியீர்ப்புத் தன்மை புரிந்தது.

பெர்கின் என்பவர் மரப் பட்டைகளிலிருந்து எடுக்கப்படும் கொய்னா மருந்தை ரசாயனச் சேர்க்கை மூலம் உருவாக்க முயன்றார். கொய்னாவுக்குப் பதில் கரியநிறப் பொருள் ஒன்று கிடைத்தது. அது நீரில் கரையுமா என்றுசோதித்தார். இளஞ்சிவப்புநிறமாக நீர் மாறி அவரை வியப்பில் ஆழ்த்தியது. தற்செயலாக நேர்ந்த இச் சம்பவம் 'ஏன்' என்ற கேள்வியைப் போட்டது. விதம் விதமான கண்ணைக் கவரும் வர்ணங்களில் சாயப் பொருள்கள் உருவாயின!

'பிளெமிங்' கிருமிகளை 'டெஸ்ட் டியூப்'களில் வளர்த்து வந்தார். சர்வ ஜாக்கிரதையாக அவர் இருந்தும் கிருமிகளில் ஒரு பகுதி அழிந்தது. ஏன்? காரணத்தை ஆராயப் போய் ஒருவிதக் காளான் படர்ந்திருப்பதை அறிந்தார். பெனிஸிலியம் நொடேடம் என்ற அக்காளானிலிருந்து பெனிஸிலின் தயாரித்தனர்.



# அவர்கள் பி.ஓ.ஏ.ஸி.ஜெட்களைத் தேர்ந்தெடுத்ததேன்?



இஷ்டம்போல் உணவு



ஹிந்தி பேசத் தெரிந்த பணிப்பெண்கள்.



எங்கும் இறங்கிச் செல்ல சலுகை.



மகாராணி போன்ற உபசரணை.

**ரோல்ஸ்–ராய்ஸ் நல்வசதிகளோடு ஹாய்யாக உலக மெங்கும்–கிழக்கோ, மேற்கோ–சவாரி செய்யுங்கள்– பி ஓ ஏ ஸி காமெட்டிலும், 707 ஜெட் லைனர்களிலும்.**

முதலில் பிரயாணம் செய்து கட்டணம் பின்பு கொடுத்தால் போதும். நியமிக்கப் பட்ட உங்கள் உள்ளூர் ஏஜெண்ட் மற்றும் எங்கும் உள்ள பி. ஓ. ஏ. ஸி. ஆபீஸ்களும் உங்களுக்கு சேவை செய்ய காத்திருக் கின்றனர்.

**B·O·A·C**

உலகெங்கும் பி ஓ ஏ ஸி உங்களை நல்வசதியோடு கவனித்துக்கொள்கிறது.

பிரிட்டிஷ் ஓவர்ஸீஸ் ஏர்வேய்ஸ் கார்ப்பரேஷன். ஏயர்–இந்தியா மற்றும் குவான்டாஸ் இவர்களின் கூட்டுறவால் நடத்தப்படுகிறது.



நடிகர்: நான் மேடைமீது ஏறி நடிக்க ஆரம்பித்து விட்டால் நான் அந்தப் பாத்திரமாகவே ஆகிவிடுவேன். வேறு எதுவும் என் கண்ணில் படாது. சபையில் ஆட்கள் உட்கார்ந்திருப்பது கூட என் கண்ணில் பட்டது கிடையாது!

மற்றவர்: உண்மைதான். கண்ணில்பட யாராவது இருந்தால்தானே!

★

காதலன்: கண்ணே! நீ பக்கத்திலிருக்கும் போதுதான் உலகையே மறக்க முடிகிறது. அப்படியே உன்னையும் மறந்து சற்று நிம்மதியாய் இருக்க முடிகிறது. நீ இல்லையென்றால் எப்போது வந்துவிடுவாயோ என்று கவலையாக இருக்கிறது!



★

"எனக்குப் புதிதாக ஒரு குப்பைக் கூடை கொடுங்க!"

"நீ புதுசா என்ன கிழிச்சே, புதுக் குப்பைக் கூடை கேட்க?"

✱

"சார்! எது உடைந்து போனாலும் இந்தப் பசையால் சுலபமாக ஒட்ட வைக்கலாம். ஒரு புட்டி வாங்குங்கள்!"

"அட! போய்யா அவரைப் போய்க் கேட்டுண்டிருக்கயே. பாவம், அவர் மனசே உடைஞ்சுபோய் உட்கார்ந்திருக்கிறார்...!"

"என்ன டாக்டர்! என் மனைவியின் வைத்தியச் செலவு நூறு ரூபாய் ஆகிவிட்டதே! அவளுக்கு இந்த உடம்பு நான்கு வருடத்துக்கு முன்பு வந்திருந்தால் ரொம்பச் சௌகரியமாய் இருந்திருக்கும்."

"ஏன் அப்படிச் சொல்கிறேள்!"

"எனக்குக் கல்யாணம் ஆகி மூன்று வருடங்கள் ஆகிறது. அதற்கு முன்னால் உடம்புக்கு வந்திருந்தால் மாமனாரே பீஸ் கொடுத்திருப்பாரே என்றுதான்!"

★

கணவன்: நமக்குத்தான் கல்யாணம் ஆகிக் கொஞ்ச நாட்கள் ஆகிவிட்டதே. இனிமேல் நான் உன்னிடமுள்ள சில குறைபாடுகளைச் சுட்டிக் காட்டலாமா?

மனைவி: வேண்டாம், எனக்கே தெரியும். அவை மட்டும் என்னிடம் இல்லாவிட்டால் வேறு நல்ல வரனாக எங்கப்பா எனக்குப் பார்த்திருக்க மாட்டாரா?

★

இரண்டு கரையான்கள் பேசிக் கொண்டன: "என்னப்பா ரொம்ப அசதியாகப் படுத்துண்டிருக்கிறாய்?"

"ஒரு விருந்துக்கு 'மெனு' போட்ட காகிதங்களைச் சாப்பிட்டேன். ஏகப்பட்ட அயிட்டம். என்னாலே சாப்பிட முடியாமல் சாப்பிட்டு விழுந்து கிடக்கிறேன்!"

★

"டாக்டர்! நான் இறந்து விடுவேனா?"

"நிச்சயம் இறக்க மாட்டீர்கள்!"

"அது எப்படி அவ்வளவு நிச்சயமாகச் சொல்லுகிறீர்கள்?"

"என் பீஸ் பாக்கியை வாங்காமல் உங்களைச் சாக விடுவேனா?"

★

சமையல் புஸ்தகம் வாங்குவதற்காகத் தம்பதிகள் கடைக்குச் சென்றனர். ஒரு சிறிய சைஸ் சமையல் புஸ்தகத்தைப் பெண் எடுத்துப் புரட்டிப் பார்த்தபோது கடைக்காரர், "அது வேண்டாங்க. இதோ இந்தப் பெரிய புஸ்தகத்தை வாங்கிக் கொள்ளுங்கள்" என்றார். "வேண்டாம்! நாங்கள் மிகவும் குறைச்சலாகத்தான் சாப்பிடுவோம். அதனால் அந்தச் சின்னப் புஸ்தகமே எங்களுக்குப் போதும்" என்றாள் அந்தப் பெண்.

# சிரிக்காதே!




## 15 - பேய்ச்சிரிப்பு

ஆலமுற்றத்துப் பெருவீரரான நீலநாகமறவரிடம் அவமானமடைந்து வந்திருந்த நகைவேழம்பரை ஆறுதல் அடையச் செய்வதற்குப் பெருநிதிச் செல்வர் அரும்பாடுபட வேண்டியிருந்தது. பலபேர்களை அடிமையாக வைத்துக் கொண்டு ஆள்கிற அளவுக்குப் பெருஞ் செல்வராக இருந்தும் தவிர்க்க முடியாத சில இரகசியக் காரணங்களால் நகைவேழம்பர் என்னும் ஒரே ஒரு மனிதருக்கு முன் தாமே அடிமைபோல் நின்று தணிந்து போக வேண்டிய நிலை அன்று இரவில் அவருக்கு நேர்ந்து விட்டது.

வெளிப்படையாக நேருக்கு நேர் அந்த ஒற்றைக்கண் மனிதரிடம் பணிந்தாற் போலவும், பயந்தாற்போலவும் நடந்து கொண்டிருந்தாலும் பெருநிதிச் செல்வருடைய மனத்தில் அவர்மேல் தாங்க இயலாத கொதிப்பு விளைந்திருந்தது. நீண்ட நேர விவாதத்துக்குப் பின்னர், நகைவேழம்பரை அமைதி கொள்ளச் செய்திருந்தார் பெருநிதிச் செல்வர்.

"நீலநாக மறவரை எதிர்த்து நேரடியாக ஒன்றும் செய்வதற்கில்லை யென்பது உங்களுக்கே தெரிந்த செய்திதான் நகைவேழம்பரே! அவருடைய வலிமை உங்களையே தளரச் செய்து விட்டதென்று ஒப்புக் கொள்கிறீர்கள். அவருடைய கைகளை உணர்விழக்கச் செய்வதற்கு, 'என்னாலும் முடியாது, என் பாட்டனாலும் முடியாது' என்று என்னிடமும் மறுத்துச் சொல்லியிருக்கிறீர்கள். இந்த இரவு நேரத்தில் நமக்குள் வீண் விவாதம் எதற்கு? நீலநாகமறவரை வீழ்த்துவதற்கு மறைமுகமாக ஏதாவது செய்ய இயலுமா என்று நிதானமாகச் சிந்திக்கலாம். இப்போது நீங்கள் உணவுக் கூடத்துக்குச் சென்று பசியாறி விட்டு நிம்மதியாகப் போய் உறங்குங்கள்" - என்று ஆறுதலான வார்த்தைகளைச் சொல்லி நகைவேழம்பரை உறங்க அனுப்பியிருந்த பெருநிதிச் செல்வர் தம்முடைய உறக்கத்தை இழந்திருந்தார்.

'இந்த மாளிகையையும், உங்களையும் இங்கு குவிந்து கிடக்கும் செல்வத்தையும் அழித்தொழித்து விட்டுப் போய்க் காவிரியில் தலைமுழுக வேண்டும்போல் அவ்வளவு ஆத்திரத்தோடு வந்திருக்கிறேன்' என்று நகைவேழம்பர் குமுறலோடு கூறியிருந்த சொற்களை நினைத்து நினைத்துக் கொதிப்படைந்தார். நச்சுப் பாம்பு வளர்ப்பது போல் நகைவேழம்பரை வளர்த்ததன் பயன் தம்மேலேயே அந்த நஞ்சு பாய்ந்து விடுமோ என்று அஞ்சுகிற நிலைக்கு இன்று வந்திருப்பது அவருக்குப் புரிந்தது. இந்த நிலைக்கு ஒரு முடிவு கண்டு இரண்டில் ஒன்று பார்த்துவிட வேண்டுமெனத் துணிந்து விட்டார் பெருநிதிச் செல்வர்.

இத்தனை ஆண்டுகளாகத் தம்மிடமிருந்து அவரும், அவரிடமிருந்து தாமும் விலகியோ, பிரிந்தோ செல்ல முடியாமல் இருவரையும் பிணைத்துப் பின்னியிருந்த அந்தரங்கம் உடைந்து வெளிப்படவேண்டிய காலம் நெருங்கி விட்டதோ என்ற பயமும், நடுக்கமும் இன்று அவருக்கு ஏற்பட்டன. பெருநிதிச் செல்வர் தமது அந்தரங்க மண்டபத்தில் குறுக்கும் நெடுக்குமாகத் தனிமையில் நடந்து கொண்டே சிந்தித்தார். அவருடைய நெற்றியில் வியர்த்தது. இடையிடையே ஊன்றுகோலைப் பற்றியிருந்த கை பிடியை இறுக்கியது. சிந்தனையில் ஏதோ ஒரு முடிவை ஊன்றிப் பதித்துக் கொள்வதைப் புறத்தே காட்டுவதுபோல் நடந்து கொண்டிருக்கும்போதே சில இடங்களில் வேண்டுமென்றே ஓசையெழும்படி ஊன்றுகோலை அழுத்தி ஊன்றினார் அவர். வேகமாகக் கால்கள் நடந்த போது சிந்தனை மெதுவாகவும், சிந்தனை விரைந்தபோது கால்கள் மெதுவாகவும், அவர் நடந்த விதமே



சிந்தனையின் கறுகறுப்பையும், துவண்ட நிலையையும் மாறி மாறிப் புலப்படுத்தின.

அரை நாழிகைக்குப் பின் தமது அந்தரங்க மண்டபத்துக்குள் இருந்து அவர் வெளியேறின போது உறுதியான திட்டத்துடன் புறப்படுகிறவரைப் போலக் காட்சி யளித்தார். அந்த உறுதி புலப்பட ஊன்றுகோலை இறுகப் பற்றி அழுத்தி ஊன்றி நடந்து மாளிகையின் உணவுக் கூடத்தை அடைந்தார். அவர் உணவுக்கூடத்தில் நுழைந்த அதே நேரத்தில் அவருக்குக் கொடுக்கவேண்டிய பால் நிறைந்த பொற்கலத்தோடு பரிசாரகர் எதிர்ப்பட்டார். பச்சைக் கருப்பூரம், ஏலம் முதலியனவும் பருகுவதற்குச் சுவை யூட்டும் பிற பொருள்களும் இட்டுக் காய்ச்சப்பெற்ற பால் மணம் பரப்பியது.

மாளிகையின் தலைவரே எதிரில் வருவதைக் கண்டு பரிசாரகர் வணக்கமாகத் தயங்கி நின்றார். அந்த நேரத்தில் அவரை அங்கே கண்டதனால் பரிசாரகரின் மெய்யில் ஏற்பட்ட நடுக்கம், கைகளிலும் கைகளில் ஏந்தியிருந்த பொற்கலத்திலும் பொற்கலத்தில் நிறைந்திருந்த பாலிலும் கூடத் தோற்றியது.

"நகைவேழம்பர் உண்பதற்கு வந்திருந்தார் அல்லவா?" என்று பெருநிதிச் செல்வரிடமிருந்து கேள்வி பிறந்தபோது, "ஆம்! இப்போதுதான் உணவை முடித்துக் கொண்டு சென்றார். அவருக்கு உணவு பரிமாறி முடிந்ததும்தான் உங்களுக்குப் பாலைக் காய்ச்சி எடுத்துக் கொண்டு புறப்பட்டேன்" என்று பரிசாரகர் கூறிய மறுமொழியிலும் பதற்றமிருந்தது.

வயது மூத்த அந்தப் பரிசாரகரின் முகத்தையே உற்று நோக்கியபடி சில விநாடிகள் அமைதியாக நின்றார் பெருநிதிச் செல்வர். பரிசாரகர் ஒன்றும் புரியாமல் திகைத்து மேலும் நடுங்கினார்.

"பாலைக் கீழே வைத்து விட்டு வா."

பரிசாரகர் பாலைக் கீழே வைத்து விட்டுப் பெருநிதிச் செல்வரைப் பின் தொடர்ந்து நடந்தார். இருவரும் அந்தரங்க மண்டபத்தை அடைந்து கதவைத் தாழிட்டுக் கொண்ட பின்னும் பயந்த குரலில் இரகசியம் பேசுவது போல் பரிசாரகரிடம் ஏதோ காதருகில் பேசினார் பெருநிதிச் செல்வர். அவர் கூறியதைக் கேட்டுப் பரிசாரகரின் முகம் வெளிறியது. பேயறைபட்டது போல் பதில் சொல்லத் தோன்றாமல் மருண்டு நின்றார் பரிசாரகர்.

"இதைச் செய்ய இத்தனை தயக்கமா உனக்கு?" என்றார் பெருநிதிச்செல்வர்.

"மிகவும் கசப்பான காரியத்தைச் செய்யச் சொல்கிறீர்களே?"

"கசப்பும் அறுசுவைகளில் ஒன்று தான்.....!"

"இருக்கலாம்......ஆனால்.... இப்போது நீங்கள் செய்யச் சொல்லுவது எல்லை மீறிய கசப்பாயிருக்கிறதே!"

"எல்லை மீறிய கசப்புக்குச் சுவைகளில் இடமில்லையோ?"

"இடமிருக்கிறது! நஞ்சு என்ற பெயரில்..."

"எல்லை மீறிய கசப்புடன் பழகத் தொடங்கி விட்டவர்களுக்கும் எல்லை மீறிய சுவையை அளிக்க வேண்டியது தானே? போ, போய் நான் சொன்னபடி செய்துவிட்டு நிம்மதியாய்த் தூங்கு."

"ஒருநாளுமில்லாத வழக்கமாய் இன்று நான் அவருக்குப் பால் கொண்டு போய்க் கொடுத்தால் சந்தேகம் ஏற்படுமே? அந்த மனிதருடைய முகத்துக்குக் கண் ஒன்றாயினும், சிந்தனைக்குக் கண்கள் மிகுதியாயிற்றே?"

"பயப்படாதே! பழியை என் தலையிற் போட்டுவிடு. நான் கொடுத்தனுப்பியதாகப் பாலை அவரிடம் கொடு. வாங்கிக் கொள்ளுவார். காரியம் முடிந்ததும் வந்து சொல்! கட்டிலோடு தூக்கிக் கொண்டு போய்ப் புலிக் கூண்டில் தள்ளி விடலாம்."

பெருநிதிச் செல்வரின் இந்தக் கட்டளையை மீற முடியாமலும், மீறினால் தம் கதி என்ன ஆகுமோ என்ற பயத்துடனும் பரிசாரகர் பாலில் மயக்கமூட்டி உணர்விழக்கச் செய்யும் நச்சு மருந்தைக் கலந்து கொண்டு நகைவேழம்பர் இருக்கும் பகுதியை நோக்கி நடந்தார்.

அவர் பாலை எடுத்துக்கொண்டு போகிறாரா, இல்லையா என்பதைப் பெருநிதிச் செல்வர் மற்றோர் இடத்தில் மறைவாக வந்து நின்று கண்காணித்துக் கொண்டார். சிறிது நேரத்தில் திரும்பி வந்த பரிசாரகரை எதிர்கொண்டு சந்தித்து, "என்ன ஆயிற்று?" என்று அடக்க முடியாத ஆவலோடு கேட்டார்.

"நகைவேழம்பர் பொற்கலத்தோடு பாலை வாங்கி வைத்துக் கொண்டு, உங்களுக்கு நன்றியும் தெரிவிக்கச் சொன்னார். சிறிதும் சந்தேகம் கொண்டதாகத் தெரியவில்லை, இன்னும் சில விநாடிகளில் பருகி விடுவார்" என்று பரிசாரகரிடமிருந்து பதில் வந்தது.

"அங்கே வேறு யாராவது உடனிருந்தார்களா?"

"அந்நியர் யாருமில்லை. வழக்கமாக அவருடைய பகுதியில் காவலுக்கு இருக்கும் காவலன் மட்டும் இருந்தான்."

"நல்லது! நீ உறங்கப் போ. இப்படி ஒரு பெரிய காரியத்தை இன்றிரவு சாதித்ததாக நினைத்துக் கொண்டே

தூக்கத்தை விட்டு விடாமல் உடனே மறக்கப் பழகிக் கொள். நாளைக்குப் பொழுது விடிந்ததும் 'நகைவேழம்பர் எங்கே?' என்று யாராவது கேட்டால் நீயும் அதே கேள்வியைத் திருப்பிக் கேட்க முற்படுகிற துணிவைப் பெற்றுக் கொள்'' என்று சொல்லிக் கொடுமை தோன்றச் சிரித்தார் பெருநிதிச் செல்வர்.

அப்போது நள்ளிரவுக்கு மேலும் சிறிது நாழிகை ஆகியிருந்தது. பெருமாளிகையின் எல்லா மாடங்களிலும் தீபங்கள் அணைக்கப் பெற்று இருள் சூழ்ந்திருந்தது. பெருநிதிச் செல்வர் தம்முடைய நம்பிக்கைக்குப் பாத்திரமான சில ஊழியர்களோடு நகைவேழம்பர் படுத்திருந்த பகுதிக்குச் சென்றார். இருண்டு போயிருந்த அந்தப் பகுதியில் பயமான அமைதி நிலவியது. அந்த இருளின் நடுவே திசைக்குத் திசை, மூலைக்கு மூலை நகைவேழம்பரின் கோரமான முகம் தோன்றி 'என்னை இப்படியா செய்தாய்?' என்று பயங்கரமாக அலறுவதுபோல் பெருநிதிச் செல்வர் பிரமை கொண்டார். அவரும் அவருடன் துணைக்கு வந்திருந்த ஊழியர்களும், இருளில் தட்டுத் தடுமாறி நடந்து நகைவேழம்பரின் கட்டிலை நெருங்கினார்கள். கட்டிலுக்கு அருகில் எங்கிருந்தோ சிறகடித்துப் பறந்த வௌவால் எழுப்பிய ஓசையைச் செவியுற்று இயல்பான பயத்தின் காரணமாக நடுங்கிப் பின்புறம் நகர்ந்தார் பெருநிதிச் செல்வர். வியர்வையால் சொட்டச் சொட்ட நனைந்திருந்த அவருடைய பெரிய உடலின் சிறிய இதயம் வேகமாக அடித்துக் கொண்டது. கை, கால்கள் நடுங்கின. காலடியில் பரிசாரகர் பால் கொண்டு வந்திருந்த பொற்கலம் இடறியது. உதறல் எடுத்து வலுவிழந்திருந்த கை விரல்களால் அவர் கட்டிலில் தடவினார். பொற்கலத்துப் பாலைப் பருகியிருந்த உடல் கட்டிலில் தாறுமாறாக உணர்விழந்து கிடந்தது. போர்வையை இழுத்து அந்த உடலைத் தலைமுதல் கால் வரை மூடினார்.

''ஒற்றைக் கண்ணும் மூடி விட்டது'' என்று பயத்தினால் குழறும் குரலில் உடனிருந்தவர்களிடம் சிரிக்க முயன்று கொண்டே கூறினார் அவர். சிரித்துக் கொண்டே கூற முயன்றாரே தவிரச் சிரிக்கும்போது தேகமே பற்றி எரிவது போல் வெம்மையுற்றது. தன்னுடைய சிரிப்பைச் சாடுவதைப் போல் வேறொரு பயங்கரச் சிரிப்பும் அந்த இருட்டில் எங்கிருந்தோ ஒலிப்பதாகக் கற்பனை செய்துகொண்டு தவித்தது அவர் மனம். கொடுமையும், சூழ்ச்சியும், அளவற்றுப் புரியும் திறமை வரம்பும் கடந்து தம் உடம்பிலும், மனத்திலும் இயல்பாக எவ்வளவு கோழைத்தனம் கலந்திருக்கிறது என்பதை அந்த இருட்டில் அவர் புரிந்து கொண்டார்.

''கட்டிலை இப்படியே தூக்கிக்கொண்டு போய்ப் பாதாள அறையில் புலிக்கூண்டுகளுக்கு நடுவில் வையுங்கள்'' என்று உடன் வந்திருந்த ஊழியர்களுக்குக் கட்டளையிட்டார். அச்சத்தினால் தன்னியல்பான ஒலியும் கம்பீரமும் அவருடைய குரலிலிருந்து பிரிந்து போயிருந்தன. ஊழியர்கள் அவருடைய கட்டளையைச் செய்ய முற்பட்டனர். இருட்டில் கட்டில் தூக்கப்பெற்றுப் புறப்பட்டது.

''இனிமேல் இந்தப் பகுதி பகலிலும் இப்படி இருண்டு கிடக்க வேண்டியது தான். அந்தப் பாவியின் ஆவி குடியிருக்கிற இடத்துக்கு ஒளி வேறு வேண்டுமா?'' என்று தனக்குத்தானே கூறிக் கொள்வதுபோல் அவர் இரைந்து கூறியபோது மீண்டும் அந்த பேய்ச் சிரிப்பு ஒலிப்பதாக அவருடைய மனம் கற்பனை செய்தது. கட்டிலைத் தூக்கிக் கொண்டு போனவர்களைப் பின்தொடர்ந்து பெருநிதிச்செல்வரும் பாதாள அறைக்குச் சென்றார். அவருடைய முன்னேற்பாட்டின்படியே அங்கே தீப்பந்தங்கள் பொருத்தி வைக்கப்பட்டிருந்தன.

## பெரிய புராணப் பேருரை நிறைவு

சென்னை மல்லீஸ்வரர் தேவஸ்தானம், லக்ஷ்மண முதலியார் டிரஸ்ட், கபாலீஸ்வரர் தேவஸ்தானம் ஆகியவற்றின் சார்பில், சென்னை மயிலைக் கபாலி கோவிலில் சமீபத்தில் திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணியம் அவர்கள் பெரிய புராணம் பற்றித் தொடர்ச்சியாக இருபத்திரண்டு சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். அவரது சொற்பொழிவை, இந்திய உப ஜனாதிபதி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் அவர்களும் சென்னை உயர் நீதி மன்றத்தின் பிரதம நீதிபதி திரு ராமச்சந்திர ஐயர் அவர்களும் செவியுற்றுத் திருவாசகமணியின் சமயத் தொண்டின் அருமையைப் பாராட்டிப் புகழ்ந்து பேசினர். பெரிய புராணச் சொற்பொழிவு பாராட்டுக் கூட்டத்துக்கு நீதிபதி ஆர். சதாசிவம் தலைமை வகித்தார். தில்லைச் சபாநாயகர் கோவில் பொது தீக்ஷிதர்கள் சார்பில் ஸ்ரீ ஸ்வர்ண வெங்கடேச தீக்ஷிதர் திருவாசகமணிக்குப் பொன்னாடை போர்த்தினார். பல அறிஞர்களும் பிரமுகர்களும் திருவாசகமணியின் பெரிய புராண ஆராய்ச்சிப் புலமையையும் விளக்கத்திறனையும் பாராட்டினர். கூட்டத்துக்கு முன் திருமுறை ஊர்வலம் நடந்தது.

இப்பொழுது
வெகு துரிதமாக
வேலை செய்ய
அதிக
சக்தியுடன்
கூடியது

குளிர்
ஜலதோஷம்
வலிகள்
மற்றும்
ஜுரங்கள்

# C.A.Q
## FORT




8 காப்ஸ்யூல்கள்
கொண்ட
எளிதாகத் திறக்கும்
பெட்டி

**ஸ்பென்ஸர் & கோ., லிட்.**

சென்னை - பம்பாய - கல்கத்தா - தில்லி மற்றும் கிளைகள்

வாலைச் சுழற்றி அனல் விழி காட்டி உறுமும் புலிகளின் கூண்டுகளுக்கு நடுவே போர்த்தப்பட்டிருந்த உடலோடு கட்டில் வைக்கப்பட்டிருந்தது. "என் தலையில் கட்ட செங்கல்லை ஏற்றி ஊர் சுற்றிவரச் செய்வதாகத் திமிரோடு பேசினாயே! இப்போது திமிர் நிறைந்த உன் உடலின் சதைகளைக் கிழித்து விளையாடும் புலிகளைக் கண்டு நான் வெற்றிச் சிரிப்புச் சிரிக்கப் போகிறேன் பார்" என்று கட்டிலை நோக்கி எதிர்ப்பதற்கு இயலாத அறைகூவல் விடுத்தார் பெருநிதிச் செல்வர்.

கட்டிலைச் சுமந்து வந்தவர்கள் மேலும் என்ன கட்டளை பிறக்கப் போகிறதோ என்று எதிர்பார்த்துக் காத்து நின்றனர். மிக விரைவிலேயே அவர்கள் எதிர்பார்த்திருந்த செயலைச் செய்யும்படி பெருநிதிச் செல்வர் அவர்களை ஏவினார்.

"போர்வையை விலக்கிவிட்டு உடலைத் தூக்கி மேலேயுள்ள வளையத்தில் தலைகீழாகக் கட்டுங்கள்" என்று அவர் கட்டளையிட்ட குரல் ஒலித்து அடங்குமுன் மேலே பாதாள அறைக்குள் வருவதற்கான படியருகிலிருந்து குரூரமானதொரு பேய்ச் சிரிப்பு எழுந்தது.

திகைப்புடனே எல்லாரும் திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தனர். பார்த்தவர்கள் சிலைகளானார்கள். அங்கே முதற்படியில் நகைவேழம்பர் நின்றார். உடனே முன்னால் பாய்ந்து கட்டிலை மூடியிருந்த போர்வையை விலக்கிப் பார்த்த பெருநிதிச்செல்வர் தாம் முற்றிலும் ஏமாந்து போயிருப்பதைப் புரிந்து கொண்டார். கட்டிலில் நகைவேழம்பர் வசிக்கும் பகுதியிற் காவலிருந்த ஊழியனின் உடல் கிடந்தது.

"நீட்டிய இடத்திலேயே பதம் பார்க்கிறீர்களே, ஐயா! இப்படிப்பட்ட காரியங்களையெல்லாம் யாரிடமிருந்து கற்றுக்கொண்டீர்களோ, அவனிடமே சோதனை செய்து பார்க்கத் துணிந்துவிட்டீர்களே? இன்றிரவு இப்படி எனக்கு ஏதாவது கெடுதல் செய்ய வேண்டுமென்று' உங்களுக்குத் தோன்றுமென்பதை எதிர்பார்த்துக்கொண்டுதானிருந்தேன். அப்படியே செய்துவிட்டீர்கள். நீங்கள் அன்புடன் அனுப்பிய பொற்கலத்துப் பாலை எனக்குக் காவலிருந்த ஊழியனைக் குடிக்கச் செய்து பார்த்தபின்பு தான் உங்கள் நோக்கம் புரிந்தது. இப்போது நான் விரும்பினால் உங்கள் அத்தனை பேருடைய உயிரையும் சூறையாடலாம். இதோ இப்படிச் சிறிது பாருங்கள்" என்று கூறிக்கொண்டே தன் கைக்கு எட்டுகிறபடி இருந்த புலிக் கூண்டுக் கதவுகளைத் திறப்பதற்குரிய இரும்புச் சங்கிலியைப் பிடித்துக் குலுக்கினார் நகைவேழம்பர். அப்படிக் குலுக்கியபோது அந்தச் சங்கிலி குலுங்கியதனாலும் அவருடைய சிரிப்பினாலும் சேர்ந்து எழுந்த விகார ஓசை பாதாள அறையில் பயங்கரமாக எதிரொலித்தது. அவர்களுடைய உயிர்கள் எல்லாம் அவர்களை வெறுக்கத் தொடங்கிவிட்டவருடைய கையில் இருந்தன.

## 16. தாயின் நினைவு

தரையில் நீர்த்துளி விழுவதற்கு முன் மண்ணுலகத்து வண்ணமும் சுவையும் கலவாத மேக மண்டலங்களிலேயே அவற்றைப் பருகும் சாதகப் புள்ளைப் போல் விசாகையின் ஞானம், உலகத்து அழுக்குகளையெல்லாம் காணாத பருவத்தில், முன் பிறவி கண்ட தொடர்பினால் அவளுக்கு வாய்த்ததென்பதை உணர்ந்தபோது இளங்குமரன் அவளைத் தவப்பிறவியாக மதித்துக் காணத் தொடங்கினான். அத்தகைய மதிப்பு அவள்மேல் ஏற்பட்டதனால்தான் இந்திர விகாரத்துத் துறவியிடம் தான் முரட்டுத்தனமாக நடந்துகொண்டதைப்பற்றி அவள் குறிப்பிட்டபோது அவன் மனம் குன்றி நாணமடையும்படி நேர்ந்தது. சுரமஞ்சரியிடம் குன்றாமல் வளர்ந்திருந்த அவனுடைய அதே மனத்தின் இறுமாப்பு விசாகையிடம் குன்றித் தளர்ந்ததோடன்றிப் பக்தியாகவும் மாறியிருந்தது.

'விசாகையின் கதை தனக்குத் தெரிய வேண்டியது அவசியம்' என்று நாங்கூர் அடிகள் வற்புறுத்திக் கூறியிருந்த காரணத்தை இப்போது இளங்குமரன் நன்றாகப் புரிந்துகொள்ள முடிந்தது. மற்போர்களில் எதிர்த்து வந்தவர்களை முதுகுக்கு மண்காட்டி வென்றதற்காகவும், இளவட்டக் கற்களைத் தூக்கியதற்காகவும், குறி தவறாமல் அம்பு எய்ததற்காகவும், பெருமைப்பட்ட நாட்களை நினைவின் அடிமூலையிலிருந்து புரட்டிக் கொணர்ந்து இன்று எண்ணினால் அவை சிறுமை நிறைந்தவையாகத் தோன்றின. வேறு பெரிய செயல்களைச் செய்வதற்குக் கையாலாகாத காலத்தில் செய்த சிறுபிள்ளைச் செயல்களாக நினைந்துக் கொள்ள முடிந்ததே தவிர, இன்று அவனாலேயே அவற்றை மதிக்க முடியவில்லை.

ஞானப் பசியோடு திருநாங்கூருக்கு வந்த அன்றே அவன் மனத்தில் மதிப்

பிறந்திருந்த அந்தப் பழம் பெருமைகள், விசாகை என்னும் புதுமையை அறிந்த பின் இன்னும் மதிப்பிழந்தன. நீண்ட சாலையில் பார்வைக்குள் பிடிபடாத தொலைவுக்குச் சென்றுவிட்ட உருவங்களைப் போல் அவை மனத்திலிருந்தே விலகலாயின.

இனி எதிர் வரும் காலத்தைப் பற்றி அவன் மனத்தில் எழுகின்ற கற்பனைகள் ஓங்கித் தொட முயன்று கொண்டிருந்த உயரம் வேறுவிதமாக இருந்தது.

உலகெங்கும் உள்ள பேரறிஞர்கள் ஒன்றுகூடி வரிசையாய்-அந்த வரிசைக்கு முடிவே தெரியாமல் - நீண்ட தொலைவுக்கு அணிவகுத்து நிற்கிறார்கள். அவர்கள் அப்படி நிற்பதால், நின்றபடியே தானாக நிறுவிக் கொண்ட வீதி ஞான வீதியாக இளங்குமரனின் கண்களுக்குத் தோன்றுகிறது. வீதியின் நடுவில் நின்று இருபுறமும் பார்க்கிறான் அவன். அவனுடைய வலது கையில் ஞானக்கொடி அசைந்தாடுகிறது. அந்த வீதியின் நெடுமை அவன் மனத்தில் மலைப்பை உண்டாக்குகிறது.

வீதியின் இருபுறமும் ஒளி மயமாய் நிற்கும் ஞானிகளுக்கு முன்னால் ஒவ்வொன்றாய் நாவல் மரக்கிளை ஊன்றப் பட்டிருக்கிறது. ஒவ்வொரு ஞானியின் கையிலும் அந்த ஞானத்தின் வெற்றிச் சின்னம்போல் ஒரு கொடியும் காட்சியளிக்கிறது. அவர்களோடெல்லாம் அறிவு வாதம் புரியவேண்டுமென்று இளங்குமரனுக்கு ஆசையாயிருக்கிறது.

வாதிட்டு வென்ற பின் அத்தனை பேருடைய கொடிகளையும் வீழ்ச்சியுறச் செய்து நாவற் கிளைகளையும் பறித்து எறிந்துவிட்டு, 'நாவலோ நாவல்' என முழங்கிக்கொண்டேதான் அந்த வீதியின் முடிவு தெரிகிறவரை நடந்து சென்றாக வேண்டுமென்று இளங்குமரனுக்கு ஆசையாயிருக்கிறது. அதே சமயத்தில், தனக்கு அவ்வளவு சக்தியிருக்கிறதா என்ற பயமும், தயக்கமும் தடையாயிருக்கின்றன. ஆனால்மனமோ, 'துணிந்து முன்னால் நடந்து போ' என்று தூண்டுகிறது.

அன்று அந்த மாலை வேளையில் திருநாங்கூர்ப் பூம்பொழிலின் தனிமையான பகுதி ஒன்றில் அமர்ந்து இளங்குமரன் இப்படித் தன் எதிர்காலத்தைக் கற்பனை செய்து கொண்டிருந்தபோது தற்செயலாய் அந்தப் பக்கம் வந்த விசாகை அவனிருந்த நிலையைக் கண்டு அவனிடமே கேட்டாள் -

"எந்தக் கோட்டையைப் பிடிப்பதற்கு இவ்வளவு ஆழமான சிந்தனையோ?"

சிறிது நேரத்துக்குப் பின் இளங்குமரனிடமிருந்து இதற்குப் பதில் கிடைத்தது.

"ஞானக் கோட்டையைப் பிடிப்பதற்கு -"

"பெரிய ஆசையாக அல்லவா இருக்கிறது இது?"

"மன்னிக்க வேண்டும், அம்மையாரே! ஆசைகளையெல்லாம் மிக எளிதாக நீக்கிவிட்டு வந்திருக்கிற உங்களிடம் ஆசையைப் பற்றிச் சொல்வதற்கே கூசுகிறேன் நான்."

"அப்படியில்லை. கூசாமல் சொல்லுங்கள். இப்போது நீங்கள் கூறியது புதுமையான ஆசையாகத் தோன்றுகிறதே?" என்றாள் விசாகை.

இளங்குமரன் தன்னுடைய கற்பனையில் தோன்றித் தோன்றி மறைந்து கொண்டிருக்கும் இலட்சியத்தைத் தயங்கிய மொழிகளால் விசாகைக்குச் சொன்னான். அதைக் கேட்டு அவளுடைய முகம் அதில் ஏற்கெனவே அளவற்று நிறைந்திருக்கும் புனிதத் தன்மையே மேலும் பெருகினாற் போல் மலர்ந்தது. அவள் சிரித்தவாறே அவனைநோக்கி வினவினாள்:

"உங்களுடைய இந்த ஆசையை யார் கேட்டால் மெய்யான பெருமகிழ்ச்சி ஏற்படுமென்பதைச் சொல்லட்டுமா?"

"ஏன்? அப்படியானால் உங்களுக்கு மகிழ்ச்சி தரவில்லையா என்னுடைய இந்த ஆசை?" இளங்குமரன் அவளிடம் பதிலுக்குக் கேள்வி தொடுத்தான்.

"ஞானக் கோட்டையைப் பிடிக்கும் உங்களுடைய ஆசையைக் கேட்டு நானும், அடிகளும், எங்களைப் போன்ற பிறரும் அடைய முடிந்த மகிழ்ச்சியைக் காட்டிலும் அதிகமான மகிழ்ச்சியை வேறொருவர் தான் அடைய முடியும்."

"யார் அவர்?"

"உங்களைப் பெற்று உலகுக்கு அளித்த தாய். 'ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும்
தன் மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்'
என்று கேள்விப் பட்டிருக்கிறீர்களா? உங்களுடைய இந்த ஆசையை அறிந்து உலகம் உங்களைச் சான்றாண்மை உள்ளவராக ஏற்றுப் புகழ்வதை உங்கள் தாய் கேட்க வேண்டும். உங்களைப் பெற்றபோது ஏற்பட்ட மகிழ்ச்சியைவிட அதிகமான மகிழ்ச்சியை நீங்கள் புகழைப் பெறுகிறபோது உங்கள் அன்னை ஒருத்தியால்தான் அடைய முடியும்."

இளங்குமரன் திருநாங்கூருக்கு வந்ததிலிருந்து எந்தக் கலக்கத்தை அடை

யாமல் மறந்திருந்தானே, அந்தக் கலக்கத்தை விசாகை நினைவூட்டி விட்டாள். அவனுக்கு மறுமொழி கூறத் தோன்றாமல் கண்கலங்கினான் அவன். அவனுடைய கலக்கத்தை விசாகையும் கவனித்தாள்.

"ஏன் இப்படிக் கண்கலங்குகிறீர்கள்?"

"கண் கலங்காமல் வேறென்ன செய்வது? என்னைப் பெற்று மகிழ்ந்தவளைப் பார்த்தும் மகிழாத பாவி நான்."

'இளங்குமரன் தாயில்லாப் பிள்ளையாக வளர்ந்திருப்பானோ?' என்று நினைத்தாள் விசாகை. அதை அவனிடம் கேட்டால் அவனுடைய கலக்கம் அதிகமாகுமோ என்றெண்ணிக் கேட்காமல் அடக்கிக் கொண்டாள்.

"உங்கள் தாயைப் பற்றி உங்களுக்கு நினைவுண்டாக்கியது இப்படி ஒரு துயர விளைவைத் தரும் என்பது தெரிந்திருந்தால் செய்திருக்க மாட்டேன்" என்று மன்னிப்பைக் கோரும் குரலில் கூறினாள் விசாகை. அதற்கும் இளங்குமரனிடமிருந்து பதில் இல்லை.



"அம்மா! உன்னைக் காணும் மகிழ்ச்சியை எனக்கு அளிக்காமல், காண வில்லையே என்ற துயரத்தையே மகிழ்ச்சித் தாகமாகப் பெருக்கிக் கொண்டிருக்கிறாயே?' என்று ஏங்கினான் இளங்குமரன்.

அந்த நிலையில் இளங்குமரனைத் தனிமையில் விட்டுச் செல்வதே நல்லதென்றெண்ணி விசாகை அகன்றாள்.

மனம் கலங்கி வீற்றிருந்த இளங்குமரன் விசாகை சென்றதை அறியாமல் அவள் அங்கிருப்பதாகவே எண்ணி ஏதோ சொல்லத் தலை நிமிர்ந்தபோது நேர் எதிர்ப்புறம் பூம்பொழிலின் வாயிலில் முல்லையும், கதக்கண்ணனும் நுழைந்ததைக் கண்டான். அவன் விழிகளில் வியப்பு மலர்ந்தது. (தொடரும்)



# அட்டைப்படக் கதை

"காலணு! கடையில்லே, கண்கட்டு வித்தையில்லே. அசல் நூறும் நெம்பரு மகரக் கண்ணு சேலே காலணு...!"

"அஞ்சு ரூவா...."

"அஞ்சு....புடவை பஞ்சு பஞ்சாப் போனுலும் சாயம் மட்டும் போகாது அஞ்சு ரூவா."

"அஞ்சரை ரூவா!"

"ரூவா அஞ்சரை. ஒரிஜினல் பன்னெண்டு முழம் சேலே அஞ்சரை ரூவா."

"ஆறு...."

"ஆறு...இன்னும் கேளு, பாட்டி கட்டினு பளபளங்கும்; குமரி கட்டினு ஜிலுஜிலுங்கும். முத்திரைப் பவுன் ஆறு ரூவா...."

"ஏழு!"

"ஆ....அப்படிக் கேளு ராஜா—ஏழு.... போனு வராது. பொழுது விடிஞ்சாக் கிடைக்காது....எந்த மவராசிக்குக் கொடுத்து வைச்சிருக்கோ...ஏழு ரூவா....ஏழு ரூவா ஒருதரம் விட்டுடப் போறேன்........முண்டாசுக்கார அண்ணே! முன்னுலே வந்து கேளு....ஏழு ரூவா ரெண்டுதரம்...ஏழு...ஏழு ரூவா மூனு தரம்....!"

ஏலம் முடிந்தது. பணமும், சேலையும் கை மாறின.

செக்குமேட்டில் தூக்கிப் போட்டிருந்த புளியமரத் திம்மையின்மேல் நின்று ஏலம் கூறும் இளைஞன் சுந்தரத்தையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள் புவனு.

கோயில் திவட்டி மாதிரி எரிந்து கொண்டிருந்த நாடா விளக்கு அந்த இளைஞனுடைய உருவத்தை நன்கு வெளிச்சம் போட்டுக் காட்டியது. வயது இருபத்தைந்துக்குள்தான் இருக்கும். தலையில் மகாராஜாக்கள் பாணியில் வரிந்து கட்டிய முண்டாசு; அரும்பு மீசை; குண்டு முகம்; குறுகுறுக்கும் விழிகள்; குறும்புப் பேச்சு. அந்தப் பேச்சில் குழைந்து நிற்கும் கவர்ச்சி. அப்பப்பா! வேடிக்கை பார்க்க வருபவர்களைக் கூடல்லவா ஏலம் கேட்கும்படி தூண்டி விடுகிறான்...!

புவனு தனக்குள் சிரித்துக் கொண்டாள்; தனக்குள் வெட்கப்பட்டுக் கொண்டாள் எதை எண்ணியோ!

ஒரு முண்டா பனியன் ஆசாமி ஏதோ சொல்ல வாயெடுத்தான்.

"தூயா—துப்பட்டா...." சுந்தரம் பாய்ந்து அவன் பேச்சை இடை வெட்டினான்.

"தூயவோ....துப்பாதே...இங்கே—"

கூட்டம் கொல்லென்று நகைத்தது.

முண்டா பனியன் ஓர் அசட்டுச் சிரிப்பை உதிர்த்து விட்டு, "இல்லீங்க....துப்பட்டா இருந்தால் போடுங்க" என்றான்.

"ஓஹோ....துப்பட்டாவா?" என்று அப்பொழுதுதான் புரிந்து கொண்டமாதிரி அபிநயம் பிடித்த சுந்தரம் "இந்தா போடறேன். பிடிச்சுக்கோ" என்று மூட்டையிலிருந்து ஒரு துண்டை உருவினான்.

நேரம் ஆக ஆக மூட்டையிலிருந்த துணிகள் குறைந்து கொண்டே வந்தன. கூட்டமும் குறைந்து விட்டது. இன்னும் நாலைந்து பேர்களே நின்று கொண்டிருந்தார்கள், புவனுவையும் சேர்த்து.

சுந்தரம் ஒரு சால்வையைக் கையில் எடுத்துக் கொண்டு, "இதுதான் கடைசி அயிட்டம். அசல் காஷ்மீர் சால்வை, கடையிலே வாங்கப் போனால் அம்பது ரூபாய்க்கு அரைக்காசு கூடக் குறையமாட்டான் கேளுங்க. காலணு!" என்று கூறினான்.

"அரையணு!" என்றாள் புவனு சும்மாயிருக்க மாட்டாமல்.

சுந்தரம் பார்வையை எட்டிப் போட்டான். ஐம்பது ரூபாய் சால்வையை அரையணுவுக்கு வாங்க நினைக்கும் பேராசைக்குரிய ஜீவன் யார் என்று பார்ப்பதற்காக அல்ல; வேய்ங்குழல் நாதத்திலே தேன் மழை கலந்தாற் போல் இனிக்கும் அந்தக் குரலுக்குச் சொந்தக்காரி யார் என்று தெரிந்து கொள்ளத்தான்.

விழிகள் சந்தித்து மீண்டன.

"அரையணு.......அடேயப்பா - இன்னும் கொஞ்சநேரம் போனால் என்னையே மூக்காலணுவுக்கு ஏலம் கேட்பாங்க போலிருக்கே இந்தக் கிராமத்திலே" என்றான் சுந்தரம் கேலியாகச். சிரித்துக்கொண்டே.

புவனு வெட்கித் தலை குனிந்தாள். அதே சமயம் அவளுக்கு ரோஷமாகவும் இருந்தது. "அஞ்சு ரூவா!" என்று கூவினாள். வீட்டிலிருந்த அஞ்சறைப் பெட்டியில் அவள் சேமிப்புக் கணக்கு அது.

சுந்தரம் இலேசாகச் சிரித்துக்கொண்டான்.

"அஞ்சு ரூவா—சால்வை அஞ்சு ரூவா.... கண்ணைப் பறிக்குது பாரு கலரு—சப்பாத்திப் பழம் மாதிரி—அஞ்சே ரூவா...."

கூட்டத்தில் யாரும் அதற்கு மேல் உயர்த்திக் கேட்கவில்லை.

"அஞ்சுரூவா....ஒரு தரம்....ரெண்டுதரம் அஞ்சு......மூனுதரம். அம்மா ரொம்ப அதிர்ஷ்டக்காரங்க. இந்தாம்மா...."

சுந்தரம் சால்வையைச் சுருட்டிக் கயிறு போட்டு முடித்துவிட்டுப் பணத்துக்காகக் கையை நீட்டினான்.

புவனுவுக்கு ஒரே ஆச்சரியம். ஐம்பது ரூபாய் சால்வையை ஐந்து ரூபாய்க்குக் கொடுத்து விட்டானே....ஏலம் கூடத்தான் அவசரம் அவசரமாக முடிந்துவிட்டது.

புவனு தயங்கித் தயங்கி அவன் அருகில் சென்றாள். "வந்து....பணம் வீட்டிலேயிருக்கு....நாளைக்குத் தந்துட்டு வாங்கிக்கிறேன்...." என்றாள்.

அவள் அழகு முகத்தையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த சுந்தரம்,

''அதுக்கென்ன தாராளமாக் கொடு. இங்கே சத்திரத்திலேதான் நான் தங்கியிருக்கேன்'' என்று சொல்லி முடிக்க ஐந்து நிமிஷமாயிற்று!

துரிதநடை போட்டுக் கொண்டு உள்ளே வந்த புவனா. ''தாத்தா! உனக்குச் சால்வை வாங்கியிருக்கேன். விலை எவ்வளவு தெரியுமா? ஐம்பது ரூவா....'' என்றாள் வேல் விழிகளை இன்னும் கொஞ்சம் பெரிதாக்கி.

கயிற்றுக் கட்டிலில் சாய்ந்து கொண்டிருந்த கிழவன் ராகவனு நிமிர்ந்து. ''என்னது.... அம்பது ரூவாயா? ஏதம்மா உனக்கு அவ்வளவு பணம்?'' என்றான் வியப்புடன்.

புவனா கலகலவென்று சிரித்தாள்.

''விலை என்னமோ ஐம்பது ரூவாதான் தாத்தா. ஆனா சாமர்த்தியமா ஏலத்திலே அஞ்சு ரூவாய்க்கு வாங்கிட்டேன். அஞ்சறைப் பெட்டியிலே வைச்சிருக்கிற பணத்தைக் கொண்டு போய்க் குடுத்துட்டு வாங்கி யாரேன், பாரேன்!''

ராகவனுக்குத் திக்கென்றது. புகைத்துக் கொண்டிருந்த சுருட்டை வீசிவிட்டு ஏதோ சொல்ல வாயெடுத்தான். புவனா அங்கே நின்றால்தானே? அறைக்குள் ஓடி அஞ்சறைப் பெட்டியைத் துழாவினாள் அவள்.

''தாத்தா! அஞ்சறைப் பெட்டியிலிருந்த பணத்தைக் காணோம். நீ எடுத்தியா?'' என்று அழமாட்டாத குறையாகக் கேட்டுக் கொண்டு வந்த புவனாவை ஏறிட்டுப் பார்க்கவே கூச்சமாக இருந்தது ராகவனுக்கு.

''ஆமாம்மா — வீட்டுக்கார ஐயா ஆறு மாசத்து வாடகை பாக்கி அப்படியே நின்னு போச்சுன்னு தெருவிலே வந்து கூச்சல் போட்டுச்சி—மறுபேச்சுப் பேசாமெ எடுத்துக் குடுத்துட்டேன். தப்பா குழந்தை?'' என்று கேட்டான் இறங்கிய குரலில்.

புவனாவின் ஆத்திரமும், அழுகையும் போன இடம் தெரியவில்லை.

''உனக்காகச் சேர்த்து வைச்ச பணம்தானே தாத்தா! நீ அதை எடுத்துக் கொடுக்கறதிலே என்ன தப்பு?'' என்று கூறிவிட்டு நகர்ந்தாள்.

மறுநாள், கிழவன், ராகவனு கயிற்றுக் கட்டிலில் சுருண்டு படுத்தான். பற்றவைத்த சுருட்டு கனலுக்கு இரையாவது போல் அவன் மனம் கவலைக்கு இரையாகிக்கொண்டிருந்தது.

நடுத்தெருவுக்கு இழுக்கப்பட்ட மானம் மரியாதையை ஒரு வழியாக அஞ்சறைப் பெட்டியைத் துடைத்துக் கொடுத்துக் காப்பாற்றியாகிவிட்டது. அதுகூடப் பெரிதில்லை. இந்தப் பெண் புவனாவுக்கு ஒரு கல்யாணத்தைப் பண்ணி வைத்தால்தான் அவன் நிம்மதியாக மூச்சுவிடலாம். அடடா—சின்னஞ்சிறுசிலேயே காலராவுக்குப் பலியாகிவிட்ட மகனும், மருமகளும் எவ்வளவு அதிர்ஷ்டசாலிகள்! அவன் என்ன பாவம் செய்தானோ, இன்னும் உயிருடனிருக்கிறான். இந்தப் புவனாவை வளர்க்கப்பட்ட பாடு—ஊஹூம். அதை ஒரு துன்பம் என்று சொல்ல முடியுமா? மழலை சிந்தும் பருவத்திலிருந்து பூத்து நிற்கும் குமரியாகும் வரை அவள் காட்டிய வேடிக்கை விளையாட்டுகள், அள்ளியிறைத்த அழகுச் சிரிப்பு அவனுடைய கவலைகளுக்கெல்லாம் மாமருந்தாய் அமையவில்லையா? புவனா இல்லாவிட்டால் அவனுடைய வாழ்வும் எப்பொழுதோ முடிந்திருக்கும்; முடித்துக் கொண்டிருப்பான். எப்படியோ காலம் ஓடி விட்டது. காய்த்துக் கனிந்து விட்ட கனி மரத்திலிருந்து இற்று விழவும் தயாராகி விட்டது. காற்று அடிக்க வேண்டியதுதான் பாக்கி-அதற்குள் புவனாவை யார் கையிலாவது ஒப்படைத்தாக வேண்டுமே....?

ராகவனு தலையை இரு கைகளாலும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். வேதகிரிப் பண்டாரம் சொல்லிவிட்டுப் போயிருந்தது சட்டென்று அவன் நினைவுக்கு வந்தது. அன்று மாலை யாரையோ பெண் பார்க்க அழைத்து வருவதாகச் சொல்லிவிட்டுப் போயிருந்தான் பண்டாரம்.

''பெண் பார்க்க வருகிறார்களாம்...''

புவனா அழகிதான். பார்க்க வருபவர்களுக்கு நிச்சயம் பிடித்துவிடும். அதற்காக ஒட்டுப் போட்ட கந்தல் சேலையைக் கட்டிக் கொண்டு அவர்கள் முன்வந்து நிற்கலாமா? நகை நட்டு என்றுதான் உடம்பில் ஒன்றும் இல்லை. கட்டிக் கொள்ள ஒரு நல்ல சேலைக்குக் கூடவா வக்கு இல்லையென்று காட்டிக்கொள்வது?

நினைக்க நினைக்க ராகவனுவின் உடல் கூனிக் குறுகியது. ஏதோ நினைவுக்கு வரவே கட்டிலைவிட்டு விருட்டென்றுஎழுந்தான். மூலையிலே கிடந்திருந்த பெரிய தகரப் பெட்டியொன்றை மெல்லத் திறந்தான். ஏதேதோ ஒட்டை உடைசல் சாமான்களுக்கு மத்தியில்

# ஒரு தாரம்... ரெண்டு தாரம்!

எம். எஸ். சுந்தரராஜன்



ஒரு சின்ன கைப்பெட்டி யிருந்தது. மேலே பூசப்பட்டிருந்த வர்ணமெல்லாம் உதிர்ந்து போய்த் தூசு ஏறிக்கிடந்த அந்தப் பெட்டியின் மேல் ராகவலுவின் கை பட்டதும் பூட்டு தனியே கழன்று வந்து விட்டது.

பெட்டியினுள்ளே கையைவிட்டு வெள்ளைத் துணி சுற்றியிருந்த ஒரு மூட்டையை எடுத்தான்.

பிரித்து, ஜரிகையெல்லாம் நார் நாராய்த் தொங்கும் காசிப்பட்டுச் சேலை அது. அதைக் கண்டதும் ராகவலுவின் கண்கள் கலங்கின. அந்தப் பட்டுச் சேலையை உடுத்திக் கொண்டு வளைகாப்புச் சடங்கில் எப்படி நாணிக் கோணிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள் அவன் மனைவி. அவள் நினைவாய், மறக்க முடியாத ஞாபகச் சின்னமாய் இருந்த ஒரே சொத்தும் அவனை விட்டுப் பிரியப் போகிறது.

ராகவலு அதிக நேரம் தயங்கி நிற்கவில்லை. பழையபடி வெள்ளைத் துணியைப் போட்டு அந்தச் சேலையை மூடி எடுத்துக் கொண்டு வெளியே புறப்பட்டு விட்டான்.

பனப்பாக்கம் கிராமத்துக்குக் கூப்பிடு தொலைவில் படித்துறை யிருந்தது. அங்கே ஆறு சற்று சுழித்துக் கொண்டு வேகமாக ஓடும். சாதாரணமாக அந்தப் பக்கத்தில் யாரும் போய்க் குளிப்பதில்லை. புவனாவுக்கு அது ரொம்ப வசதியாக இருந்தது. அவளுக்கு இந்த உலகத்திலேயே இரண்டு பேர்கள்மீது தான் பிரியம் அதிகம். ஒருவர் அவளுடைய தாத்தா; மற்றொன்று இந்த ஆறு.

வயதுப்பெண் மத்தியான நேரத்தில் ஐயனார் கோவில் பக்கம் போய்க் குளிக்கக் கூடாது என்று ராகவலு எவ்வளவோ தடவைகள் எச்சரிக்கை செய்தான்; அச்சுறுத்திப் பார்த்தான். ஆனால் புவனா என்னவோ தினமும் போய் நீரில் விழுந்து உடல் ஓயும்வரையில் நீச்சல் அடித்து விட்டுத்தான் வந்து கொண்டிருந்தாள்.

இப்பொழுது கூட உச்சிப்பொழுது. அதைப் பற்றி அவளுக்கென்ன கவலை? தெம்மாங்குப் பாட்டொன்றை வாயசைக்க இடுப்பில் அனுயாசமாகக் குந்தியிருந்த குடத்தை இறக்கிப் படித்துறையில் வைத்தாள் புவனா. சேலைத் தலைப்பை நீக்கி உடம்பில் கட்டுச் சுற்றாகச் சுற்றிக் கொண்டு குளிக்க ஆயத்தமானாள். நீரில் கால் நனைத்தவளை மெய் சிலிர்க்க வைத்தது அந்தக் காட்சி.

ஆற்றின் நடுவே நீர்ப்பரப்பில் நீட்டியபடி இரு கரங்கள் தெரிந்தன. யாரோ உயிருக்கு மன்றாடுகிறார்கள்.

புவனாவால் அதற்குமேல் சிந்திக்க முடிய வில்லை. நீர் கிழிய எய்த அம்பைப்போல் தண்ணீரில் பாய்ந்தாள். குறிப்பிட்ட இலக்குக்கு முன்பு வேகத்தில் நீந்தி வந்து தலையை நிமிர்த்தி நாலாபுறமும் பார்த்தாள். அந்தக் கைகள் எங்கே? அதற்குள் எப்படி மாயமாய் மறைந்து விட்டன?

புவனாவுக்கு உடல் நடுங்கியது. ஐயனார் சித்து விளையாட்டோ? நேரம் கெட்ட நேரத்தில், தான் வந்திருக்கக் கூடாதுதான் என்று தன்னையே நொந்து கொண்டு அவசரம் அவசரமாகக் கரைக்குத் திரும்ப எத்தனித்தாள். அதே சமயம் அருகில், மிகமிக அருகில் யாரோ சத்தம் கேட்டது. புவனாவுக்கு உயிரே போய் விட்ட மாதிரி யிருந்தது. நல்ல ஜாதி சேவலின் கொண்டைபோல் குப்பென்று சிவந்து விட்ட கண்களை இறுக மூடித் திறந்தாள்.

எட்டிப் பிடித்துவிடும் தூரத்தில் ஏலக்கார சுந்தரம் நின்று கொண்டிருந்தான் சிரித்தபடி.

உடலெங்கும் நாணம் பரவ நீரிலிருந்து விடுபட்டுக் கரைக்கு வந்த புவனா, "பொம்பளைங்க குளிக்கும் இடத்துக்கு வரலாமா?" என்று சீறினாள் போலிக் கோபத்துடன்.

"அதையேதான் நானும் கேட்கிறேன். ஆம்பளைங்க குளிக்குமிடத்துக்கு வரலாமா?"

புவனாவுக்குச் சுருக்கென்றது. முதலில் குளித்துக் கொண்டிருந்தது அவன்தானே? "ஆமாம்—தப்புத்தான்" என்றாள் மெதுவாக.

"இது மட்டுமா தப்பு? இன்னும் எவ்வளவோ பணம் இல்லாமல் ஏலம் கேட்டது தப்பு; ஏலம் எடுத்த பொருளை வாங்கிக் கொள்ளாதது தப்பு...."

குற்றச் சாட்டுக்களை அடுக்கிக் கொண்டே போனவனை இடைமறித்தாள் புவனா.

"ஓஹோ — மக்கிப்போய், ஒன்னுக்கும் உதவாத துணியை ஏலம் போடறது மட்டும் தப்பில்லே போலிருக்கு."

"மக்கிப்போன துணியா? யார் சொன்னது?"

"பின்னே—அம்பது ரூபா மதிப்புன்னு சொல்லிட்டு அஞ்சு ரூபாய்க்குக் கொடுத்தால் என்ன அர்த்தமாம்?"

சுந்தரம் கடகடவென்று சிரித்தான்.

"ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள துணியாகத் தான் இருக்கட்டுமே. எனக்குப் பிரியப்பட்ட உங்களுக்கு இனமாகக் கூடக் கொடுப்பேன்."

"அப்போ அந்தச் சால்வை....?"

"நானே பிரியப்பட்டு....உம் மேலே...."

புவனாவின் உடலெங்கும் ஜில்லென்று ஓர் உணர்வு பரவியது. அதற்குமேல் அங்கே நிற்க நாணம் இடந்தரவில்லை. இதயம் கவர்ந்த அந்த இளைஞன் மேல் இளநகை யொன்றைத் தெளித்து விட்டு வீட்டை நோக்கி நடந்தாள். வெறுங்குடம் இப்பொழுது நிறைகுடமா யிருந்தது.

ராகவலு தன் முன் கொண்டுவந்து வைத்த பொருள்களையெல்லாம் வியப்பால் மலர்ந்த விழிகொண்டு நோக்கினாள் புவனா. வண்ணப் பூக்கள் பதித்த அழகிய வாயில் சேலை, அளவெடுத்துத் தைத்தது போல் அதற்கேற்ற ஜாக்கெட், முகப்பவுடர், கண் மை....

"என்னம்மா அப்படிப் பார்க்கறே? எல்லாம் உனக்குத்தான். டவுனுக்குப் போய் வாங்கி வந்தேன். சீக்கிரம் அலங்காரம் செய்துக்கோ."

"எதுக்குத் தாத்தா இந்த அலங்கார மெல்லாம் இப்போ?" என்றாள் புவனா.

"எதுக்கா? டவுன்லேயிருந்து மாப்பிள்ளை வாறாங்கம்மா உன்னைப் பார்க்க. உம், சீக்கிரம் ஆகட்டும். ஒத்தாசைக்கு மயிலம்மாளைக் கூட்டியாறேன்." ராகவலு மடமடவென்று பேசிவிட்டு வெளியே ஓடினான்.

புவனா விம்மினாள். சுந்தரத்தின் சுந்தர முகம் அவள் மனத்திரையில் வந்து கண்ணா மூச்சி விளையாடியது. படித்துறைப் பேச்சு மீண்டும் அவள் காதுகளில் ஒலித்து அரும்பிய காதலுக்கு வாலி பாடியது. சுந்தரத்தை மறப்பது என்பதைப் பற்றி நினைக்கவே அவள் மனம் இடந் தரவில்லை. இந்தக் கல்யாணத்தி லிருந்து எப்படித் தப்புவதென்று சிந்திக்க லானாள். ஆனால் அவளுக்கு எந்தவித சிரமமும் கொடுக்காமல் அச் சம்பவம் நடந்துவிட்டது.

முன்பே சொல்லியிருந்தபடி மாப்பிள்ளையும் அவனுடைய தந்தையும் சரியான நேரத்துக்கு வந்து விட்டனர்; ராகவலு ஓடியாடி அவர் களை உபசரித்துக் கொண்டிருந்தான். மாப் பிள்ளை ஏதோ உத்தியோகம் பார்ப்பதாகச் சொல்லிக் கொண்டார்கள். ஆகையால் ராகவலுவுக்கு இந்தச் சம்பந்தத்தை எப்படி யாவது முடித்துவிட எண்ணம்.

"ராகவலு! பெண்ணைக் கூப்பிடு. பார்க் கட்டும்'' என்றார் தரகர் பண்டாரம்.

"இதோ....இதோ....'' என்று ஓடிய ராகவலு "மயிலம்மா! புவனாவை அனுப்பு சீக்கிரம்'' என்று உத்தரவு போட்டான்.

புவனா கையில் தாம்பூலத் தட்டை ஏந்திக் கொண்டு, சாக்குப்படுதா அறைக்குள்ளிருந்து வெளியே வந்தாள். ராகவலுவுக்கே புவனாவை அடையாளம் தெரியவில்லை. அந்தச் சாதா ரண வாயில் சேலையையும், முகப்பவுடரையும் வைத்துக் கொண்டு புவனாவை ஓர் அழகு மாளிகையாக்கி யிருந்தாள் மயிலம்மை— அவள் கொஞ்சம் டவுனில் வாழ்ந்து கற்றவள்.

பார்த்த முதல் பார்வையிலேயே தலைக்குச் சம்மதம் என்று மாப்பிள்ளை கூறி விட்டான். ஆனால் பிள்ளையைப் பெற்றவர் கொஞ்சம் தயங்கினார். பெண்ணை இப்படி மினுக்கிக் கொண்டு வந்திருக்கிறார்களே. நடத்தை எப்படியோ? தீர விசாரிக்காமல் பிடி கொடுக்கக் கூடாது என்று தீர்மானம் செய்து சீர் வரிசையைப் பற்றி மிடுக்குடன் பேச ஆரம்பித்தார்.

'மாப்பிள்ளைக்குப் பட்டு வேட்டி சட்டை எடுத்துக் கொடுக்கணும். அப்புறம் அரைப் பவுனிலே ஒரு மோதிரம்...அப்புறம்...''

அயிட்டம் அயிட்டமாக அவர் சொல்லச் சொல்ல ராகவலுவுக்குப் 'பகீர் பகீர்' என்றது. வேதகிரிப் பண்டாரத்தைப் பரிதாபமாகப் பார்த்தான்.

"இதோ பாருங்க. அவர் சேர்த்து வைச் சிருக்கும் பணத்தை மாப்பிள்ளைக்கும், பேத் திக்கும் கொடுக்காம வேறு யாருக்குச் செய்யப் போறார்? உங்களுக்கு ஒரு குறையும் இருக் காது. சம்மதம் சொல்லுங்க'' என்றான் வேதகிரிப் பண்டாரம்.

அந்தச் சமயத்திலேதான் எங்கிருந்தோ வந்து குதித்தான் ஏலக்கார சுந்தரம். கண் ணிலே கனல். கையிலே காசிப்பட்டுச் சேலை

"ஏய்யா! வயசுக்குத் தகுந்தமாதிரி நாணய மில்லியே. தங்கச் சரிகையின்னு சொல்லிப் பணம் வாங்கிவந்தே. எல்லாம் பித்தளையா யில்லே இருக்கு!'' என்று ஆத்திரமாக











ராகவலுவை நோக்கி விசிறியடித்தான் கையி லிருந்த செயினை.

இளைஞன் அதிர்ந்து போனான். "இருக்காதே, அசல் தங்கமாச்சே" என்றான்.

"ஆமாம்—தங்கம்—இழைச்சு வைச்சிருக்கு. எடுப்பா மரியாதையா பணத்தை." காட்டுக் கத்தலாய்க் கத்தினான் சுந்தரம்.

அவனைச் சமாதானப்படுத்தி வெளியே அழைத்துப் போவதற்குள் போதும் போது மென்றாகிவிட்டது வேதகிரிப் பண்டாரத்துக்கு.

சற்றும் எதிர்பாராதவிதமாக, "டேய், எழுந்திருடா. இந்த இடம் நம்ம அந்தஸ்துக் குச் சரிப்பட்டு வராது" என்று கூறிவிட்டுப் பிள்ளையைப் பெற்றவர் வெளியே நடந்தார்.

ராகவலுவின் தலை தொங்கி விட்டது. வெளியே சென்றவர்களைத் தடுத்து நிறுத் தவோ சமாதானம் கூறவோகூட அந்த இளைஞனின் இதயத்தில் தெம்பில்லை.

பெண் பார்க்க வந்தவர்கள் வார்த்தையை முறித்துக் கொண்டு போனதில் புவனாவுக்குத் தான் ஆனந்தம்.

"நீ ஏன் தாத்தா கவலைப்படறே? இவங்க போனா போகட்டுமே. எனக்குன்னு உலகத் திலே ஒருத்தன் பிறந்திருக்க மாட்டானா என்ன?" என்றாள் ஆறுதலாக.

ராகவலு கண்ணைத் துடைத்துக் கொண் டான். "சம்பந்தம் கைகூடாமே போனதுக் காக நான் கவலைப்படலேம்மா. அந்த ஏலக் காரன் வந்து கூச்சல் போட்டுட்டுப் போனானே அதை நினைச்சுத்தான் வேதனைப்படறேன். முட்டாள். இந்தச் செயினிலே இருக்கிறது அவ்வளவும் தங்கம். இதைப் போய்ப் பித்தளைன்னு சொல்றானே..."

"பித்தளை என்ன - இரும்புன்னு கூடச் சொல்லுவான்" என்று கூறிக்கொண்டே உள்ளே வந்தான் வேதகிரிப் பண்டாரம்.

"ஏன்? அவனுக்கென்ன பைத்தியமா?"

"ஆமா — காதல் பைத்தியம் — ராகவலு! விஷயம் வேற விதமாப் போயிட்டுது. இங்கே வந்தானே ஏலக்கார சுந்தரம். அவனுக்கு உன் பேத்திமேலே ஆசை. ஒரு நல்ல நாளிலே பெண் கேட்க அவனே வரலாம்னு இருந் தானாம். இந்தச் சமயத்திலே டவுன்லே யிருந்து மாப்பிள்ளை வரவே அவங்களைத் துரத்தியடிக்க இங்கே வந்து ஒரு குட்டிக் கலாட்டா செய்திருக்கான். அவ்வளவுதான் விஷயம். என்ன சொல்றே? நீ கேட்கிற சீர் செனத்தி கொண்டுவந்து உன் காலிலே கொட்டத் தயாராயிருக்கான். இதிலே இன் னொரு விசேஷம் என்னன்னு உன் பேத்திக்கும் அவன் மேலே பிரியமாம்..."

ராகவலுவின் உடம்பில் புதுத் தெம்பு ஊறியது.

"அப்படியா?" என்று நமட்டுச் சிரிப்புடன் புவனாவை நோக்கினான். "போங்க, தாத்தா" என்று வெட்கத்துடன் கூறி அப்பால் ஓடி விட்டாள் புவனா.

தூரத்தில் சுந்தரத்தின் குரல் கேட்டது.

"அசல் சின்னாளம்பட்டிச்சேலே காவனா... காவனா..."

அந்தக் குரலின் தவழ்ந்து வந்த கவர்ச்சி யில் லயித்தவளாய்ப் புவனா கனவுலகத்தில் மிதந்தாள்.

# வட்டமேஜை

## மணியான மணிபல்லவம்

ஜூலை 2ந் தேதி இதழில் வெளிவந்துள்ள 'மணிபல்லவ'த்தில் விசாகையின் வரலாற்றை அழகு தமிழில் மிக அற்புதமாக வடித்திருக்கிறார் ஆசிரியர். 'குறிஞ்சி மலரு'க்குப் பின் அதனிலும் சிறந்த பிறிதொரு புதினம் அமையப் பெறுமா எனும் ஐயத்துக்கு இனி அவசியமே இல்லாமல் செய்து விட்டார். 'ஆனந்தம்' எனும் புறப்பொருள் இலக்கணப் பாடலுக்கு ஆசிரியர் தரும் விளக்கம் அவர் தம் சீரிய சிந்தனைக்கோர் எடுத்துக்காட்டு.

பெங்களூர்-21
1—7—61
இரா. சௌந்தரராசன்

மணிபல்லவம் ஒரு நாவல் அல்ல; சிந்தனையைத் தூண்டிச் சித்தம் கலங்க வைக்கும் சிற்சில கேள்விகளுக்குச் சிறிதும் தயங்காமல் விடைகளை வாசகர்கள் அறிந்து கொள்ள உதவியாக இருக்கிற அறிவியல் நூல். அன்று மணிமேகலை மக்களுக்குள்ள பசிப்பிணியை அமுதசுரபியினால் போக்கினாள். இன்று திரு நா. பார்த்தசாரதி அவர்கள் வாசகர்களுக்குள்ள அறியாமைப் பிணியை 'மணிபல்லவ'த்தால் போக்குகிறார். மணிபல்லவம் படிக்கப் படிக்க வெறுக்காத காதை. கேட்கக் கேட்கத் தெவிட்டாத காதை. பருகப் பருகத் திகட்டாத தேன். உலக வாழ்க்கையிலுள்ள நீதி நெறிகளைத் திருநாங்கூர் அடிகள் சொல்லுவது போன்றும் இளங்குமரன் கேட்பது போன்றும் வர்ணித்து, உண்மையில் எங்களுக்கே விளக்குகிறார் ஆசிரியர்.

''உன் கண்ணீரைத் துடைத்துக் கொள்ளுவதற்கு முன்னால் உலகத்தின் கண்ணீரைத் துடைக்க வேண்டாமா?'' என்ற தெய்வீகக் குரல் விசாகையின் மனத்தில் மட்டும் ஒலிக்காது. ஆயிரமாயிரம் வாசகர்களின் செவியிலும் ஒலித்து உணர்ச்சி வசப்பட்டுப் புல்லரிக்கச் செய்கிறது. சுருங்கக்கூறின் மணிபல்லவம் மணியான வாசகங்களைக் கொண்டு மக்களின் அறியாமையைப் போக்க வல்லது. திரு நா. பார்த்தசாரதியின் சிறப்பு மிகுந்த நாவல்கள் பலவற்றிலும் சிகரமாக உள்ளது.

சென்னை - 4
9—7—61
எஸ். ரங்கநாதன்

## உயரிய படைப்பு

நாவல் பிறக்கிறது பகுதி ஓர் உயரிய படைப்பு. நாவலாசிரியரின் அடி ஆழமான உள்ளத்தையே வெளிக் கொணர்ந்து விடுகிறது. நாவலாசிரியரின் அடிப்படையான உணர்ச்சிகளும், எழுச்சிகளும் எவ்வாறு எங்களுக்கு இன்பமூட்டுகின்றன என்பதை அறிய மிகவும் ஆவலாயிருந்த எனக்கு ஒரு சந்தர்ப்பம் ஏற்படுத்தியமைக்கு நன்றி. 'எப்படித்தான் இயற்றினரோ!' என்ற ஆச்சரியத்துக்குப் பதில், 9—7—61 இதழில் ஸ்ரீமதி அநுத்தமா அவர்கள் சம்பிரதாயத்தையும், பழக்க வழக்கங்களையும் பற்றிக் கூறியுள்ளவை உள்ளத்திலே தைத்தன. ''சமூகத்தில் நெருங்கிப் பழகும்போது.....சம்பிரதாயம்'' என்ற வரிகள் என் கருத்தில் ஓயாமல் வட்டமிட்டுக் கொண்டிருக்கின்றன.

மதுரை 3
7—7—61
இ. சேஷாத்திரி

## பர்மாவில் தமிழர்கள்

ஜூலை 9 ந் தேதி கல்கி இதழ் தலையங்கத்துக்குப் பர்மாவாழ் தமிழர்களின் நன்றியும் வணக்கமும் உரித்தாகுக. இந்திய சர்க்காரின் அயல் நாட்டுக் கொள்கை குறித்துக் 'கல்கி'யின் ஆணித்தரமான கருத்தை வெளியிட்டு, பிரதமர் நேரு அவர்களின் நடுநிலைமைக் கொள்கையில் காணும் குறைபாடுகளைத் தெளிவாக விவரித்துள்ளீர்கள். கடல் கடந்து வாழும் பெரும் இனமான தமிழர்களின் நிலையில் சிரத்தையின்றி இருக்கும் இந்திய சர்க்காரின் அசட்டுத்தனமான போக்கையும் காட்டியுள்ளீர்கள். தங்கள் தலையங்கத்தை நான் முழு மனத்துடன் வரவேற்கிறேன்.

சென்னை
8—7—61
வி. எச். டேவிட்,
ஆசிரியர், 'பர்மா நாடு'

## சிரிப்பதா? அழுவதா?

ஜூலை 9 ந் தேதி கல்கியில் வெளிவந்த 'சிரிப்பதா? அழுவதா?' என்ற கவிதை நன்றாக இருந்தது என்று சொன்னால் போதாது. இப்பாட்டில் வரும் ஒவ்வொரு வரியும் பரீட்சையில் நன்றாகப் பாஸ்செய்தும் 'சீட்' கிடைக்காமல் திண்டாடிக் கொண்டிருக்கும் மாணவர்களின் தற்போதைய நிலையை நன்றாக எடுத்துக் காட்டுகின்றன.

'சாதியோ என்னைவிடாது - தந்தை
காலை மாற்ற முடியாது
சமதிங் கொடுக்கவோ கிடையாது-இந்தச்
சண்டாளன் போகிற கதியேது ?'

என்ற வரிகளின் மூலம் திரு 'கரபி' அவர்கள், சாதி - பேதம், பணம், பதவி ஆகியவற்றினால் 'சீட்' கிடைக்காமல் கஷ்டத்துக்குள்ளாகும் மாணவர்களின் நிலையைத்தான் எவ்வளவு அழகாக எடுத்துக் காட்டி விட்டார்? திரு 'கரபி' அவர்களை எவ்விதம் பாராட்டுவது என்றே தெரியவில்லை. இந்தக் கவிதையைப் படித்ததும் எனக்கு—

'காலம் ஒருநாள் மாறும் - நம்
கவலைகள் யாவும் தீரும் - என்று
நினைத்ததை எண்ணிச் சிரிக்கின்றேன் -
இப்போது
நடப்பதை எண்ணி அழுகின்றேன்'

என்ற நான்கு வரிகளையும் அதோடு சேர்த்துக் கொள்ளுங்கள் என்று சொல்ல வேண்டும் போலிருக்கிறது.

கல்கத்தா
7—7—61
ஆர். விமலா

## தேர் நகருமா?

நம்மை ஆளும் வர்க்கத்தினர் தாங்கள் நம்பும் கூட்டுறவு முறையைப் பொதுமக்கள் மீது பலாத்காரமாகவும், சலுகைகள் மூலமாகவும் திணிக்க முயலுகின்றனர். இதன் காரணமாகத்தான், கோவை ஜில்லாவில் தனிப்பட்ட தொழிற்சாலை ஆரம்பிக்க உற்சாகமும், ஆற்றலும் உள்ள பலர் இருக்கும் போது, அமராவதி கூட்டுறவு சர்க்கரை ஆலை தோற்றுவிக்கப்பட்டது.

தேரை இழுக்க வரைக் கூட்ட அரசாங்கத்தாரால் அமர்த்தப்பட்டவர்களிடையே உள்ள பிணக்குகள், சிக்கல்கள் காரணமாகத் தேர் நின்ற நிலையில் நிற்கிறது. மேலும் தேரை இழுக்க வரைக் கூட்ட அமர்த்தப் பட்டவர்களுக்குத் தாங்கள் கவனிக்க வேண்டிய தொழில் ஸ்தாபனங்கள் பல இருக்கின்றன. இந்நிலையில் அவர்கள் தங்கள் அறிவையும், ஆற்றலையும் பொன்னான நேரத்தையும் 'கேவலம்' இந்த அமராவதி கூட்டுறவு சர்க்கரை ஆலை விஷயத்தில் செலவழிப்பார்கள் என்று அரசாங்கம் எதிர்பார்க்கிறது.

இதனால் ஜுன் முதல் வாரத்திலேயே ஆரம்பிக்கப்பட்டிருக்க வேண்டிய ஆலை இன்னும் ஆரம்பிக்கப்படாமல் தூங்குகிறது. ஆலையை நம்பிக் கரும்புப் பயிர் செய்திருக்கும் இந்தப் பிராந்தியத்தைச் சேர்ந்த நூற்றுக் கணக்கான விவசாயிகள் காவேரியில் கரை புரண்டோடும் வெள்ளத்தில் சிக்கித் தவிக்கும் மக்களைப் போல் செய்வது அறியாது விழிக்கின்றனர். சர்க்கார் ஏற்றுமதிக் கொள்கைகள் காரணமாக மார்க்கட்டில் வெல்லத்துக்கு நல்ல விலை இல்லை.

பிராந்திய விவசாயிகள் தாங்கள் பயிர் செய்திருக்கும் கரும்பை வெல்லமாகக் காய்ச்சினால் அதனால் ஏகப்பட்ட நஷ்டம் ஏற்படுகிறது. விவசாயிகளுக்குத் தாழ்வும் நஷ்டமும் ஏற்பட்டால் அதிலிருந்து மீள்வதற்கு எத்தனையோ ஆண்டுகாலமாகும்.

விவசாயிகளுக்கும் ஏழைகளுக்கும் பாடுபடுவதாகச் சொல்லும் அரசாங்கத்தின் விவசாய அமைச்சர் திரு பக்தவத்சலம் அமராவதி கூட்டுறவு சர்க்கரை ஆலையைக் கூடிய விரைவில் தொடங்குவதற்கான நடவடிக்கைகளை எடுத்துக் கொள்வாரா?

கணியூர்
10—7—61

ரா. கு. மணியம்

## சைவத் தூதுவர் 'சோமு'

கல்கியின் 28-5-61 தேதி இதழிலும், 4-6-61 தேதி இதழிலும் சோமு அவர்கள் எழுதியுள்ள 'அக்கரைச் சீமை'க் கட்டுரைகளில் முறையே வெளியாகியுள்ள இரண்டு அற்புதமான விஷயங்கள் நம்முடைய சைவ சமயத்தின் இரு ஒப்பற்ற விளக்கங்களோடு மிளிர்கின்றன.

யார்க் நகரத்தின் பழைய மேயர்களுள் ஒருவரான சர் ராபர்ட்பெல்ட் என்பவர் ஆறாறாக ருத்திராக்ஷங்கள் முப்பத்தெட்டால் ஆகிய மாலையொன்றில் ருத்திராக்ஷத்தாலே ஆன சிலுவையைத் தொங்கவிட்டு அணிந்திருந்தார் என்ற உண்மை, 'தென்னாடுடைய சிவனே எந்நாட்டவர்க்கும் இறைவா' என்பதோடு, சுந்தரரின் 'அப்பாலும் அடிச்சார்ந்தார் அடியார்க்கும் அடியேன்' என்ற வார்த்தைகளையும் மெய்யாக்கிவிட்டது.

எடின்பரோ நகரத்தின் ஒரே அம்மையார் விருந்தோம்பற் கலையின் எவரெஸ்டை'யே தொட்டு விட்டார். இறந்துபோன கணவரின் சவத்தையும் காணச் செல்லாமல், இயற்கையாகத் தம் உள்ளத்துப் பொங்கிய துயரத்தைச் சிறிதும் காட்டாமல், வந்த விருந்து வகையாக உண்ண வாடாது உணவு பரிமாறின ஒரே அம்மையார். இந்தியாவில் 1300 ஆண்டுகட்கு முன்னர் அப்பர் அடிகளாகிய விருந்தினரை உண்பிக்கப் பாம்பு கடித்து இறந்த தம் மூத்த புதல்வன் சவத்தை மூடி விட்டு, புன்முறுவல் பூத்த முகத்தோடு உணவூட்ட முயன்ற அந்தணரின் மேம்பட்ட அப்பூதியடிகளின் இணையற்ற தியாகத்தின் எடுத்துக் காட்டாக இவ்விருபதாம் நூற்றாண்டில் விளங்குகிறார். நல்லவர்கள் பெரியவர்கள் எந்த நாட்டிலும் எல்லாக் காலத்திலும் உளர். இவற்றை நமக்கு அளித்த "சைவத் தூதுவர் சோமு" அவர் பேறுடன் நீடூழி வாழ்க!

தஞ்சை
12-7-61

கே. எம். பாலசுப்பிரமணியம்

ஒவ்வொரு வீட்டின் சமையலறையும் அவ் வீட்டின் இருதயம் போன்றது. பக்குவமாக பதார்த்தங்கள் தயாரிப்பதில் கைதேர்ந்த இல்லாள் இல்லத்தின் ராணி என கருதப்படு

# இல்லத்தின் ராணிக்கு இன்றியமையாதது!

இன்றுள் சுதா வனஸ்பதி மற்றும் விமலா சுத்திகரிக்கப்பட்ட தாவர எண்ணெய்—இவற்றின் தரத்தை அறிந்த பெண்மணி குடும்பத்தாரின் திருப்திக்கு எளிதில் பாத்திரமாகிறாள். அவளுடைய ருசிமிக்க சமையல் பெரிதும் போற்றப்படுவதோடு—சுதா மற்றும் விமலா ஸயமான விலைகளில் கிடைப்பதினால்—அவளுடைய சிக்கனமும் மெச்சப்படுகின்றது.



கேரள அரசாங்கத் தயாரிப்பு

**SUDHA** சுதா வனஸ்பதி

**VIMALA** விமலா

சுத்திகரிக்கப்பட்ட தாவர எண்ணெய்

கவர்ன்மெண்ட் ஹைட்ரோஜெனேஷன் பாக்டரி, கோழிக்கோடு

(அரசாங்கத் துறையில் உள்ள வனஸ்பதி பாக்டரி இது ஒன்றே)

GHF-1

# காட்டில் கல்மழை




சாத்பூரா மலைச்சாரலில் வசிக்கும் சில ஆதிவாசிகளைக் காணச் சென்றேன். நானும் வழிகாட்டியும், பஸ்ஸை விட்டு இறங்கிக் குறுக்கு வழியில், ஆதிவாசிகளின் இருப்பிடத்தை நாடி நடந்து சென்றோம். காட்டில் புகுந்து செல்லும்போது திடீரென்று, "கற்கள்" வந்து விழுந்தன. திகைத்துப் போன நாங்கள் சற்று நின்றுவிட்டு மறுபடியும் நடக்க ஆரம்பித்தோம். சிறிது தூரம் சென்றதும், மறுபடியும் சிறிய சிறிய கூழாங் கற்கள் வந்து விழுந்தன. அரசியல்வாதி இல்லாத எனக்கு இந்த அனுபவம் புதிதாக இருந்தாலும், கல்லெறிவது மிருகங்கள் அல்ல, மனிதர்களே என்று தைரியமாக நடந்து சென்றோம். ஏனென்றால் கல்லை எறிந்தாலும் அந்தத் தனிமையான கானகத்தில் எங்களுக்குத் துணையாக எங்களைச் சூழ்ந்து கொண்டு மனிதர்கள் இருக்கிறார்கள் என்ற தைரியம் உண்டாயிற்று. வெகு தூரம் வரையில், பாதையில் தொடர்ந்து கல் விழுந்தாலும், ஒரு கல்லாவது எங்கள் மேல் விழவில்லை. 'எங்கள் கண்களுக்கும் அவர்கள் தெரியாமலே நம்மைத் தொடர்ந்து நமக்குத் துணையாக வருகிறார்கள்' என்று நினைத்துக் கொண்டோம். நாங்கள் அவர்களின் ஊர்களுக்கு அருகில் போகப் போகக் கற்களும் அதிகமாக வந்து விழுந்தன. கடைசிவரையில் எங்களால் அவர்களைக் காண முடியவில்லை.

கடைசியில், ஊரின் அருகில் வந்து சேர்ந்தோம். திடீரென்று புதரின் மறைவிலிருந்து நாலைந்து பேர்கள் வெளியேறி முன்னால் வந்தார்கள். நாங்கள் அவர்களுக்கு வணக்கம் செய்தோம். முதலில் அவர்கள் கோபமாக என்னமோ கேட்டார்கள். என் வழிகாட்டி, அதற்குச் சாந்தமாகவே பதில் சொன்னான். நான் வழிகாட்டியிடம் காட்டுப்பாதையில் கல் வந்து விழுந்த விஷயத்தை அவர்களிடம் கூறும்படி சொன்னேன்.

அதற்கு அந்த ஆதிவாசிகள், "ஓ! அதுவா நாங்கள்தான் எறிந்தோம். உங்கள் தோளில் தொங்கும் பெட்டியைக் கண்டு உங்களை 'அம்மை குத்துகிறவர்' என்று நினைத்துக் கொண்டோம். எப்பொழுதும் அம்மை குத்துகிறவர்கள் வந்தால், தூரத்திலிருந்து கல்லெறிந்து துரத்தி விடுவோம். அவர்களும் ஓடி விடுவார்கள். ஆனால், நீங்கள் அப்படிச் செய்யாததால், நீங்கள் அம்மை குத்துகிறவர் அல்லவென்று தெரிகிறது" என்றனர்.

எங்கள் மீது கல் விழுந்ததற்குக் காரணம் என் தோளில் தொங்கும் பெட்டி என்பதை அறிந்ததும் எனக்குச் சிரிப்புத்தான் வந்தது. அதைப் பற்றியறிய ஆவலாக இருந்த அவர்களுக்கு, அது மனிதர்களையும் காட்சிகளையும் படமாக்கும் காமிராப் பெட்டி என்பதை என்னால் முடிந்த அளவுக்குப் புரிய வைத்து விளக்கினேன். இருந்தாலும் என்னிடமும் அந்தப் பெட்டியின் மீதும் அவர்களுக்கு முழு நம்பிக்கை ஏற்படவில்லை.

அவர்களின் ஊரில் தங்கிய சில நாட்களில், அவர்களைப் பல புகைப்படங்கள் பிடித்தேன். அவர்கள் தங்களைப் படம் பிடித்துக் கொள்ள முதலில் மறுத்தார்கள். என்னிடமிருக்கும் மற்ற மலைவாசிகளின் புகைப்படங்களைக் காட்டி, "இப்படி உங்களையும் படம் பிடிக்கிறேன்" என்று கூறினேன். பிறகுதான் அவர்கள் ஒப்புக் கொண்டார்கள்.

அவர்களைப் படம் பிடித்த அன்றிரவு கூட்டங் கூட்டமாகப் பேசிக் கொண்டார்கள்.

"அவர்கள் நம்மைப் பற்றித்தான் பேசுகிறார்கள். நீங்கள் புகைப்படங்கள் பிடித்தீர்களே அந்த விஷயமாகத்தான் இருக்கும்" என்று வழிகாட்டி என்னிடம் கூறினான். அவர்களின் பேச்சுக்களைச் சிறிது நேரம் கவனித்தேன். பேச்சும் காரசாரமாகத்தான் இருந்தது. சிலர் எங்கள் பக்கமாகவும், சிலர் எங்களுக்கு எதிராகவும் பேசுவதை உணர முடிந்தது. எனக்குக் கலக்கமாக இருந்தது. அதில் அநேகம் பேர்கள் எங்களை எதிர்க்கின்றனர் என்று தெரிந்து கொண்டேன். இரவில் எழுந்து ஓடிவிடலாமென்றாலோ, அந்த இருண்ட காட்டில் எந்த மிருகத்துக்காவது பலியாக வேண்டியதுதான்.

மாலை சுமார் ஆறுமணிக்கு ஏற்பட்ட இந்தச் சச்சரவால் அன்றிரவு ஊரார் எல்லோரும் சுமார் நள்ளிரவு ஒருமணி வரையில் எங்களிடம் பேசவில்லை. அந்நிலையில் எங்களுக்குத் தூக்கமும் வரவில்லை, தூங்காமல் படுத்திருக்கவும் மனம் வரவில்லை. பார்த்தேன். சரி என்று ஒரு பெண்ணிடம் "கொஞ்சம் குடிக்கத் தண்ணீர் வேண்டும்" என்று சைகை காட்டினேன். உடனே பெண்கள் எல்லாரும் சட்டென்று என்னிடமிருந்து தங்கள் முகத்

தைத் திருப்பிக் கொண்டு விட்டார்கள்: இதைக் கண்டதும், இனிச் சும்மா இருக்கக் கூடாது என்று எண்ணிப் பெரியவர் ஒருவரை அழைத்து, "என்ன விஷயம்? ஏன் இந்த மாறுதல்?" என்று கேட்டேன்.

"ஒன்றுமில்லை. நீங்கள் படம் பிடித்தீர்களே, அதைக் காண்பிக்கும்படி கேட்டார்களாம். நீங்கள் முடியாதென்று சொல்லி விட்டீர்களாம். அதற்காக எல்லோரும் உங்கள்மேல் கோபமாக இருக்கிறார்கள். ஏதோ ஒரு படத்தைக் காட்டி, ஏமாற்றி விட்டீர்களாம்" என்று பெரியவர் கூறினார்.

"ஓ! அதுதான் காரணமோ? சரி! நாளைக்குக் காண்பிக்கிறேன்" என்று கூறியபின், எல்லோருடைய முகத்திலும் புன்னகை தவழ்ந்தது. குடிக்கத் தண்ணீரும் கிடைத்தது. அன்றிரவு நான் மட்டும் தூங்கவில்லை. காரணம், எப்படி நாளைக்கு அவர்களுக்கு எடுத்த புகைப்படங்களைக் காட்ட முடியும்? கழுவிய பின் அல்லவா காண்பிக்க முடியும்? நாளைக் காலையில் இவர்களுக்கு என்ன சமாதானம் சொல்வது? இருட்டறையில் பிலிம் கழுவும் விஷயத்தை எப்படி இவர்களுக்கு விளக்குவது என்ற சிந்தனையிலே தூக்கம் வரவில்லை.

விடிந்து வெகு நேரம் வரையில் தூங்கிப் பின் எழுந்தேன். படுக்கையில் உட்கார்ந்த வண்ணமாகவே கடவுளை வணங்கி விட்டுக் கண்ணைத் திறந்தபோது, என் எதிரில் 'சோப்பை'த்தான் முதலில் கண்டேன். கடவுளுக்கு நன்றி கூறினேன்.

பிறகு கொஞ்சம் தண்ணீரைக் கொண்டு வந்தேன். இரவு பேசிய பெரியவரைக் கூப்பிட்டு, "ஐயா! உங்களை எடுத்த படங்களை இப்பொழுது என்னால் காண்பிக்க முடியாது. முதலில் நான் எடுத்த படங்களை மருந்தில் நனைத்துக் கழுவிய பின்தான் காண்பிக்க முடியும். இல்லாமல் அப்படியே எடுத்துக் காட்டினால், எல்லாப் படங்களும் வெள்ளையாக மாறிவிடும். இதோ பாருங்கள்!" என்று கூறி, ஒரு காகிதத்தில் என்னிடமிருக்கும் சோப்பினால் ஒரு படம் வரைந்து "இந்தக் காகிதத்தில் வரைந்த உருவத்தை உங்களால் காண முடிகிறதா?" என்று கேட்டேன். அவர் தெரியவில்லை என்று தலையசைத்தார். பிறகு அந்தக் காகிதத்தைத் தண்ணீரில் நனைத்து எடுத்துக் காண்பித்தேன். அப்போது நான் எழுதிய உருவம் நீர்க் கோடாகக் காகிதத்தில் தெரிந்தது.

"இதைப் போலவே உங்களைப் பிடித்த படங்களையும் மருந்தில் ஊற வைத்து எடுத்துக் காய வைத்தால்தான் படங்களின் உருவங்களைக் காண முடியும்" என்று விளக்கினேன். இதற்குப் பிறகுதான் அவர்கள் என்னுடன் சகஜமாகப் பழகினார்கள்.

நாகரிக உலகின் காற்றுக்கூடப் படாத இத்தகைய ஆதிவாசிகளிடம் சமயோசித புத்தியும், பொறுமையும் உபயோகப் படுத்தி நடந்துகொள்ள வேண்டும். இல்லாவிட்டால் அவர்களின் அன்பையும் நம்பிக்கையையும் நம்மால் பெறமுடியாது. கடைசியில் நான் அங்கிருந்து வரும்போது, "உங்களைப் பிரியவேண்டி இருக்கிறதே!" என்று கூறிக் கண் கலங்கினர், அந்தச் சூதுவாது அறியாத அப்பாவிகளான ஆதிவாசிகள்.




## 34. தீபத் திருநகரங்கள்!

'கடலிலே பாதி கடம்பா குளம்' என்று ஒரு வசனம் திருநெல்வேலி மாவட்டத்தில் வழங்கி வருகிறது. ஸ்விட்ஸர்லாந்து நாட்டிலுள்ள சில மாபெரும் ஏரிகளைப் பார்த்தபோது இந்த வசனமே எனக்கு நினைவு வந்தது.

திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள கடம்பா குளமானது கடலிலே பாதியளவு இருக்கிறது என்று சொன்னால், மான்ட்ரே என்ற எல்லையிலுள்ள ஸ்விட்ஸர்லாந்து ஏரியைக் கடலின் முழு அளவு இருக்கிறது என்றே சொல்லி விடலாம்!

இத்தாலியிலிருந்து ஸ்விட்ஸர்லாந்து சென்று 'மான்ட்ரே' என்ற அழகான ஊரில் தங்கினோம். அன்றிரவு கடல் போன்ற அந்தப் பெரிய ஏரியிலே ஒரு படகுப் பிரயாணம் சென்றோம். ஏரியின் மறு கரையில் சிறு சிறு மலைகள். அந்த மலைகளுக்கு மேலே ஊர்கள்! படகில் செல்லும்போது ஒளி மயமாக விளங்கிய அந்த மலையூர்களின் காட்சி பார்க்கப் பார்க்க வனப்பாக இருந்தது.

ஏரியின் மறு கரையில் ஒரு கோடியிலே புகழ்பெற்ற ஓர் இரவு விடுதி இருக்கிறது. எங்கள் பிரயாணக் குழுவிலே ஏறக்குறைய முப்பது பேர்கள் இருந்தார்கள். எல்லாருக்கும் அந்த விடுதியிலே ஒரு வேடிக்கையான இசை நிகழ்ச்சி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

நாங்கள் எல்லாரும் விடுதியின் பெரிய நடன மண்டபத்தில் கூடினோம். என்னையும் மூன்று ஆங்கிலேய நண்பரையும் தவிர மற்ற எல்லாரும் ஜோடி ஜோடியாக அணி வகுத்து நின்று கொண்டார்கள். இவர்களில் பெரும்பாலோர் சதிபதிகள். மற்றவர்கள் நடனமுறை தெரிந்த நண்பர்கள். ஆணும் பெண்ணும் இருவர் இருவராக அணிவகுத்து நின்றதும், வாத்திய இசை தொடங்கியது. மேனாட்டு முறையிலே கைகோத்து நடனம் ஆட ஆரம்பித்தார்கள். இந்த நடனத்தில் ஒரு விநோதமான ஏற்பாடு இருந்தது. அதாவது ஜோடி ஜோடியாக நின்ற இணைகளிலே ஆடவர் அணிந்திருந்த மேலங்கியான கோட்டைப் பெண்மணிகள் அணிந்து கொண்டு ஆடவரோடு கைகோத்து ஆட வேண்டும். ஆடிக்கொண்டு வரும்போதே 'சட்'டென்று எங்காவது ஒரு கட்டத்தில் வாத்திய இசையை நிறுத்திவிடுவார்கள்! இசை நின்றதோ இல்லையோ, பெண்மணி மளமளவென்று தான் அணிந்திருந்த கோட்டைக் கழற்றி ஆடவரிடம் கொடுப்பாள். அவர் அதை வெகு விரைவில் அணிந்து கொண்டு மறுபடியும் நடனத்தைத் தொடர்ந்து ஆடத் தயாராகிவிட வேண்டும்! அந்த அங்கி மாற்றத்தில், எந்தத் தம்பதிகள் மற்றவர்களைவிடத் தாமதமாக மாற்றுகிறார்களோ அவர்கள் தோற்றவர்கள் என்று கருதப்படுவார்கள்! ''அவுட்'' என்று சொல்லி அந்த இருவரையும் ஆட்டத்திலிருந்து நீக்கி, இந்த வேடிக்கையைப் பார்த்துக் கொண்டிருந்த எங்களோடு உட்கார்த்திவிடுவார்கள். மறுபடியும் நடனம் தொடரும். அப்போது மீண்டும் தன்னுடைய சக ஆடவரின் கோட்டை வாங்கி அணிந்து கொள்வாள் பெண்மணி! ஆட்டம் முன்போல் நடக்கும்! பிறகு இசை நின்றதும் மறுபடியும் பெண்மணிகள் 'விறு விறு'என்று கோட்டைக் கழற்றி ஆடவரிடம் கொடுப்பார்கள். மறுபடியும் கோட்டை வாங்கி அணிந்து கொள்வதில் யார் ஆகக் கடைசியாகத் தாமதித்து விடுகிறார்களோ அந்த ஆடவனும் பெண்ணும் விளையாட்டிலிருந்து அவுட்!

வேடிக்கையாக இருக்கிறதல்லவா? இந்த ஆட்டம் கிட்டத்தட்ட முக்கால் மணி நேரம் நடந்தது. ஒவ்வொரு ஜோடியாக 'அவுட்' ஆகிக்கொண்டே வந்து, கடைசியாக மிஞ்சிய இருவருக்கும் பரிசு கொடுத்தார்கள். அன்றிரவு எங்கள் கோஷ்டியிலே பரிசு பெற்ற இருவரும் அயர்லாந்து தேசத்தைச் சேர்ந்த தம்பதிகள். இந்தப் பரிசைப் பெறுவதற்காக அந்தக் கோஷ்டியிலுள்ள அத்தனை பேரும் பட்ட பாடு இப்பொழுது நினைத்தாலும் சிரிப்பு வருகிறது! இசை வாசித்த வாத்திய கோஷ்டியினர், அங்கங்கே சங்கதிகள் போட்டு, இடையிடையே மூச்சு வாங்குவதற்காக வாத்தியத்தை நிறுத்தியபோதெல்லாம்



பாரிஸ் நகரம்

சங்கீதம் நின்றுவிட்டது என்று தவறாக எண்ணிக் கொண்டு இவர்கள் கோட்டைக் கழற்ற முனைவதும், இசை நிற்காமல் தொடருவதைக் கண்டு மறுபடியும் கைகோத்து ஆட ஆரம்பிப்பதும் வேடிக்கையான காட்சி. கடைசியில் பரிசு பெற்ற அந்த அயர்லாந்துத் தம்பதிகளுக்கு அளிக்கப்பட்ட சிறப்பான உண்டிகளும், அந்த விருந்துபசரிப்பில் மற்றவர்கள் உற்சாகத்தோடு கலந்துகொண்ட விதமும் எனக்கு விந்தையாக இருந்தன.

மேனாட்டு மக்கள் மனத்துக்கு உல்லாசம் கொடுப்பதற்காகவே எத்தனையோ விதத்தில் கேளிக்கைகளைத் திட்டப்படுத்தி வைத்திருக்கிறார்கள்! இவையெல்லாம் நமக்குப் புதுமையாகவும் விநோதமாகவும் இருக்கின்றன!

இந்த நடன விளையாட்டுக்குப் பிறகு இன்னொரு பெரிய விடுதியில் நடந்த ஒரு 'டெலிவிஷன்' நடனத்துக்குச் சென்றிருந்தோம். "பப்பப் பாபப்பா" என்று ஒரு பாட்டுப் பாடினார்கள். சித்தப்பா, பெரியப்பா என்று என் காதில் விழுந்தது இந்தப் பாட்டு. இது போலவே இன்னும் சில விநோதப் பாடல்களும் நடைபெற்றன. மொழியும் ஆடல் முறையும் விநோதமாகப் பட்டாலும் ஒரு முக்கிய விஷயம் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும். நடனம் ஆடுகிறவர்கள், நடனத்தைப் பார்க்கிறவர்கள் என்ற பாகுபாடு இல்லாமல் அங்கங்கே எழுந்து எல்லாரும் நடனத்திலே கலந்து கொள்வதால் இரவு எவ்வளவு நேரமானபோதிலும் சலிப்பின்றி இவ்வகையான கேளிக்கைகளிலேபொழுதைப் போக்குகிறார்கள் அந்த மக்கள்! பெரிய பெரிய பதவிகளிலே இருக்கக் கூடிய மக்களும் கூச்சமின்றி இந்த மாதிரியான உல்லாசங்களிலே கலந்துகொள்வது அந்த நாட்டுப் பழக்கம்.

ஸ்விட்ஸர்லாந்து தேசத்தில் மிகவும் புகழ் வாய்ந்த . தொழில், கடிகாரம் செய்கிற தொழிலாகும். எத்தனை விதமான கைக் கடிகாரங்கள், அலாரம் கடிகாரங்கள், பெரிய கவரொட்டிகள்! எத்தனை விதமான அலங்காரப் பொருள்கள்! மான்ட்ரே என்ற அந்த அழகான ஊரில் உள்ள எழில் அங்காடியில் பகல் முழுதும் சுற்றிப் பார்த்துவிட்டு அங்கிருந்து ஃப்ரான்ஸ் தேசத்தை நோக்கித் திரும்பினோம்.

ஐரோப்பாவிலிருந்து லண்டன் நோக்கித் திரும்பும்போது, ஃப்ரான்ஸ் தேசத்துக்கு மறுபடியும் வந்து 'டிஷோன்' என்ற ஊரில் ஒரு நாள் இரவு தங்கி விட்டு, அங்கிருந்து பாரிஸ் சென்றோம். 'நீலக் கார்' என்று புகழ்பெற்ற பெரிய 'கோச்' வண்டியில், எத்தனையோ வசதியான இருக்கைகளோடு கூடிய சாய்மானங்களில் பிரயாணம் செய்த போதிலும், பாரிஸ் செல்லும் போது எல்லாருக்குமே அலைச்சலின் களைப்பு இருந்தது. இந்த நகரத்தை நோக்கிச் செல்லுகிற நெடுஞ்சாலைகளின் அழகு யாரையும் மலைக்கச் செய்துவிடும். பத்தி பத்திகளாக வரிசை வரிசையாகக் கார்கள் செல்லுகிறஅழகும்,சாலைகளின் விசாலமும், பளபளப்பும், பராமரிப்பும் நடைபாதைகளின்அணிவகுப்பும் மிகநேர்த்தி!

வெனிஸைத் தெப்பத் திரு நகரம் என்றும், ஃப்ளாரன்ஸைக் கலைத் திருநகரம் என்றும் அழைத்தால் பாரிஸைத் தீபத் திருநகரம் என்று சொல்ல வேண்டும்! இந்த நகரம் இரவிலேதான் கண் விழிக்கிறது! எத்தனை ஆயிரம் கண்கள் என்று எண்ணிக் கணக்கெடுக்க முடியாதபடி அத்தனை ஆயிரம் விளக்குகள்! ஒளியிலே குளித்துக் கொண்டு நிற்கிறது பாரிஸ் நகரம்!

பாரிஸ் நகரத்தில் என்ன இருக்கிறது என்று கேட்டால் மிக எளிதாகப் பதில் சொல்லி விடலாம்! யார் யாருக்கு எது எது வேண்டுமோ, அதெல்லாம் இந்த நகரத்திலே இருக்கிறது! உணவிலும், கேளிக்கைகளிலும் நேரத்தைச் செலவழிக்கிற மக்களுக்குப் பாரிஸ் ஓர் உல்லாச புரி! கோவில்களைக் கண்டு தரிசித்துப் புண்ணியம் சம்பாதிக்க விரும்புவோருக்குப் பாரிஸ் ஒரு பழைய ஸ்தலம்! சிற்பங்களையும், சித்திரங்களையும் கண்டு களிக்க விரும்பும் கலையன்பர்களுக்குப் பாரிஸ் ஒரு கலைப் பட்டணம்! நாடகங்கள், நடனங்கள் சங்கீதக் கச்சேரிகள் ஆகியவற்றில் ஆர்வம் உள்ளவர்களுக்குப் பாரிஸ் ஓர் இசையரங்கம்! பெரிய பெரிய மாளிகைகளையும், கட்டடச் சிறப்புக்களையும், வீதிகளையும், அங்காடிகளையும் பார்க்க விரும்புகிறவர்கள் நகரத்தில்சுற்றி வந்துகொண்டேயிருக்கலாம். சரித்திர ஆராய்ச்சியாளர்களுக்கும், ரசிகர்களுக்குமோ என்றால், பாரிஸ் நகரத்தின் காட்சிச் சாலைகள் பார்க்கப் பார்க்கத் திகட்டாத கல்வி நிலையங்கள்! உலக நாடுகள் அனைத்திலிருந்தும் சென்றுள்ள ஆராய்ச்சிக்குரிய பொருள்கள் ஏராளம்!

பாரிஸ் நகரத்தில் என்னை மிகவும் கவர்ந்த ஒரு சிறப்பு, இந்த ஊரில் எல்லா நாட்டு மக்களையும் ஏற்றத் தாழ்வின்றிப் பார்க்கிறோம். கறுப்பு, வெள்ளை, சிவப்பு, மஞ்சள், கருநீலம்—எல்லா நிறத்து மனிதர்களும் பாரிஸ் நகரத்தில் வளைய வருகிறார்கள். அகில உலகமுமே பாரிஸில் சந்திக்கிறது என்று சொல்லி விடலாம்! முக்கியமாக இரவுநேரங்களில் வீதிகளிலே நடந்து சென்றோமானால் மனித நாகரிகத்தின் சீரான போக்கு எப்படியிருக்கிறது, விபரீதமான போக்கு எப்படியிருக்கிறது என்ற இரண்டையும் ஆராய்ச்சிக் கண்ணோடு பார்த்து மதிப்பிடலாம்!

பாரிஸ் நகரத்திலிருந்து புறப்பட்டுப் பெல்ஜியம் வந்து, மறுபடியும் ஆஸ்டெண்ட் விமான நிலயத்திலிருந்து வான ஊர்தியிலே லண்டன் திரும்பினேனும்! ஆறு தேசங்களை ஓய்வு ஒழிவின்றிச் சுற்றிப் பார்த்த களைப்பு எப்படித் தீரப் போகிறது என்று எண்ணிக் கொண்டே திரும்பிய என்னை, முகமலர்ச்சியோடு அழைத்துச் சென்று தமது வீட்டுக்கே கூட்டிக் கொண்டு போனார் பி.பி.ஸி நண்பர் கிருஷ்ண மூர்த்தி.

ஆம்; நான் லண்டனுக்குத் திரும்புவதற்கு ஒரு வாரத்துக்கு முன்புதான், இந்தியாவிலிருந்து அவருடைய குடும்பத்தினர் லண்டன் வந்திருந்தார்கள். புதுக் குடித்தனம் தொடங்கியிருந்தார் நண்பர் கிருஷ்ணமூர்த்தி. நான் இந்தியா புறப்படுவதற்குச் சில நாட்களே இருந்ததால், இந்த முறை அவருடைய வீட்டிலேயே தங்கி, அந்த மேலை நாட்டிலே ஒரு தமிழ்க் குடும்பம் எப்படித் தமிழ் முறையில் வாழ்க்கை நடத்துகிறது என்பதைக் கண்டு களித்தேன். சுற்றுப் பிரயாணத்தின் களைப்பெல்லாம் ஒரு வாரத்தில் தீர்ந்து விட்டது, அவர்களுடைய அன்பிலும் உபசரிப்பிலும்! அந்த உற்சாகத்தில் அயர்லாந்துக்கும் வேல்ஸுக்கும் சென்று சில நாட்கள் சுற்றிப் பார்த்துத் திரும்பினேன்!

அயர்லாந்துப் பிரயாணம், இங்கிலாந்து ஸ்காட்லாந்து முதலிய பிரதேசங்களில் ஏற்பட்ட அனுபவத்தைப் போலவே இருந்தது! ஊர்கள், வீடுகளின் அமைப்பு, மனிதர்களின் நாகரிகம், நகர வசதிகள் எல்லாவற்றிலும் அதிக வித்தியாசம் இல்லை. என்றாலும் அயர்லாந்தில் இருந்தபோது இந்தியப் பண்புக்கும் அந்த மக்களின் பண்புக்கும் உள்ள ஒருசில ஒற்றுமைகளைக் கண்டேன். உழவுத் தொழில், தாவரப் பண்ணைகள், கோழிப் பண்ணைகள், கால் நடைகள் பராமரிப்பு, தெய்வ பக்தி, பழக்க வழக்கங்களில் நல்ல கலகலப்பு, இல்லற முறையில் வயதானவர்களிடம் மதிப்பு, உதவு மனப்பான்மை ஆகிய பண்புகள் அயர்லாந்தில் சிறப்பாக விளங்கக் கண்டேன். 'பெல்பாஸ்ட்' சென்றிருந்தபோது நடந்த ஒரு வேடிக்கையான நிகழ்ச்சி மட்டும் நினைவில் அப்படியே பசுமையாக நிற்கிறது.

லண்டனிலிருந்து நான் 'பெல்பாஸ்ட்' சென்றது விமானம் மூலமாக! அங்கிருந்து சுற்று வட்டாரங்களைச் சென்று பார்ப்பதற்காக லண்டனிலுள்ள அயர்லாந்துச் செய்தித் துறை அதிகாரி மிஸ்டர் நார்த் கட் எல்லா ஏற்பாடுகளும் மிக்க அன்புடன் செய்து கொடுத்திருந்தார். பெல்பாஸ்டில் நான் தங்குவதற்கான விடுதியைத் திட்டப்படுத்தி எனக்கு ஒரு பிரயாணத் திட்டமும் செய்து கொடுத்திருந்தார்கள், பெல்பாஸ்டிலுள்ள செய்தித் துறையினர். நான் குறிப்பிடுகிற வேடிக்கையான நிகழ்ச்சி அந்த ஊருக்குப் போய்ச் சேர்ந்த முதல் நாளே நடந்தது!

என்னுடைய அறையின் கதவுகளைப் பூட்டிக் கொண்டு, உள்ளே இருந்து கடிதங்கள் எழுதிக் கொண்டிருந்தேன். அப்போது இரவு பத்து மணியிருக்கும். அறைக் கதவுகளை யாரோ மெதுவாக விரல்களால் தட்டுவது கேட்டு எழுந்து வந்து கதவைத் திறந்தேன்.

விடுதியின் பணிப் பெண்கள் இருவர் வெளியே நின்றுகொண்டு, "மன்னிக்க வேண்டும். நாங்கள் உள்ளே வரலாமா?" என்று கேட்டார்கள். எனக்கு உடம்பெல்லாம் சில்லிட்டது. அயர்லாந்தின் குளிர்ச்சியினால் இல்லை! ஏதாவது 'ட்ரங்கால்' வந்திருக்கிறதோ என்று எண்ணி உடம்பு பதறியது.

பணிப்பெண்கள் உள்ளே வந்தார்கள். "எங்கள் இருவருக்கும் கைரேகை பார்க்க வேண்டும்!" என்றார்களே பார்க்கலாம். அவசரச் செய்தி ஒன்றுமில்லை என்று தெரிந்து ஒரு தெளிவு உண்டான மறுவினாடியே அவர்களுடைய விசித்திரமான வேண்டுகோளின் விபரீதத்தில் உடம்பு மறுபடியும் பதறியது!

"எனக்கு ரேகை பார்க்கத் தெரியாதே!" என்றேன். அவர்கள் அவநம்பிக்கையோடு சிரித்தார்கள்.

"நீங்கள் இந்தியாவிலிருந்து வருகிறீர்கள் என்பது எங்களுக்குத் தெரியும். மறைக்கப் பார்க்கிறீர்கள்!" என்றார்கள் மறுபடியும்! சிரிப்பது மரியாதைக் குறைவு என்று எண்ணி, பரிதாபமாகப் பார்த்தேன் அவர்களை.

"சென்ற ஆண்டு இந்தியாவிலிருந்து மிஸ்டர் சிங் வந்திருந்தார்! அடடா! யாரும் சொல்ல முடியாத செய்திகளையெல்லாம் ரேகையிலிருந்து சொல்லி விட்டார். அவர் சொன்ன அத்தனையும் நடந்து விட்டது. மேற்கொண்டு தொடர்ச்சியைத் தெரிந்துகொள்ள வேண்டும். தயவு செய்து சொல்லுங்கள். உங்கள் நாடு மிகவும் அன்பு நிரம்பிய நாடு. நீங்கள் எல்லாம் ஆத்ம சக்தி யுள்ளவர்கள். இந்த ஏழைப் பணிப் பெண்களுக்கு இரக்கப்பட வேண்டும்!"

இவ்வாறு மன்றாடினார்கள் இந்த இரண்டு பெண்களும். இந்தியாவின் புகழ் எப்படிக் கைரேகையாக ஓடுகிறது என்பதை ஒரு கணம் நினைத்துப் பார்த்தேன். மறுகணம் "கைகளை நீட்டுங்கள்!" என்றேன் உறுதி நிரம்பிய குரலில்!

மறுநாள் இந்த இரேகை சாஸ்திரிக்கு அசாத்தியமான 'கிராக்கி' ஏற்பட்டிருக்க வேண்டும். ஆனால் அப்படி ஓர் ஆபத்து நேராதவாறு, 'பெல்பாஸ்ட் டெலிகிராப்' என்ற பத்திரிகை கைகொடுத்து உதவியது. மறுநாள் பத்திரிகையில் நான் இங்கிலாந்துக்குச் சென்றதன் நோக்கமும், என்னைப் பற்றிய முழு விவரங்களும் படங்களோடு வெளியானதால், பணிப்பெண்களுக்கு இரகசியம் வெளியாகிவிட்டது. அதோடு என்னுடைய இரேகை சாஸ்திரத்திலிருந்த அத்தனை நம்பிக்கையும் அடியோடு தொலைந்து விட்டது. அதோடு நின்றதா? அந்தப் பணிப் பெண்கள் பேப்பரும் கையுமாக என்னிடம் வந்து, பச்சாத்தாபத்தோடு மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்கள்! ஆனால் நான் ஒப்புக் கொள்ளுவேனா?

"மன்னிப்பதற்கு என்ன இருக்கிறது? நீங்கள் இந்தியாவைப் பற்றி நினைத்தது சரி. நானும் ஓர் இரேகை சாஸ்திரிதான். உண்மையிலேயே நான் உங்களுக்குச் சொன்ன எதிர்கால பலன்கள் அனைத்தும் நிச்சயம் நடக்கும்!" என்றேன். எத்தனை சொல்லியும்

பயனில்லை. அவர்கள் நம்பத் தயாராக இல்லை. என்ன செய்ய!

இந்த வேடிக்கை நிகழ்ச்சி ஒரு புறமிருக்க, அயர்லாந்து நாட்டின் வளமான காட்சிகளும், அந்த மக்களின் அன்பும், இந்தியர்களிடத்தில் அவர்களுக்குள்ள வாஞ்சையும் மரியாதையும் மனத்துக்கு இனிய நினைவுகள். செய்தித் துறை அதிகாரிகளும், பத்திரிகையாளர்களும் நம்முடைய இலக்கியங்களிலும் கலைகளிலும் காட்டிய ஆர்வம் அளவற்றது.

லண்டனுக்குத் திரும்பியதும் இதுபற்றி ட்ரஸ்டின் செயலாளர் மிஸ். ஜாக்ஸனுக்கு எழுதினேன். "நீங்கள் தாய்நாடு திரும்புவதற்கு இன்னும் ஒரு வாரந்தான் இருக்கிறது. இந்த ஊருக்கும் வந்து நான் வசிக்கிற கென்ட் பிரதேசத்தில் இரண்டு நாட்களாவது தங்க வேண்டும். கட்டாயம் வாருங்கள்!" என்று எழுதினார்.

கென்ட் பிரதேசத்தில் 'டன்பிரிட்ஜ் வெல்ஸ்' என்ற ஊர் மிக மிக எழிலான ஒரு கிராமம். ஊருக்குள் நுழைந்ததும், நம் கண் எதிரே பழமையான வீதிகளும் புதிய வீதிகளும் அருகருகே நின்று ஊரின் சரித்திரப் பெருமையையும், நவீன முன்னேற்றத்தையும் ஒருமித்து உணர்த்துகின்றன. நோயாளிகள் மீண்டும் ஆரோக்கியம் பெறுவதற்கு இந்த ஊரின் காற்றும், தண்ணீரும் உகப்பானவை. இங்குள்ள ஒரு சிறு கிணறு திருச்செந்தூரிலுள்ள நாழிக்கிணறுபோல் சிறிய ஓர் ஊற்று. இதன் தண்ணீரில் மருந்துச் சத்து இருக்கிறது என்று வைத்தியர்கள் ஆராய்ந்து கண்டுபிடித்திருக்கிறார்கள். ஆகையால், இந்தக் கிணற்றுக்கு நாலு பக்கத்திலும் சுவர் கட்டி, கிணற்றின் மேலும் மூடி போட்டுப் பூட்டி வைத்திருக்கிறார்கள். கிணற்றுக்கு அருகில் ஒரு பணிப் பெண் காவல் இருக்கிறாள். அவளிடம் ஒரு 'பென்னிக்' காசு கொடுத்தால், நாழிக் கிணற்றிலிருந்து ஒரு குவளைத் தண்ணீர் கோரி ஒரு கண்ணாடித் தம்ளரில் ஊற்றிக் கொடுக்கிறாள். தண்ணீரில் 'பெர்ரஸ் ஆக்ஸைட்' என்ற இரும்புச் சத்து இருப்பதால் குடிப்பதற்கு ஒரு மாதிரியாக இருக்கிறது. ஆனாலும் அதைக் குடித்தால் உடம்புக்கு எத்தனை நலம் ஏற்படும் என்பதை ஒரு சிறு அறிவிப்பாக அச்சிட்டு அங்கே வைத்திருக்கிறார்கள். வனப் பிரதேசத்தில் இந்த ஊற்றுக் கிணறு இருப்பதை முதன் முதலில் லார்ட் நார்த் என்ற பிரபு எப்படிக் கண்டு பிடித்தார் என்பதைப் பற்றியும், பிறகு இது எப்படி இங்கிலாந்தின் பிரபுக்களாலும், அரச குடும்பத்தினராலும் பாதுகாக்கப்பட்டது என்பது குறித்தும் கதை கதையாகச் சொல்லுகிறார்கள். இந்தத் தண்ணீரை விஞ்ஞான முறையில் பரிசோதித்து இதில் எந்த எந்தச் சத்து என்னென்ன அளவில் கலந்திருக்கிறது என்பதையும் கிணற்றுக்கு அருகிலேயே அச்சடித்துத் தொங்க விட்டிருக்கிறார்கள். இருபத்து நான்கு மணி நேரத்தில் இந்தக் கிணற்றிலே ஐயாயிரம் காலன் தண்ணீர் ஊறுகிறது என்று கணக்கெடுத்திருக்கிறார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

தம்முடைய பெயரை வெளியே அறிவிக்க விரும்பாத ஒரு பெரிய மனிதர், 1937-ம் ஆண்டு ஜூன் மாதம் லார்ட் பால்ட்வின் பிரபுவுக்கு இரண்டு லட்சத்து ஐம்பதினாயிரம் பவுன்கள் அனுப்பி, இங்கிலாந்துக்கும் அதற்கு உள்ளிட்ட நாடுகளுக்கும் இடையே நல்லுறவை வளர்ப்பதற்காக அதைப் பயன்படுத்திக் கொள்ளும்படி கேட்டுக் கொண்டாராம்! அந்த நன்கொடையிலிருந்து தோன்றியதே "இம்பீரியல் ரிலேஷன்ஸ் ட்ரஸ்ட்" என்ற நிதி நிலையம். இதன்பிறகு வேறு பல ஆங்கிலேயச் சீமான்களின் உதவியும் ஒத்துழைப்பும் கொண்டு வளர்ந்து, மிஸ் ஜாக்ஸன் அவர்களின் திறமையினால் நன்கு நிர்வகிக்கப்பட்டு விளங்குகிறது இந்த ஸ்தாபனம். என்னைப் போன்று வேறு சில 'காமன்வெல்த்' நாடுகளின் ஒலிபரப்பாளர்களும் இங்கிலாந்துக்குச் சென்றது இந்த நிதி நிர்வாகத் திட்டத்தின்படியே! எனவே, டன்பிரிட்ஜ் வெல்ஸ் சென்று, மிஸ் ஜாக்ஸன் அவர்களுக்கு என்னுடைய நன்றியைச் செலுத்தி விட்டு, அவருடைய ஒப்பற்ற உபசரிப்பிலும் அன்பிலும் ஆங்கிலப் பண்பாட்டின் மெய்யான சீலத்தைக் கண்டு அதை வியந்து பாராட்டி விட்டு, லண்டன் திரும்பினேன். மறுவாரம் அங்கிருந்து தாய்நாடு திரும்புவதற்கான ஏற்பாடுகளில் மூழ்கினேன். அப்போது, கிருஷ்ணமூர்த்தி சொன்னார்: "ஊர் ஞாபகம் வந்து விட்டது என்பது உண்மைதான். ஆனாலும் இந்தியா திரும்புகிற வழியில் கெய்ரோவில் இறங்கி, எகிப்து தேசத்தின் பிரமிட்களைக் கட்டாயம் பார்க்க வேண்டும் நீங்கள்!"

(அடுத்த இதழில் முடியும்)

# ஸ்ரீ வில்லிப்புத்தூர் ஆண்டாள்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

பக்தி பண்ணுவதற்குப் பாவனை அவசியம். அந்தப் பாவனை எத்தனை எத்தனையோ வகையில் அமைதல் கூடும். அப்படிப் பாவனை செய்வதில் நான்கு பாவனைகள் முக்கியமானவை. இறைவனைத் தனியாகப் பாவனை பண்ணிப் பக்தி செலுத்துவது ஒரு முறை. அதுவே வாத்சல்ய பக்தி எனப்படும்; இறைவனை ஆண்டானாகப் பாவனை பண்ணி அவனது தாஸனாக மாறிச் சேவை செய்வது ஒரு முறை. அதுவே தாஸ்ய பக்தி. இறைவனை அருமைத் தோழனாகவே கொண்டு அவனோடு நெருங்கி உறவாடிப் பக்தி பண்ணுவது ஒரு முறை. இதனையே ஸக்ய பக்தி என்பார். எல்லாவற்றுக்கும் மேலாக இறைவனையே காதலனாகப் பாவனை பண்ணி, அவனிடத்தில் காதலைச் செலுத்தி வழிபடுவது. இதனை மதுர பக்தி என்பார். இந்த மதுர பக்தியிலே, பல பக்தர்கள் தமிழ் நாட்டில் இருந்திருக்கிறார்கள். பாடல்கள் பாடித் தங்களது பக்தி அனுபவத்தையெல்லாம் வெளியிட்டிருக்கிறார்கள். என்றாலும் வெறும் பாவனையோடு நிற்காமல், இறைவனும் பரந்தாமனையே காதலனாக வரித்து, அவனையே மணாளனாகப் பெற்றுப் பெருமையுற்றவள் ஆண்டாள். அந்த ஆண்டாள் பிறந்து வளர்ந்த இடம்தான் ஸ்ரீ வில்லிப்புத்தூர். அந்த ஸ்ரீ வில்லிப்புத்தூருக்கே செல்கிறோம் நாம் இன்று.

ஸ்ரீவில்லிப்புத்தூர் தென்காசி விருதுநகர் ரயில் பாதையில் உள்ள ஊர். ஆதலால் ரயிலில் செல்வோர் எளிதாக அவ்வூர் சென்று சேரலாம். மோட்டாரில் மதுரையிலிருந்து திருமங்கலம் வந்து அங்கிருந்து ராஜபாளையம் செல்லும் ரோட்டில் சென்றாலும் சென்று சேரலாம். அந்தத் தலத்துக்கு நான்கு பக்கங்களிலிருந்தும் நல்ல ரோடும் பஸ் வசதியும் உண்டு. ஊர் சென்று சேர்ந்ததும், கோயிலுக்குச் செல்லுமுன் இந்த ஊருக்கு வில்லிப்புத்தூர் என்று பெயர் வருவானேன் என்பதைக் கொஞ்சம் தெரிந்து கொள்ளலாமே. ஒருகாலத்தில் இந்த வட்டாரம் முழுதும் செண்பக வனமாக இருந்திருக்கிறது. அங்கு இரண்டு முனிவர்கள், இறைவனது சாபத்தால் வேடர்களாகப் பிறந்து வாழ்கிறார்கள். இவர்களில் ஒருவன் பெயர் வில்லி, இன்னொருவர் பெயர் கண்டன். இளையவனான கண்டன் வேட்டைக்குச் சென்ற இடத்தில் ஒரு புலியால் கொல்லப்படுகிறான். இதனால் வில்லி மனம் உடைந்து வாழும் போது, பரந்தாமன் அவனது கனவில் தோன்றி, 'நீ இந்தக்காட்டை அழித்து இதனை ஒரு நகரம் ஆக்கு. பாண்டிய, சோழ நாடுகளிலுள்ள அந்தணர்களைக் கொண்டு வந்து குடியேற்று' என்று சொல்கிறார். அதன்படியே வில்லி காடு திருத்தி நாடாக்கிய நகரம்தான் வில்லிப்புத்தூர். அந்த வில்லிப்புத்தூரில் கோயில் கொண்டிருப்பவர்தான் வடபத்திரசாயி, ஆண்டாள் முதலியோர். கோயில் அமைப்பிலே முன் நிற்பது வடபத்திரசயனர் கோயில்தான். பெரிய கோபுரம் இருப்பதும் அந்தக் கோயிலுக்குத்தான் என்றாலும் இத்தலத்தில் முக்கியத்துவம் எல்லாம் ஆண்டாள் திருக்கோயிலுக்குத்தான். ஆதலால் நாமும் முதலில் ஆண்டாள் கோயிலுக்கே. சென்று ஆண்டாளை வணங்கிவிட்டு, அதன்பின் வடபத்திர சயனரை வணங்கலாம். ஆண்டாள் கோயில் ரோட்டை விட்டுக் கொஞ்சம் உள்ளடங்கியே இருக்கும். அந்தக் கோயில் வாயிலின் முதல் முதல் இருப்பது பந்தல் மண்டபம். இதனைக் கடந்து உள்ளே சென்றால் இடது கைப் பக்கம் கல்யாண மண்டபம். இதற்கு அடுத்தாற்போல் இடைநிலைக் கோபுரம். இதனைக் கடந்துதான் ஒரு வெளிப் பிராகாரம் இருக்கும். இங்குதான் ராமனுக்கும் ஸ்ரீனிவாசனுக்கும் சந்நிதிகள் இருக்கின்றன. வேறு முக்கியமாகப் பார்க்க வேண்டியவை ஒன்றும் இல்லை. ஆதலால் இடைநிலைக் கோபுரத்தை அடுத்த துவஜ ஸ்தம்பத்தின் வழி



ஆண்டாள்

யாகவே கோயில் உட்பிராகாரத்துக்குச் செல்லலாம். இந்தத் துவஜஸ்தம்ப மண்டபத்திலே தான் பல சிற்ப வடிவங்கள் இருக்கின்றன. அவற்றை யெல்லாம் பின்னும் பார்த்துக் கொள்ளலாம். உள் பிராகாரம் சென்றதும் நம் முன் இருப்பது மாதவிப் பந்தல். அந்தப் பிராகாரத்தைச் சுற்றினால் அங்கு நூற்றெட்டுத் திருப்பதிகளில் உள்ள பெருமாள் நமக்குக் காட்சி கொடுப்பார். ஆம்! சுவரில் உள்ள சித்திர வடிவில்தான். இரண்டு வருஷங்களுக்கு முன் அந்தச் சித்திரங்களைப் புதுப்பித்து எழுதத் திட்டமிட்டு வேலை நடந்து கொண்டிருந்தது. பூர்த்தியாகி விட்டதோ என்னவோ? மாதவிப் பந்தல், மணிமண்டபம், ஆண்டாள் சக்கிரவாரக் குறடு எல்லாம் கடந்துதான் அர்த்த மண்டபம் வரவேண்டும். அதற்கு அடுத்ததே கருவறை. அந்தக் கருவறையினுள்ளேதான் ஆண்டாள், ரங்கமன்னார், பெரிய திருவடி மூவரும் சேவை சாதிக்கிறார்கள். நடுவில் ரங்கமன்னார் அவரது வலப்பக்கத்தில் ஆண்டாள், இடப்பக்கத்தில் பெரிய திருவடியாம் கருடாழ்வார் எழுந்தருளி யிருக்கிறார்கள். ரங்கநாதர் திருமணக் கோலத்தோடு கூடிய ராஜகோலத்தில்ராஜகோபாலனுகக் கையில் செங்கோல் ஏந்தி நிற்கிறார். ஆண்டாளோ சர்வாலங்கார பூஷிதையாய் அவர் பக்கலில் நிற்கிறாள். மற்றக் கோயில்களில் எல்லாம் பெருமாளுக்கு எதிரே நின்று சேவை சாதிக்கிற கருடாழ்வார் இங்கு மட்டும் ரங்கநாதர் பக்கத்திலேயே ஏகாஸனமாய் எழுந்தருளி யிருப்பானேன் என்று கேட்கத் தோன்றும் நமக்கு. ஆண்டாளை மணம் புரிய வந்த ரங்கநாதரை அவசரம் அவசரமாகக் காற்றினும் கடுகிக் கொண்டு வந்து சேர்த்தவர் அல்லவா அவர். அதற்காகவே இந்த நிலை வாய்த்திருக்கிறது அவருக்கும். மூல விக்கிரகங்களுக்கு முன்னாலே தங்க ஸ்தாபன கோபால மஞ்சத்தில் உற்சவ மூர்த்திகளாகவும் மூவரும் எழுந்தருளி யிருக்கிறார்கள். இந்த மூர்த்திகளைத் தரிசிக்கும் போதே, ஆண்டாள் பிரபாவத்தையும் கொஞ்சம் தெரிந்து கொள்ளலாம் நாம்.

ஸ்ரீவில்லிபுத்தூரில் விஷ்ணுசித்தர் என்னும் பெரியாழ்வார் திருத்துழாய் கைங்கரியம் செய்து வந்திருக்கிறார். ஒரு நாள் அவர் நந்தவனத்தில் திருத்துழாய் மரத்தடியில் ஒரு பெண் குழந்தை கிடப்பதைக் கண்டு எடுத்து வந்து அவரது மனைவியான விரஜையிடம் கொடுக்கிறார். குழந்தைக்குக் கோதை என்று பெயரிட்டு அன்போடு வளர்க்கின்றனர். கோதையும் தன் தோழியருடன் எல்லாம் களித்து விளையாடி மகிழ்கிறாள். ஒரு நாள் விஷ்ணு சித்தர் பெருமாளுக்கு என்று தொடுத்து வைத்திருந்த பூமாலையைத் தன் கூந்தலிலே சூட்டி அழகு பார்க்கிறாள். பின்னர் மாலையைக் களைந்து வைத்து விடுகிறாள். அவள் சூடிக் களைந்த மாலையே பின்னர் பெருமாளுக்கு அணியப்பட்டிருக்கிறது. இப்படியே நடக்கிறது பலநாட்களும். ஒரு நாள் விஷ்ணு சித்தர் கோதை மாலை சூடி அழகு பார்க்கும் போது கண்டு விடுகிறார். இதற்காக மகளைக் கோபித்து விட்டு அன்று பெருமாளுக்கு மாலை சாத்தாமலேயே இருந்து விடுகிறார். ஆனால் பெருமாளோ இரவில் அவரது கனவில் தோன்றி, 'கோதை சூடிக் கொடுத்த மாலைகளே எனக்கு உவந்த மாலைகள், அவளே என் ஆண்டாள்' என்று சொல்கிறார். விஷ்ணு சித்தராம் பெரியாழ்வாருக்கோ ஒரே மகிழ்ச்சி. அது முதல் ஆண்டாள் சூடிக் கொடுத்த மாலைகளையே பெருமாளுக்கு அணிவிக்கிறார். இப்படி பூமாலை சூடிக் கொடுத்த சுடர்க்கொடி பாமாலைகள் சாத்தவும் முற்படுகிறாள். வளர்ந்து பருவ மங்கையானதும் தன் காதலனைப் பெருமாளையே வரிக்கிறாள். 'மாலிருஞ்சோலை எம்மாயற்கு அல்லால் மற்றொருவர்க்கு என்னைப் பேச ஒட்டேன்' என்று சாதிக்கிறாள். 'மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத முத்துடைத் தாமம் நிரை தாழ்ந்த பந்தற்கீழ், மைத்துனன் நம்பி மதுசூதன் வந்து கைத்தலம் பற்றி' மணமாலை சூட்டக் கனக் காண்கிறாள். இப்படி இவள் சொல்லிக் கொண்டிருக்கிறாளே என்று பெரியாழ்வார் கவலையடைய ஆழ்வாரது கனவிலே திருவரங்கச் செல்வனே வந்து கோதையைத் திருவரங்கம் அழைத்து வர வேண்டும் என்றும் அங்கு தாமே அவளைத் திருமணம் செய்து கொள்வதாகவும் சொல்கிறார். ஆண்டாளை மணிப் பல்லக்கிலே ஏற்றி வாத்திய கோஷங்களுடன் திருவரங்கத்துக்கு அழைத்துச் செல்கிறார் பெரியாழ்வார். 'சூடிக் கொடுத்த சுடர்க்கொடி வந்தாள், கரும்பார் குழல் கோதை வந்தாள், திருப்பாவை பாடிய செல்வி வந்தாள், தென்னரங்கம் தொழு தேசியள் வந்தாள்' என்று அவளை எதிர் கொண்டு அழைக்கின்றனர். சூடிக் கொடுத்த நாச்சியாரும் எல்லோரும் காணும்படி அழ


ரதி

# மிக அழகிய...

## அடர்ந்த நீண்ட ஒளியுள்ள கூந்தல்!

பிரதிதினமும் கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் தடவி வந்தால், கூந்தலானது அடர்த்தியாகவும், நீளமாகவும் வளருவதுடன் இளமையின் ஒளியுடனும், அற்புத ஜ்வலிப்புடன் விளங்குவதைக் கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள். அது உங்கள் கூந்தலின் இயற்கை அழகை எடுத்துக்காட்டி எல்லோரையும் பிரமிக்கச்செய்யும்.

மகிழ்ச்சியூட்டும் நறுமணம்—
உங்கள் குடும்பம்
முழுவதும் விரும்புவது!




**கால்கேட்**
**பெர்பியூம்டு**
**காஸ்டர்**
**ஹேர் ஆயில்**

**எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப்படுத்துங்கள்!**

ECHO/G/3

---

# "மூலம் தீராத வினையன்று"

## பாதிக்கப்பட்டவர்கள் கூறுகிறார்கள்-புதிய நிவாரணி அரிப்பு, எரிச்சல் மற்றும் வலியிலிருந்து குணமளிப்பதுடன் மூலத்தையும் சுருக்குகிறது.



உலகப் பிரசித்தமான ஆராய்ச்சிக் கூடமொன்று மூலத்தைச் சுருக்குவதுடன், வலியற்றமுறையில் குணப்படுத்தக்கூடிய புதிய பொருள் ஒன்றைக் கண்டு பிடித்திருக்கிறது. அப்பொருள் சில நிமிடங்களிலேயே அரிப்பையும் வலியையும் போக்குவதுடன் பாதிக்கப்பட்ட தசைநார்களையும் குணப்படுத்துகிறது. உண்மையாகவே, சுருக்கமும் ஏற்படுகிறது. டாக்டர்களின் மேற்பார்வையில் நடத்தப்பட்ட பரிசோதனைகளும்–10, 20 வருஷங்களான கேஸ்களில்கூட–இதை நிரூபித்தன. மேலும் வியக்கத்தக்கதென்னவென்றால், இந்த நல்ல முன்னேற்றம் பல மாதங்களுக்கு நீடித்திருந்தது. உண்மையாகவே பாதிக்கப்பட்டவர்கள், இதனால் அடைந்த பூரணக் குணத்தைக் கண்டு வியந்து "மூலம் தீராத வினையன்று" எனக்கூறினார்கள். இவ்வளவு பலன்களும், எந்த விதமான போதை தரும் மருந்துகளோ, அல்லது துவர்ப்பு பொருள்களோ, மயக்க மருந்துகளோ, உபயோகிக்காமல் அடையப் பெற்றவை. இரகசியம் என்னவென்றால், இந்த விசேஷமான புதிய நிவாரணி (பயோ-டைன்*) புண்ணான இடத்தைச் சீக்கிரத்திலேயே குணப்படுத்தி, மறுபடியும், ஆரோக்கியமான தசை துரிதமாக வளர உதவுகிறது. இப்பொருள் களிம்பு வடிவத்தில் ப்ரிப்பரேஷன் H* என்ற பெயரில் கிடைக்கிறது. உண்மையாகவே மூலத்தைச் சுருக்குவதுடன்–ப்ரிப்பரேஷன் H*, வழவழப்பாக்குவதன் மூலம் கழிவுப் பொருள் வெளியேறும் போதுள்ள வலியைக் குறைக்கிறது. அது மூலத்தின் முக்கிய காரணமான இரணம் பரவுவதையும் தடுக்கிறது.

இப்பொழுது இந்தியாவில் தயாரிப்பாளர்கள்:
**ஜாப்ரே மானேர்ஸ் & கம்பெனி லிட்.**
டிரேட்மார்க் உரிமையாளர்கள்:
**வைட்ஹால் லாபரட்டரீஸ், U.S.A.**
**ப்ரிப்பரேஷன் H***
**களிம்பு**
* டிரேட் மார்க்.

கிய மணவாளன் திருமுன்பு சென்று அவன் திருவடி வருடி அவனுடன் ஒன்றறக் கலக்கிறான். இதைப் பார்த்த பெரியாழ்வார், 'ஒரு மகள் தன்னை உடையேன், உலகம் நிறைந்த புகழால் திருமகள் போல் வளர்த்தேன், அவளைச் செங்கண்மால்தான் கொண்டு போனான்' என்று துக்கித்துப் பெருமாளிடம், கோதையைப் பலர் அறிய ஸ்ரீ வில்லிபுத்தூரிலேயே திருமணம் செய்தருள வேண்டும் என்று வேண்ட, அழகிய மணவாளனும் அப்படியே செய்கிறேன் என்று பங்குனி உத்திரத்தன்று கருடாழ்வான்மீது கோதையுடன் வந்து திருமணம் செய்து கொள்கிறான். அன்று முதல் ரங்கமன்னார் கோதையுடனும் பெரிய திருவடியுடனும் ஸ்ரீ வில்லிபுத்தூரிலேயே கோயில் கொண்டு விடுகிறார். பெரியாழ்வாரும், ஆண்டாளும் பாடிய பாசுரங்களே நாலாயிரப் பிரபந்தத்தில் முதலிடம் பெறுவன. ஆண்டாள் கோயில் விமானம் தங்கத் தகடு போர்த்தப் பெற்றது: இதில் ஆண்டாள் திருப்பாவைப் பாடல்களை விளக்க வல்ல திரு உருவங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஆண்டாளைத் தரிசித்து விட்டுத் திரும்பும்போது துவஜஸ்தம்ப மண்டபத்திலும், அதை அடுத்த மண்டபத்திலும் உள்ள தூண்களில் ரதிமன்மதன், ராமன் லக்ஷ்மணன், சரஸ்வதி முதலியோரது சிலாவடிவங்களைக் காணலாம். நல்ல நாயக்கர் காலத்து சிற்ப வடிவங்கள்.

ஆண்டாள் கோயிலை விட்டு வெளியே வந்து வடகிழக்கு நோக்கி நடந்தே வடபத்திர சயனர் கோயிலுக்கு வரவேணும். அங்கு போகும் வழியில் ஆண்டாள் பிறந்த நந்தவனம் இருக்கிறது. அங்குள்ள கோயிலில் ஆண்டாளது திருவுருவம் சிலைவடிவில் தனியே இருக்கிறது. இங்குள்ள ஆண்டாளையும் தரிசித்து விட்டு வடக்கு நோக்கி நடந்தால் வடபத்திர சயனர் கோயில் வருவோம். கோயில் வாயிலைப் பெரியதொரு கோபுரம் அணி செய்கிறது. இந்தக் கோபுர வாயிலை அடுத்து வடபுறம் தெற்கே பார்க்கப் பெரியாழ்வார் சந்நிதி இருக்கிறது. பெரியாழ்வார் அவதரித்த இடம் ஆதலால் சாத்துமுறை சிறப்பாக நடக்கிறது.

இந்தச் சந்நிதியை அடுத்து மேற்கேயுள்ளது பெரிய பெருமாள் சந்நிதி. இக்கோயிலில் இரண்டு தட்டுகள். கீழே நரசிங்கப் பெருமாள் சந்நிதி. இச்சந்நிதிக்குக் கிழக்கே வடபுறம் பன்னிரு ஆழ்வார்களும் தசாவதார மூர்த்திகளும் எழுந்தருளியிருக்கிறார்கள். தென்பக்கமாக மேல் மாடிக்குப் போகப் படிகள் இருக்கின்றன. அவைகளில் ஏறிச்சென்றால் முதலில் நாம் சேருவது கோபால விலாசம். அதனை அடுத்து விமல ஆகிருதி விமானத்தின் கீழே உள்ள கருவறையில் வட ஆல விருட்சத்துக்கு அடியில், ஆதிசேஷன்மீது பூதேவியும் ஸ்ரீதேவியும் அடிவருட வடபத்திரசயனர் சயனித்திருக்கிறார். அருணன், பிருகு, மார்க்கண்டேயன் எல்லாம் அங்கே இருக்கிறார்கள். இங்குள்ள அர்த்த மண்டபத்தில் சக்கரத்தாழ்வார், கண்ணன், வீதியாளவருவார், வில்லிபுத்தூர் உறைவார், அல்லல் தவிர்த்த பிரான் முதலியோர் உற்சவ மூர்த்திகளாக எழுந்தருளியிருக்கிறார்கள். இந்த வடபத்திர சயனர் கோயில்தான் ஆதிக்கோயில். ஆண்டாள் கோயில் பின்னால் எழுந்ததே.

பெரியாழ்வாரும் ஆண்டாளும் பலப்பல பாசுரங்கள் பாடி இருந்தாலும் வில்லிபுத்தூரரைப் பற்றிப் பாடிய பாடல்கள் இரண்டே இரண்டுதான்.

மற்றைய ஆழ்வார்கள் இந்த வடபத்திர சயனனை மங்களாசாஸனம் செய்ததாகத் தெரியவில்லை.

ஆண்டாள் திருக்கோயிலில் ஆடிப்பூர உற்சவமே பெரிய திருவிழா. அதில்தான் தேரோட்டம் எல்லாம். பங்குனியில் நடக்கும் திருக்கல்யாண உற்சவமும் சிறப்பானதே. இந்த நாச்சியார்கோயிலைச் சேர்ந்த சுற்றுக் கோயில்கள் ஒன்பது.

பெரியாழ்வாரும் ஆண்டாளும் கி. பி. எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்கள். ஆண்டாள் கோயில் கருப்பக்கிரஹம், அர்த்த மண்டபம், மகாமண்டபம் முதலியவைகளைச் சுந்தரத்தோளுடைய மாவலி வாணாதிராயர் கட்டினார் என்று கோயிலின் தெற்குச் சுவரில் உள்ள கல்வெட்டு கூறுகிறது. இவரே சுந்தரத் தோள் நல்லூர் என்ற சொக்கனேந்தல் கிராமத்தை நாச்சியாருக்கு மானியமாக விட்டிருக்கிறார். இரண்டு கோயில்களும் பாண்டிய மன்னர்களால் பரிபாலிக்கப்பட்டு வந்திருக்கின்றன. வடபத்திர சயனர் கோயில் ஜடா வர்மன் என்ற திரிபுவன சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் குலசேகர தேவர் என்பவரால் கட்டப்பட்டிருக்கிறது.

இராமானுஜருக்கும் இந்தக் கோயிலுக்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டு. இராமானுஜர் இத்தலத்துக்கு எழுந்தருளியபோது, நூறு தடா நிறைந்த அக்கார அடிசிலை மாலிருஞ்சோலை சுந்தரராஜனுக்குப் படைக்கச் சொன்னபடி படைத்த தன் அண்ணா வருகின்றார் என்று ஏழடி முன் நடந்து எதிர்கொண்டு அழைத்திருக்கிறாள் ஆண்டாள். அது முதல் இராமானுஜரைக் 'கோயில் அண்ணன்' என்றே அழைத்திருக்கிறார்கள். கம்பர் இத்தலத்துக்கு வந்திருக்கிறார். ஆண்டாளுக்குச் சூடகம் என்ற தலைக்கணியை வழங்கி யிருக்கிறார். திருமலை நாயக்கரும் இக்கோயில் திருப்பணியில் பங்கு பெற்றிருக்கிறார். அவரது சிலை ஆண்டாள் கோயிலில் சுக்கிரவாரக் குறட்டில் ஒரு கம்பத்தில் இருக்கிறது.

கோதையையும் பெரியாழ்வாரையும் பற்றிப் பின்வந்தவர்கள் பாடிய பாடல்கள் அனந்தம். அவைகளில் கோதையைப் பற்றி உய்யக் கொண்டார் பாடிய பாடல் பிரசித்தம்.

அன்னவயல் புதுவை
  ஆண்டாள் அரங்கற்கு
பன்னு திருப்பாவை
  பல்பதியம், —இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள்
  நற்பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு

என்பது பாடல். நாமும் பெருமாளுக்குப் பூமாலையும், நமக்குப் பாமாலையும் பாடிக் கொடுத்த சூடிக் கொடுத்த சுடர்க்கொடியை வாழ்த்தி வணங்கி ஊர் திரும்பலாம்.




## மாயன் வாக்கு

ஸ்ரீ ஏ. எஸ். பி. ஐயர் பகவத்கீதையின் முக்கியமான கருத்துக்களை இந்நூலில் எளிய தமிழ் நடையில் குழந்தைகளுக்குக் கதை சொல்லுவது போல் மனத்தில் பதியும்படி விளங்க வைக்கிறார். கிழக்கிந்தியக் கம்பெனியார் முதன் முதலில் கீதையை ஆங்கிலத்தில் வெளியிட்டபோது வாரன் ஹேஸ்டிங்ஸ் "ஆங்கில ஆட்சி இந்தியாவை விட்டு மறைந்துபோன பின்பு, இந்தியா நமக்கு அளித்த செல்வமும் சக்தியும் மறந்துபோன பின்பும் இந்தக் கீதை நீடித்து நிற்கும்" என்று கூறினார்.

ஏ. எஸ். பி. ஐயர் எத்தனையோ நூல்கள் எழுதியிருந்தாலும், எழுதுபவர் கௌரவத்துடன் விஷய கௌரவமும் இதில் மிகுந்து நிற்பதால் இந்நூலுக்கு மற்ற நூல்களைக் காட்டிலும் மதிப்பு அதிகமுண்டு. அவர் எழுதும் பாணிக்குப் பின் வரும் உதாரணத்தைக் கவனிக்கலாம்:

'இடுக்கண் வரும்போது சோர்வடையாதே: பலவீனமோ, உள்ளக்குலைவோ, பேடிமையோ இருத்தல் ஆகாது.' சோதனைக்காலம் ஏற்படும்போது இமயத்தைப்போல் உறுதியாக இருந்து 'எல்லாம் பகவானுக்கே அர்ப்பணம்' எனச் செயல்புரிய வேண்டும். கைகேயியின் வரம் காரணமாகத் தம் தந்தை பெருந்துயரில் மூழ்கியபோது இராமர் துளியும் உறுதி குலையாமல் அவள் சொற்படி வனவாசம் ஏற்று, பட்டம் பதவி, சொத்து சுதந்திரம் எல்லாவற்றையும் துறந்து இன்முகத்துடன் காட்டுக்குச் சீதா லட்சுமணர்களுடன் ஏகினார். தன்னை இராவணன் அபகரித்தபோதும் சீதை தன் கற்பினாலே தன்னைக் காத்து அவனை எதிர்த்து நின்று வெற்றிபெற்றாள். சாவித்திரியும், யமன் தன் கணவன் உயிரைக் கவர்ந்து செல்லும்போது அரும் பாடுபட்டு யமனிடமிருந்து பதியை மீட்டாள். கண்ணனும் காளியன் என்னும் கொடிய பாம்பு தன்னைச் சுற்றி வளைத்து விஷமூச்சினால் திணற வைக்கும் நிலையில் கூடச் சோர்வடைய வில்லை; அதனுடன் போராடி வென்று அதன் தலைமேல் நின்றான். மகாவிஷ்ணு வாமனன் வடிவில் மூன்றடி மண் கேட்டார்; மூன்றாம் அடிக்கு வேண்டிய மண் கொடுக்க இயலாதிருந்த நிலையிலும் மகாபலி நிலை கலங்கவில்லை. தன்னையே பகவானுக்கு அர்ப்பணம் செய்து அழியாக் கீர்த்தியும் பெரும் பதமும் அடைந்தான். அர்ச்சுனன் மகன் அபிமன்யு பேராபத்தில் சிக்கியபோது, வீரமாகப் போர் புரிந்து மடிந்து அழியாப் புகழ் பெற்றான்.'

இம்மாதிரி இராமாயணம் பாரதம் பாகவதம் ஆகியவற்றிலிருந்தும், பல ஆங்கில நூல்களிலிருந்தும், இஸ்லாம், கிறிஸ்தவ மதம் புத்த மதம் முதலியவற்றிலிருந்தும் பொருத்தமான பல மேற்கோள்களும், உலகம்போற்றும் உத்தமர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளும், உபதேச மொழிகளும் ஒவ்வொரு பக்கத்திலும் காணப்படுகின்றன. கீதைக்கு இது ஓர் அரிய பிரவேச நூலாகவும் சிந்தனைப் பொக்கிஷமாகவும் அமைகிறது. —"அன்னு"

பிரசுரம்: அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை-4. விலை: ரூ. 2—25.

## குஹாவதார ரஹஸ்யம்

கலியுகத்தில் பிரத்தியட்ச தெய்வமாய் விளங்கும் குகப்பெருமானின் அவதார ரகசியம், சொரூபம், திருவிளையாடல்கள் ஆகியவற்றைத் தக்க ஆதாரங்களுடன் எளிய நடையில் திருவனந்தபுரம் வை. குருஸ்வாமி சாஸ்திரிகள் வெளியிட்டுள்ளார். பார்வதி திருமணம், நவ வீரர்களின் உற்பத்தி, குகனது பால லீலைகள், சூரபத்மன் முதலியவர்களை வென்றது, வள்ளி தேவயானை கல்யாணம் முதலிய வரலாறுகள் ஸ்காந்த புராண மேற்கோள்களுடன் இந்நூலில் விளக்கப்படுகின்றன. மற்றப் புராணங்களிலும் குகனைப் பற்றிக் கூறும் பகுதிகளை எடுத்துக் காட்டி ஆசிரியர் இரகசிய அர்த்தங்களை விளக்கியிருக்கிறார். சுப்ரமணிய புஜங்கம், ஸ்காந்த ஸ்தோத்ர சூர்ணிகை, வாமதேவர் செய்த முகஸ்துதி, மார்க்கண்டேயர் செய்த கார்த்திகேய ஸ்தோத்திரம் ஆகியவை அர்த்தத்துடன் நூல் முடிவில் இணைக்கப்பட்டுள்ளன.

பாரதீய வித்யாபவன ஸ்ரீ டி. ஏ. வெங்கடேச தீக்ஷிதரும், திருப்புகழ்மணி ஸ்ரீ டி. எம். கிருஷ்ணஸ்வாமி ஐயரும் எழுதிய முன்னுரைகள் நூலுக்கு ஆசி கூறுகின்றன.

குஹாவதார ரஹஸ்யம்: வேதாந்தப் பேராசிரியர் வை. குருஸ்வாமி சாஸ்திரி; பிரசுரம்: அரசாங்க ஸம்ஸ்கிருதக் கல்லூரி, திருவனந்தபுரம். விலை குறிப்பிடப்படவில்லை.

Printed & Published by R. Ananthana rayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor, T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon



நாளொரு மேனியாய்

சரும எழில் மேம்பாடு

புதிய ரெக்ஸோனு துணையோடு



ரெக்ஸோனு சோப்பின் மிருதுவான நுரையில் அடங்கியுள்ளது கேடில்-எழிலூட்டும் பற்பல எண்ணெய்கள் இணைந்த விசேஷத் தைலமான கேடில் சருமத்தினூடே சென்று, அதை மென்மையுடனும், மழமழப்பாகவும் மிளிரச் செய்து....உங்கள் மேனி வனப்பை ஓங்கச் செய்கிறது. எடுப்பான நறுமணத்தினுல் உங்களை மணிக்கணக்கில் புது மலர்ச்சியுடனிருக்கச் செய்கிறது. உங்கள் அன்றுட அழகுசாதனத்துக்குகந்தது ரெக்ஸோனு.






புதிய மேலுறை, புதிய வடிவழகு, புதிய பச்சை வர்ணம் ஆகியவற்றோடு கூடிய புதிய ரெக்ஸோனுவை நீங்கள் விரும்புவீர்!

புதிய ரெக்ஸோனு—
உங்கள் சருமத்திற்கு அனுகுணமானது

R.P.170-X52 TM